# வெண்மையின் புதிய நிறம்
# உஜாலா




**உஜாலா**

உஜாலாவின் துரித செயல்திறன் தண்ணீரில் உடனடியாக கரைகிறது மற்றும் துணிகளின் மீது ஆழமாக செயல்பட்டு பளபளக்கும் வெண்மையை சீராக தருகிறது. துணிகளை மீண்டும் துவைக்கும் போது உடனடியாக அழுக்குடன் வெளியே தள்ளப்பட்டு விடப்படுகிறது. உஜாலாவை திரும்ப உபயோகிக்கும் போது புதுப்பித்த வெளிச்சம் பரவுகிறது. ஓரல்-டாக்ஸிஸிடி, சரும அரிப்பு ஆகிய டெஸ்டுகளில் தீங்கற்றது மற்றும் சருமத்திற்கு ஹானியற்றது என சர்ட்டிபிகேட் பெற்ற விஞ்ஞான ரீதியான தயாரிப்பு ஆகும் உஜாலா.

எல்லாவற்றிற்கும் மேல், ஜோதி லேபாரட்டரீஸின் தயாரிப்பு அல்லவா உஜாலா!

**உஜாலா**

A Product of  JYOTHY LABORATORIES, Mumbai.





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 99
## முடிவுகள்

ஆயிரக்கணக்கான வாசக எழுத்தாளர்கள் கலந்து கொண்டு சிறப்பித்த இவ்வாண்டு சிறுகதைப் போட்டிக்கு, எழுத்தாளர்கள் சா. கந்தசாமி, திருப்பூர் கிருஷ்ணன், சீதாலட்சுமி விஸ்வநாத் ஆகியோர் நடுவர்களாக இருந்தனர்.
இவர்களுடன் கல்கி ஆசிரியரும் இணைந்து, இறுதிச் சுற்றுக் கதைகளைப் பரிசீலித்ததில் கீழ்க்கண்ட சிறுகதைகள் பரிசுக்குரியனவாகத் தேர்வாயின:

### முதல் பரிசு : ரூ. 5000

ஈனத் தொழில்

இரா. கண்ணன் (எ) கிருஷ்ணசாமி
சி.எண். 1059,
இரண்டாம் தொகுதி, மத்திய சிறை
பாளையங்கோட்டை.

### (இரண்டு) இரண்டாம் பரிசுகள் : தலா ரூ. 3000

நடைமுறைகள்

வி. ராஜன் (ஜானகிராஜன்)
132/D135B, பிரிமியர் மில்ஸ் (A)
Opp. பூலாங்கிணறு (அஞ்சல்)
உடுமலைப்பேட்டை தாலுகா
கோவை - 642 122.

நதி

காஞ்சனா தாமோதரன்
1708, Church Point Court,
Virginia Beach,
VA 23455. USA.

### மூன்றாவது பரிசு : ரூ. 2000

செய்யாமல் செய்த உதவி

ஜெயஸ்ரீ ராஜ்
B/5, துவாரகேஷ் நகர்,
நாஹூர், முலுண்ட் மேற்கு,
மும்பை - 400 080.


• சா. கந்தசாமி


• திருப்பூர் கிருஷ்ணன்


• சீதாலட்சுமி

● முதல் பரிசுக்கதை இந்த இதழில் வெளியாகிறது.
● பிரசுரத்துக்குத் தேர்வான பிற கதைகளின் பட்டியல் அடுத்த இதழில்.
● பரிசு பெற்றோருக்கு வாழ்த்துகள். கலந்து கொண்ட அனைவருக்கும் நன்றி.

— ஆசிரியர்

# விடுக்கும் மரம்

அற்புதங்கள் நிறைந்த
ஒரு நாள்
எனக்கு வாய்த்தது.

காத்திருக்க அவசியமற்று
குறித்த நேரத்தில்
காலியாய் வந்தது பஸ்.

எனக்குப் பிடித்த
ஜன்னலோர இருக்கை.

சிடுசிடுக்காமல்
சிரித்த முகத்துடன்
வாலிப கண்டக்டர்.

இறுக்கமான முகத்துடன்
கணவனும் –
சிரித்து விடாத
மனைவியும் –
எரிச்சலை உமிழ்கிற
எத்தனையோ முகங்களும் –
காணக்கிடைக்கவில்லை
கடைசி வரை.

கடைசி நிறுத்தம் வரை
நிரப்பப் படாமலேயே
இருந்தது
ஊனமுற்றோர் முதியோருக்கான
இருக்கை.

கடைசியில்
முகத்திலறைந்தது
படிக்கட்டின் மேற்புறம்
ஒட்டியிருந்த
காணாமல் போன
குழந்தையொன்றின்
படம்.

– பாலு சத்யா





நின்று கொண்டிருந்தனர் பலர்
பேருந்து வரவிற்காக

கூட்டத்தில் சிலர்
வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

கூட்டத்தில் சிலர்
யாருடனோ பேசிக் கொண்டிருந்தனர்

கூட்டத்தில் சிலர்
கவலையுடன் பொறுமையின்றிக் காத்திருந்தனர்.

வருமானத்திற்காக ஆட்டோக்களும் இருந்தன

விவரமறிந்த பிச்சைக்காரர்கள்
பிச்சை கேட்டுக் கொண்டிருந்தனர்.

ஒவ்வொன்றாய் பேருந்துகள் வரத் துவங்க
ஏறத்தெரியாமல் பயணிகள் தவித்தனர்.

ஊதிய பேருந்து தள்ளாடித் தள்ளாடிப் போயிற்று
மூச்சுத் திணறுவதுபோல் அதன் இரைச்சல் ஒலி.

ஏறமுடியாமல்
ஏமாற்றமடைந்த பயணிகள் பெருமூச்சு விட்டனர்

காலம் காலமாய் அவர்கள் காத்திருக்கின்றனர்
ஆசைகள் கிட்டினாலும்
பயணம் தொடராமலில்லை.

— அழகியசிங்கர்

# காத்திருப்பு

புதிய பகுதி

# மறுபிறவி

சூர்யா ரெக்கார்டிங் தியேட்டர், "உஷ்..." படத்துக்கான ஒரு பாடல் பதிவுக்குத் தயாரா கிக் கொண்டிருந்தது. அன்றைய பாடலைப் பாடுவதற்காக வந்திறங்கிய பாடகியைக் கண் டதும் பலரது விழிகள் வியப்பால் விரிந்தன.

"இவரா? இனி பாடவே முடியாது என்று கருதப்பட்ட இவரா இன்று பாடப் போகி றார்?" என்று அவரை ஆச்சரியத்துடன் பார்த் தன.

பாட வந்தவர் வேறு யாருமல்ல; 'சின்னச் சின்ன ஆசை' புகழ் மின்மினி!

ஆச்சரியத்துக்குக் காரணம், திடீரென்று வந்த ஒரு நோயால் பாடும் சக்தியை இழந்து விட்டிருந்த மின்மினி, மீண்டும் பாட வரு கிறார் என்பதே!

வியப்புற்ற விழிகளுக்குப் புன்னகையுடன் பதில் கூறிச் சென்ற மின்மினிக்கு மைக் முன்பு நின்றதும் கண்ணீர் பொங்கியது. சும்மாவா...? ஐந்து ஆண்டுப் போராட்டத்துக்குப் பிறகல் லவா இந்த வாய்ப்பு கிடைத்துள்ளது?

பெருகி வரும் கண்ணீரை அடக்கி, "தூங் காது, விழிகள் தூங்காது" என்னும் பாடலைப் பாடி முடித்தார். இசையுலகில் திரும்பி வர அவர் பட்ட கஷ்டங்கள் கொஞ்சமல்ல!

மீரா படத்தில் வரும் 'லவ்வுன்னா லவ்வு' பாடல் மூலம் மின்மினியைத் திரையுலகில் அறிமுகம் செய்து வைத்தவர் இளையராஜா.

இதன் பிறகு நூற்றுக்கணக்கான பாடல் களைப் பாடியபோதிலும் மின்மினியைப் புகழின் உச்சியில் ஏற் றிய பாடல், 'சின்னச் சின்ன ஆசை'. ஆனால் ஓயாமல் பாடிக் கொண்டிருந்த இவரது தொண்டை திடீ ரென்று ஒருநாள் ஓய் வெடுத்துக் கொண் டது.

93-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் ஒரு நாள் காலை படுக் கையை விட்டு எழுந்த மின்மினிக்கு, சோர்வாக இருப்ப தாகத் தோன்றியது. கொஞ்ச நேரத்தில் எல்லாம் சரியாகி விடும் என்று நினைத்தவர், முன்தினம் ரெக்கார்ட் செய்யப்பட்ட ஒரு பாடலை ஹம் செய்ய முயன்றார். ஊஹூம்! அவர் நாக்கு அசையவே இல்லை. பேசவே முடியாமல் தவித்தார். அவ்வளவுதான்... வாழ்க்கையே இருண்டு போனது மின்மினிக்கு.

ஊரில் உள்ள சிறந்த டாக்டர்களையெல் லாம் பார்த்தார். மருந்துகளைக் கொடுத்த டாக்டர்கள் மூன்று மாதம் எதுவும் பேசாமல் 'வாய்ஸ் டெஸ்ட்' எடுத்தால் எல்லாம் சரியாகி விடும் என்று கூறினார்கள். ஆனால் மூன்று மாதத்துக்குப் பிறகும் நிலைமையில் எந்த மாற்றமும் இல்லை.

இருப்பினும் மனம் தளரவில்லை அவர். தந்தை கொடுத்த நம்பிக்கையோடும், மாறாத தன்னம்பிக்கையுடனும் குரல்வளத்துக்காகப் போராடி '94ல் மீண்டு வந்தார்.

'கருத்தம்மா'தான் ரீ-என்ட்ரி. ஆனால் இந்த வெற்றி நீண்ட நாள் நீடிக்கவில்லை. ஒரு சில நாட்களிலேயே மீண்டும் அவர் குரல் பாதிக்கப்பட்டது. பேசும் சக்தி வந்தாலும், அவரது பாடும் ஆற்றல் பாதிக்கப்பட்டது. சினிமாவில் மீண்டும் மின்மினி பாடுவது இனி நடக்காத கதைதான் என்று பரவலாகப் பேசப் பட்டது.

தம் மகளின் வெற்றிப் பயணம் மீண்டும் தடைபட்டதைத் தொடர்ந்து, மின்மினியின் தந்தை ஜோசப்புக்கு நெஞ்சு வலி வந்தது. மகளை நினைத்துக் கலங்கியவாறே கடந்த ஆண்டு உயிரை விட்டார்!

தந்தையின் மரணம் ஒருபுறம், பாட முடி யாத துக்கம் ஒருபுறம் என்று சோதனைகள் வந்தபோதிலும் கலங்காத மின்மினி, பிரச் னைகளைத் துணிந்து சமாளித்தார். கணவரின் உதவியுடன் போராடிய அவருக்குத் தற்போது பழைய குரல் மீண்டும் கிடைத்துள்ளது! சமீ பத்தில் 'உஷ்...' எனும் படத்துக்காகப் பின் னணி பாடியுள்ளார்.

"ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது. பல கட்டங்களில் மீண்டும் பாட முடியாதோ என்ற கவலை எனக்கு ஏற்பட்டிருந்தது. சிறிய வயதிலேயே நல்ல புகழை ஏற்படுத்திக் கொடுத்து, இப்படி திடீரென்று பாட முடி யாமல் செய்து விட்டாயே இறைவா என்று பல நாட்கள் கலங்கியுள்ளேன். இருப்பினும் நம்பிக்கையை விடாமல் இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டு, சிகிச்சையைத் தொடர்ந்து கொண்டிருந்தேன். கடைசியில் ஒருவழியாக என் பழைய குரல் வந்து விட்

டது. நீண்ட நாட்களாக என்னிடம் இல்லாமல் இருந்த உயிர் இப்போது திரும்ப வந்து விட்டதைப் போல உணர்கிறேன்!'' - நெகிழ்ந்து பேசுகிறார்.

இந்தப் போராட்டத்துக்குப் பக்கபலமாக நின்றது மின்மினியின் குடும்பம்தான்!

''என் குடும்பத்தார் இல்லாவிட்டால் நான் இந்த நிலையை மீண்டும் அடைந்திருக்கவே முடியாது! ஆரம்பத்தில் எனக்கு நம்பிக்கை கூறி, துணைநின்றவர் அப்பா. ஆனால் பாவம், நான் மீண்டும் சினிமாவில் பாடுவதைக் கேட்க முடியாமல் கடந்த ஆண்டு அவர் மரணமடைந்தார். அப்பா எனக்குத் தந்த அருமையான பரிசு, என் கணவர், ஜாய் மேத்யூ. அவர் துபாயில் உள்ள ஒரு பள்ளியில் ஸ்போர்ட் ஆசிரியராக உள்ளார். மருத்துவர்களுடனும் கடவுளுடனும் நான் நடத்திய போராட்டத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் ஜாய்மேத்யூ துணை நின்றார். இதற்காகப் பல மாதங்கள் வேலைக்குச் செல்லாமல் என்னுடனேயே தங்கியிருந்தார்!



''குடும்பத்தினர் செய்த உதவியைப் பற்றிக் கூறும்போது மனோ அண்ணாவைப் பற்றியும் (பாடகர் மனோ) சொல்லாமல் இருக்க முடியாது. பலரும் என்னை மறந்து விட்ட நிலையில் சென்னையில் தனியாகத் தவித்துக் கொண்டிருந்த என் குடும்பத்துக்கு மனோவும் அவரது குடும்பத்தினரும் செய்த உதவியை எந்நாளும் மறக்க முடியாது. நான் உடைந்து போகும் ஒவ்வொரு முறையும் என்னைத் தேற்றி ஆறுதல் கூறியது அவரும் அவர் குடும்பத்தினரும்தான்!''

''உங்கள் குரல் பாதிக்கப்பட்டதற்கு அப்படி என்ன காரணம்?''

''அது என்னவென்று இன்னும் சரியாகத் தெரியவில்லை. ஒவ்வொரு டாக்டரும் ஒவ்வொரு காரணம் கூறினார்கள். பல மருந்துகளைக் கொடுத்தார்கள். கடைசியில் கொச்சியைச் சேர்ந்த நந்தகுமார் என்ற டாக்டரின் சிகிச்சையால் பழைய குரல் எனக்குத் திரும்ப வந்துள்ளது!''

மின்மினி இப்போது மிக உற்சாகமாக இருக்கிறார். அடுத்த ரவுண்டில் அசத்தும் நம்பிக்கை அவரது பேச்சில் வெட்டவெளிச்சமாகத் தெரிகிறது.

— பி. எம். கதிர்

படம் : ஸ்ரீஹரி

எந்த ஓர் ஒளிப்படத்திலும்
அடங்கி விடுவதில்லை
அது காட்டும் காட்சிகள்.
எல்லைகளற்று
விரிந்து கொண்டேயிருக்கும்
ஒவ்வொன்றின் வீரியமும்
நதிக்கரை மரம்
நீருடன் விளையாடும்.
நிழலசைத்து
மரத்தின் கீழ் —
உதிர்ந்து பொலபொலக்கும்
வெண்ணிறக் கல்லறைக்குள்
புரண்டு படுக்கும்
இறுக்கம் குலைந்த எலும்புக் கூடு.
ஓச்சுவதற்கு
எந்த அதிகாரமும் இல்லாத
பதியின் முன்
முக்காடிட்டு
குனிந்து நிற்கும்
'பத்னி'யின் மௌனம்.
பின்புறக் கோட்டையில்
எப்போதோ ஒலித்த
அரசனின் அதிகாரக் குரல்
எதிரொலி அடங்கியும்
பறந்து கொண்டிருக்கலாம்
வௌவால்களாய்.
நதியின் மறுபுறம் பார்க்க
அடங்காத ஆசை —
அதுகாட்டும்
வானத்திலும் நகரும் மேகத்திலும்
தீர்ந்து போகாமல்
திசைகளை முட்டும்
மாடுமேய்க்கும் சிறுவனின்
கைத்தடி.
கோபியர்சூழ
மயிலிறகு செருகிய தலையுடன்
கண்கள் செருக
புல்லாங்குழல் இசைக்கும்
கிருஷ்ணனைக் கனவுகாணும்.
எந்த மாட்டின் கழுத்தில்
பிணைப்பது என்று
கயிறு பார்த்து
கால் மடங்கி அமர்ந்திருப்பான்
கல்லறைமேல் சிறுவன்.

— நா.வே. அருள்.



# தேர்தல் மேடை

— புதிய பகுதி —

## பழங்கணக்கு — வைகோ.



*1977 : முதல் தடவையாக, தி.மு.க. சார்பில் ராஜ்யசபா எம்.பி. ஆனார்.*

*1983 : மறுபடியும் தி.மு.க. சார்பில் ராஜ்யசபா எம்.பி.*

*1989 : மூன்றாவது தடவையாக தி.மு.க. சார்பில் ராஜ்யசபா எம்.பி.*

*1989 : சிவகாசியில் லோக் சபாவுக்குப் போட்டியிட்டு காளிமுத்து (அ.தி.மு.க.)விடம் தோல்வி*

*1996 : சிவகாசி - சி.பி.ஐ. கட்சியின் அழகர்சாமியிடம் தோல்வி*

*1998 : மறுபடி சிவகாசி, அழகர்சாமி. ஆனால் வெற்றி.*

*1999 : ?*

## அட, அப்படியா?

மத்திய பிரதேசம் ரேவா பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிட்டு 1966, 1989 என்று இரண்டு தடவைகளும் ஜெயித்து எம்.பி. ஆனவர் ஜமுனா பிரசாத் சாஸ்திரி. ஒரு விஷயம். இவர் பார்வை இழந்தவர்.

தமிழக பா.ஜ.க. துணைத் தலைவராக இருந்த டாக்டர் மைத்ரேயன், அ.தி.மு.க.வில் சேர்ந்து விட்டார். ''தென் சென்னை எம்.பி. சீட் கிடைக்கும் என்று தானே கட்சி மாறினீர்கள்?'' என்று அவரிடம் கேட்டபோது சொன்னார் :

''96-ம் வருடத் தேர்தலில், பா.ஜ.க. தனித்து போட்டியிட்டபோதே எனக்கு 34,000 வாக்குகள் கிடைத்தன. 98-ம் வருடத் தேர்தலில், அ.தி.மு.க.வுடன் பா.ஜ.க. கூட்டணி அமைய ஒருவிதத்தில் நான்தான் காரணம். ஆனால், எனக்கு சீட் தரக்கூடாது என்பதற்காகவே, தேர்தலில் போட்டியிட விருப்பமில்லாமல் இருந்த ஜனா கிருஷ்ணமூர்த்தியை தென் சென்னையில் வேட்பாளராக நிறுத்தினார்கள். தமிழக பா.ஜ.க. தலைவர்களின் போக்கு பிடிக்காமல்தான் நான் பா.ஜ.க.விலிருந்து விலகி, அ.தி.மு.க.வில் சேர்ந்தேன். அ.தி.மு.க.வில் தென் சென்னை சீட் தருவதாக எனக்கு வாக்குறுதி எதும் தரப்படவில்லை. எனக்கு சீட் கொடுத்தால், போட்டியிடுவேன். தராவிட்டால் கவலைப்பட மாட்டேன். கட்சி யாரை வேட்பாளராக நிறுத்துகிறதோ, அவரது வெற்றிக்கு உழைப்பேன்.''



• மைத்ரேயன்

**ஹைக்கூ கார்னர் :**

**தேர்தல்**

கையிலே மை
காதிலே பூ.

பிரபல ஓவியர் எம்.எஃப். உசைன் மத்திய அரசால், ராஜ்யசபை உறுப்பினராக நியமனம் செய்யப்பட்டார். 29.7.86 அன்று எம்.பி.யாக, முதல் நாள் பாராளுமன்றத்துக்குள் நுழைந்தார். அன்று, தாம் கண்ட சில காட்சிகளைச் சித்திரங்களாய்த் தீட்டினார். அதிலிருந்து சில சாம்பிள்கள்.

• உசைன்

## வாக்குச்சாவடி '99

இந்திய வாக்காளர்கள் எப்படி வாக்களித்துள்ளனர்? தேர்தல்களின்போது என்னென்ன பிரச்னைகளைப் பிரதானமாக வைத்து வாக்குக் கேட்டார்கள் வேட்பாளர்கள்? அரசியல் கட்சிகளின் தேர்தல் அறிக்கைகளின் சாராம்சங்கள் என்ன? இது போன்ற அநேக கேள்விகளுக்கும் விளக்கம் கிடைக்கும்படியாக ஆங்கிலத்தில் சில புத்தகங்கள் வெளிவந்திருக்கின்றன. ஆனால் தமிழில் இதுபோன்ற முயற்சிகளில் நம் பதிப்பாளர்கள் ஏனோ அதிக அக்கறை காட்டுவதில்லை. சமையல், ஜோதிடம், ஆன்மீகம், லேட்டஸ்டாக வாஸ்து. இதுதான் இன்றைய சாய்ஸ். நூலக ஆர்டர்கள்தான் இவர்களது ஒரே குறிக்கோள். ரொம்பத் தீவிரமாக விசாரித்துப் பார்த்ததில், மணிமேகலை பிரசுரத்தில் ஒரே ஒரு புத்தகம் வந்திருப்பது தெரியவந்தது. தலைப்பு : 'இந்தியர்கள் எப்படி வாக்களிக்கின்றனர்?' பண்டரிநாதன் என்பவர் தொகுத்துள்ள இந்தப் புத்தகத்தில் அகில இந்திய அளவில் 1952-ஆம் ஆண்டில் நடந்த பொதுத் தேர்தல் முதல் 1991-ம் வருடத்துப் பொதுத் தேர்தல் வரை விவரங்கள் உள்ளன. பிற்சேர்க்கையாக 96-ம் வருடப் பொதுத் தேர்தல். முப்பத்து மூணு ரூபாய் விலை! '96ல் போட்ட புத்தகம்.

– இந்தப் பகுதிக்கு வாசகர்களும் சுவையான பழைய/புதிய தேர்தல் துணுக்குகளை அனுப்பலாம்! – தகுந்த ஆதாரத்துடன்.

## பெரியவங்க சொல்றாங்க:

**இந்த வாரம்: சோ.**

"மக்கள் மனத்தில் என்ன இருக்கிறது என்று என்னால், இப்போது சொல்ல முடியவில்லை. ஆனால், எப்படி இருக்க வேண்டும் என்று சொல்ல முடியும். தி.மு.க., பா.ஜ.க., ம.தி.மு.க., பா.ம.க. கூட்டணி எல்லா இடங்களிலும் ஜெயிக்க வேண்டும். தமிழகத்தின் இத்தகைய தேர்தல் முடிவு பா.ஜ.க. கூட்டணி ஆட்சி அமையப் பெரும் உதவியாக இருக்கும். இந்தத் தேர்தலில், மத்தியில் பா.ஜ.க. கூட்டணி ஆட்சி அமைக்கும் வாய்ப்பு பிரகாசமாக உள்ளது."



# 'வரி' போட்ட கலைஞர்!

**திரைப்படத்துக்குப் பாடலெழுதும்போது, வரிகளுக்குப் பின்னால் நேர்ந்த சில சுவையான விஷயங்களை, சில கவிஞர்கள் சொல்கிறார்கள்:**



• மு. மேத்தா

**நா. முத்துக்குமார்:**

இயக்குனர் சீமானின் 'வீரநடை' படத்தில் வரும் 'முத்து முத்தா பூத்திருக்கும்' என்ற பாடலே என் முதல் பாடல். கதாநாயகி தனக்குப் பிடித்தவற்றைப் பட்டியலிடும் சூழல் அது.

"புத்தகத்தைப் போலே...
இறக்கை விரித்தாடும்
பட்டாம்பூச்சி புடிச்சிருக்கு
கைப்பிடி நீண்ட
குடை போல...
பனைமரம் புடிச்சிருக்கு
காதல் தோல்விதானோ...
யாரறியக் கூடும்
ஆட்டுத்தாடி புடிச்சிருக்கு."

என நிறைய வரிகள் ஒரு ஹைக்கூவின் அடர்த்தியுடன் அப்பாடலில் இடம் பெற்றிருந்தாலும், எனக்குப் பிடித்த, என்னை மிகவும் பாதித்த வரியாக,

"நட்சத்திரக் கால் பதிக்கும்
வாத்துக் கூட்டம் புடிச்சிருக்கு" என்ற வரியைச் சொல்வேன்.

இந்த வரியின் நீள அகலங்களுக்குப் பின்னால், எனது பால்யம் புதைந்துள்ளது. என் சொந்த ஊர் காஞ்சிபுரம் அருகேயுள்ள கன்னிகாபுரம் என்ற கிராமம். எங்கள் வீட்டிற்குப் பின்புறம் கண்ணைகி விரித்த கலைந்த கூந்தலாய், வேகவதி ஆறு ஓடிக் கொண்டிருக்கும். அதன் கரைகளில், தண்ணீர் முகச்சவரம் செய்த சரளைக் கற்கள், கூழாங்கற்களாய் மாறி நிரம்பியிருக்கும். இந்த ஆற்றங்கரைக்கு மேய்ச்சலுக்காகப் பக்கத்து கிராமத்திலிருந்து கூட்டம் கூட்டமாக வாத்துகளை அழைத்து வருவார்கள். ஆஹா, வாத்துகள்! அசைந்து அசைந்து கால் தடங்களில் விண்மீன்களை விதைக்கும் வித்தைகள் தெரிந்த வாத்துகள். அப்போதைய எங்களின் பொழுதுபோக்கு, நீரற்ற மணல்வெளியில் வாத்துகள் விட்டுச் சென்ற நட்சத்திரக் கால்பதிவை, அழிக்காமல் பின் தொடர்வதாகவே இருந்தது.

**பிறைசூடன்:**

ரஜினிகாந்த் நடித்த 'பணக்காரன்' படத்துக்காகப் பாட்டெழுதச் சொல்லி இளையராஜா ஒரு மெட்டு கொடுத்திருந்தார். திடீரென்று ஒருநாள் கூப்பிட்டு 'இன்னிக்கு மத்யானம் இரண்டு மணிக்கு ரிக்கார்டிங் இருக்கு. பாட்டோட வந்துடு' என்றார். அப்போது மணி பன்னிரண்டு! எனக்கு மெட்டு ஞாபகமில்லை. மெட்டு வீட்டிலிருந்தது. சாலிகிராமத்திலிருந்து வீட்டுக்கு வந்து அதைக் கேட்டுவிட்டுப் பாட்டை எழுத வேண்டும். ஒரு ஆட்டோவைப் பிடித்துக் கொண்டு தி.நகரில் இருக்கும் என் வீட்டுக்கு வந்தேன்.

வீடு பூட்டியிருந்தது! கீழே வந்து அக்கம் பக்கத்தில் விசாரித்ததில், என் குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்று ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போயிருப்பதாகச் சொன்னார்கள். அங்கே போனேன். குழந்தைக்கு டிரிப் ஏறிக் கொண்டிருந்தது. என் மனைவி என்னைப் பார்த்ததும் சத்தம் போட்டு அழ ஆரம்பித்து விட்டாள். ஒரு நர்ஸ் வந்து, 'இதென்ன? சத்த நியூசென்ஸா இருக்கு. சைலன்ஸ்' என்றார்! நான் கடவுள் மேல் பாரத்தைப் போட்டுட்டு சாவியை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்து மெட்டைக் கேட்டுப் பாட்டு எழுதிக் கொடுத்தேன். அந்தப் பாடல்:

''சைலன்ஸ்! காதல் செய்யும் நேரம் இது".

மு. மேத்தா:

'சூர்யவம்சம்' படத்தில் 'நட்சத்திர ஜன்னலில் வானம் எட்டிப் பார்க்குது' என்ற பாடல் எழுதும் போது நேர்ந்த சுவையான சம்பவத்தைச் சொல்லலாம்.

பாட்டுக்கான சூழலை இயக்குநர் விக்கிரமன் அழகாக விளக்கினார். 'அப்பாவி இளைஞன் ஒருவனை ஒரு பெண் அலட்சியப் படுத்துகிறாள். இன்னொரு பெண் அவனைக் கைப்பிடித்து வாழ்க்கையில் உயர்ந்த மனிதனாக்குகிறாள்'. இந்தக் கதையை விளக்கிவிட்டு விக்கிரமன், "இந்தக் கதைச் சூழல் முழுக்க உங்கள் பாடல் வரிகளிலேயே படம் பிடிக்கப் போகிறோம். தன்னம்பிக்கையோடு ஒரு குடும்பம் தலை நிமிர்வதை நீங்கள் வார்த்தைகளில் படம் பிடிக்க வேண்டும்'' என்று கூறினார்.

"நட்சத்திர ஜன்னலில்
வானம் எட்டிப் பார்க்குது,
சிறகை விரித்துப் பறப்போம்
நம் உறவில் உலகை அளப்போம்.
விளையாடலாம் நிலாவிலே
நிழல் மூழ்குமோ தண்ணீரிலே
வானைப் புரட்டிப் போடு
புது வாழ்வின் கீதம் பாடு"

என்ற பல்லவியுடன் நான் வேறு இரண்டு பல்லவிகளும் எழுதியிருந்தேன்.

சரணத்தில்,

"சித்திரங்களைப் பாடச் சொல்லலாம்
தென்றலை அஞ்சல் ஒன்று போடச் சொல்லலாம்
புத்தகங்களில் முத்தெடுக்கலாம்
பொன்னாடை இமயத்திற்குப் போர்த்திவிடலாம்"

என்று எழுதியிருந்தேன்.


• பிறைசூடன்

பாடல் பதிவாகிக் கொண்டிருந்தபோது, விக்கிரமன் ''பாடல் வரிகளெல்லாம் அற்புதமாக அமைந்துள்ளன'' என்று என்னைப் பாராட்டினார்.

அவரிடம் நான், "இதிலிருக்கும் எல்லா வரிகளும் என்னுடையவை. ஒருவரி மட்டும் இன்னொருவரிடமிருந்து இரவல் வாங்கியது" என்றேன்.

"அப்படியா, எந்த வரி?" என்று கேட்டார்.

"பொன்னாடை இமயத்திற்குப் போர்த்தி விடலாம் என்ற வரி மட்டும் என்னுடையதல்ல" என்றேன்.

சிரித்தபடி, "யாருடைய வரி?" என்று கேட்டார்.

"அவர் நாட்டுக்கே வரிபோடுவார். என் பாட்டிற்குள்ளும் ஒரு வரி போட்டிருக்கிறார். அவர் கோட்டையிலும் இருப்பார். கோபாலபுரத்திலும் இருப்பார்" என்று விடுகதை போட்டேன்.

"கலைஞரா" என்று சிரித்தார் விக்கிரமன்.

"ஆம். திருக்குறளுக்கு கலைஞர் உரை எழுதும்போது, முன்னுரையில் வெகு அடக்கத்துடன் இவ்வாறு குறிப்பிடுவார். 'திருக்குறளுக்கு நான் உரை எழுதுவதா? இது எத்தனை கடினமான முயற்சி! இமயத்திற்குப் பொன்னாடை போர்த்துவது போன்றதல்லவா இது. மனிதனுக்குப் பொன்னாடை போர்த்தலாம். மலைக்குப் பொன்னாடை போர்த்த முடியுமா' - இந்தக் கருத்தும், புதுமையான கற்பனையும் என் மனத்தில் அப்படியே பதிந்து போய் விட்டது. என்னை அறியாமல் பாடலிலும் அது இடம் பெற்று விட்டது. உண்மையில் இந்த வரிகளுக்கு உரிமையாளர் கலைஞர்தான்" என்றேன்.

விக்கிரமன் மகிழ்ச்சியோடு கூறினார்: "பரவாயில்லை. திருவள்ளுவரைக் கலைஞர் மூலம் தெரிந்து கொள்கிறோம். கலைஞரை உங்கள் மூலம் தெரிந்து கொள்கிறோம்."

— பாலு

• முத்துக்குமார்





**கா**ர் வந்து நின்னவுடனேயே நாலைஞ்சி பேரு ஓடியாந்தாங்க.

"மாடத்தி வீடுதானே? காரு அங்கன போவாது! இருங்க, நா அவுகள வரச் சொல்லுதேன்"ன்னாரு ஒரு பெரியவரு.

காருல மூணுபேரு வந்திருந்தாங்க. அதுல கொஞ்சம் 'டிப்டாப்'பாயிருந்தவர் "வேண்டாம்! நாங்க அவங்கள வீட்டுல போய்ப் பார்க்கிறோம்"ன்னு சொல்லிட்டு, மூணு பேரும் தெருவுல இறங்கி நடந்தாங்க.

நடுத்தெருவுல சாக்கடை தேங்கி, 'குளமா'யிருந்தது! அந்தப் பக்கம் தாண்டுறதுக்கு நடுவுல ரெண்டிடத்துல 'கல்லு' போட்டிருந்தாக. அந்தப் பக்கம் கொஞ்சந் தள்ளி ஏழெட்டுப் பேரு 'செத்த' மாட்டை அறுத்துக் கூறு போட்டுக்கிட்டிருந்தாங்க. மாடு 'செத்து' கொஞ்சம்

# ஈனத் தொழில்



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதை போட்டி – முதல் பரிசுக்கதை

**இரா. கண்ணன்**

நேரமாயிருக்கணும்! லேசா 'நாத்த' மெடுத்தது!

அவுக மாடத்தி குடிசைகிட்ட போய்ச் சேரவும் 'அரவம்' கேட்டு மாடத்தியும், சௌந்திரராகப் பயலும் வெளியே வரச் சரியாயிருந்தது.

'டிப்டாப்'பான ஆளு சௌந்திரராகப் பய கையைப் புடிச்சுக் குலுக்கினாரு! பெறவு மாடத்தி பக்கம் திரும்பி, "ஒங்க பிள்ளை தானேம்மா?"ன்னாரு.

மாடத்தி, 'ஆமாங்க சாமி'ன்னா.

"ஒங்களத்தாம்மா மொதல்ல பாராட்டணும்!" – சொல்லிக்கிட்டு மாடத்தியைப் பார்த்து "வணக்கம்மா"ன்னுட்டு கையெடுத்துக் கும்பிட்டாரு.

மாடத்திக்கு அப்படியே ஒடம்பு புல்லரிச்சிப் போச்சி! எளிய சாதியாப் பொறந்துட்டு இவதாம் 'கும்புடுதேஞ்சாமி! கும்புடுதேஞ்சாமி!'யின்னு கையெடுத்துக் கும்பிடுவா! பதிலுக்கு ஒருத்தரும் மரியாதைக்குத் தலையைக் கூட அசைக்க மாட்டாக! இன்னைக்கு இவ்வளோ பெரிய ஆபீசரு, 'நம்மளப் பார்த்து கையெடுத்துக் கும்பிடுதாரே'ன்னு மாடத்திக்கு ரொம்பக் கூச்சமாயிருந்தது!

காருல வந்தவரு முதலமைச்சரோட, தனிச் செயலர். சௌந்திரராகப் பயல் பத்தாம் வகுப்புல மாநிலத்திலேயே 'முதலா'வதா வந்திருக்காமில்லே? அதுக்குப் பாராட்ட வந்திருக்காரு! இனிமே அவம் படிப்பு செலவு பூராம் அரசாங்கமே ஏத்துக்குமின்னு சொன்னாரு! பெறவு சௌந்திரராகப் பயலோட நின்னு போட்டோ எடுத்துக்கிட்டாரு. அந்நேரம் இருளப்பன் வீட்லயில்ல! அதனால மாடத்திய மட்டும் நிக்க வச்சு போட்டோ எடுத்துக்கிட்டாக!

இப்படித்தாம் இப்ப நாலு நாளா மாடத்தி வீட்டுக்கு 'பேப்பர்'காரங்க, 'அவுக இவுக'ன்னு யாராச்சும் ஒருத்தர் மாத்தி ஒருத்தர் வரவும் போகவுமாயிருந்தாக. நாலு நாளா, மாடத்தி வேலைக்கிக் கூட போவ முடியல! வந்தவகளுக்கு பதில் சொல்லணுமில்ல?

மாடத்திக்கு ஒன்னும் 'நெகா'ப்படல. அவளுக்கு சந்தோசம் தாங்க முடியல! இருளப்பனுக்கும் அப்படித்தாம். "எம்புள்ளேல்ல!"ன்னு சொல்லிச் சொல்லி வாய ஊறிப் போனாம்.

மாடத்திக்கு ஒரு திக்கம் சந்தோசமாயிருந் தாலும் மனசுக்குள்ளே கொஞ்சம் ஊரைப் பத்தி பயப்படவுஞ் செஞ்சா! எளிய சாதியில பொறந்துட்டா எதுக்கெல்லாம் பயப்பட வேண்டியிருக்கு?

புள்ளைக்கு 'சௌந்திரராசு'ன்னு பேரு வச்சதே, ஊருல சம்சாரிமாருகளுக்குப் புடிக் கல.

“த்தாய்லி நாங்கெல்லாம் சொல்லிக் கூப் பிடுற மாதிரியா ஓம் மவனுக்குப் பேரு வச் சிருக்கே! 'ப்பீ திங்கிற கோழிக்கு பேரு முத்து மாலை'யாம்”ன்னுட்டு மூல வீட்டு 'சீனாத் தானா' கூட ஒருநா கேட்டுப்புட்டாரு.

இவளும் இருளப்பனும்தான் புள்ளைய வாநெறைய்ய பேரு சொல்லி கூப்புட்டுக்கிடு வாக! சம்சாரிமாரு யாரும் பேரு சொல்லிக் கூப்புடமாட்டாக! அப்படிக் கூப்புட்டா அவுக சாதி மருவாதி கொறைஞ்சிடுமாம். 'டொக்கு'ன்னுதான் கூப்புடுவாக! அதுக்கு என்ன அருத்தமின்னு யாருக்கும் தெரியது.

“ஓம் மவன் படிச்சு அந்தானக்கி 'கலெக்டரு' ஆகப் போறானாக்கும். பிஞ்ச செருப்பு தைக்கிற பயலுக்குப் படிப்பெதுக்கு? காலக் கெரகத்துக்கு 'கரிச் சான் சாவடி எடுத்துச்சாம்' அப்பமுன்னுட்டு 'எக்கண்டம் ஏடாசி'யில்ல பேசினாக! இப்பம் எம் மவன் 'கலக் டரு'தாம் ஆகப் போறாம்! ஒங்க மொகரையை எங்கன கொண்டு வச்சுக்கப் போறீக!' மாடத்திக்கு மனசு பூராம் பெருமை யாயிருந்தது. “நாம பட்ட கயிட்டத்துக்கெல் லாம் 'பலம்' கெடைச் சுருச்சய்யா''ன்னு புருசங்கிட்ட சொல்லி ஆசுவாசப்பட்டுக் கிட்டா!

அடேயப்பா! இவன இம்புட்டு வளர்த்து ஆளாக்க அவுக எம்புட்டுக் கயிட் டப்பட்டிருப்பாக! ஒரு நல்ல சோறு தண்ணி யுண்டா? கம்மஞ்சோறுதாம். அதும் 'கட்டி யாத் திங்கிறத கரைச்சுக் குடி'ங்கிற மாதிரி யில்ல வயத்தைக் கழுவுனாங்க!

ஆனாப் புள்ளைக்கு எந்தக் கொறவும் வைக்க மாட்டாக. சம்சாரி வீட்டுப் புள்ள மாதிரில்ல வளர்த்தாக! மாடத்தி, புள்ளைக் குன்னு தனி ஒல வச்சில்ல பொங்கிப் போட்டா! புள்ளைக்கு நாக்கு ஏமாறிப் போனா, படிப்புல புத்தி போவாதுன்னு, அவனுக்கு மட்டும் தனியா ஒழுக்கரிசிய வடிச்சி வச்சிடுவா. வெஞ்சனத்துக்கு கரு வாடோ என்னமோ கண்டிசனா இருக்கும்.

இருளப்பனையும் சும்மாச் சொல்லக் கூடாது! கடுத்த வேலைக்காரன். கடுமலை யையும் கரைச்சுக் கொண்டாந்துருவான்! எழவு விழுந்தா 'துட்டி' சொல்லப் போவான். போன ஊருல சம்சாரிக போட்ட படித்த வசம் ஒரு மரக்காவோடதான் வீட்டுக்கு வரு வான். வந்த காவோடயே சுடுகாட்டுக்குப் பொணம் எரிக்கவும் போயிடுவான். காரிய மெல்லாம் முடிஞ்ச பெறவு இவனுக்கு ஒரு சோடி வேட்டி கெடைக்கும். அத அப் படியே கடையில கொண்டு போயி கொடுத்து புள்ளைக்கு டவுசர் சட்டை வாங்கியாந்துடுவான்.

பயலும் ரொம்பக் 'கருக்கடை'. சிறுசு லேருந்தே நல்லாப் படிச்சான். “எப்படியாச் சும் புள்ளைய பத்தாப்பு வரைக்கும் படிக்கப் போட்டிறணும்''ன்னுதான் மாடத்தி நெனைச்சா! பய இந்தப் போடு போடுவா மின்னு ஆரு கண்டா?

மறுநாள் காலையில, 'சீனாத்தானா' வீட்டுலேருந்து மாடத்தியைக் கூப்பிட்டு விட்டிருந்தாக. 'சீனாத்தானா' ஊரிலேயே பெருத்த சம்சாரி! கொடவாங்கல் வேற 'போடுசா' நடந்திட்டிருந்தது. மாடத்தி வாக் கப்பட்டு வந்த நாளுலேருந்து அவரு வீட்டுக் குத்தான் வேலைக்கி போயிட்டிருந்தா. இப்பம் நாலு நாளாத்தாம் போக முடியல! மனுசருக்கு அதுக்குள்ள பொறுக்கல!

“நா போயி எட்டிப் பாத்துட்டு வந்துரு வேன்! இல்லைன்னா மனுசரு 'நொற நாட் டியம்' பேசுவாரு”ன்னு புருசங்கிட்ட சொல் லிட்டு 'சீனாத்தானா'வப்

* சங்கிலியின் முதல் கண்ணிதான் முடிப்புக்கண்ணி. பாலில் துவங்கிப் பாலில் முடிகிறது வாழ்க்கை. வட்ட மேஜையில் முதலெது? முடிவெது?

– உடுமலை. பொன்னு சாமி

பார்க்க கிளம்பினா மாடத்தி.

'சீனாத்தானா'வுக்கும் சௌந்திரராகப் பயலக் கண்டா வல்லிசாப் புடிக்காது! அதும் இவ பயல படிக்கப் போடறது அவருக்குத் துப்புரவாப் புடிக்காது! அவனப் பத்தி ஏதாவது 'நொள்ளை' சொல்லிட்டேயிருப்பாரு! "சாதிக்குத் தக்கன புத்தி! சாப்பாட்டுக்குத் தக்கன லத்தி!"ன்னு நெனைக்கிற மனுசரு.

ஒரொரு நேரம் மனுசன் பேசுற பேச்சைக் கேட்டா மாடத்திக்கு அப்படியே ஈரக் கொலயக் குத்திப் பிடுங்குற மாதிரியிருக்கும்.

"இனிமே இந்த மனுசன் மூஞ்சியிலேயே முழிக்கக் கூடாது! கூரையில சோறு போட்டா ஆயிரம் காக்கா! இப்பத்தாம் ஊரு பூராம் தீப்பெட்டியாபிசு வந்துருச்சே? வேலைக்கா பஞ்சம்!" அப்படீன்னு அவளுக்குத் தோணும். ஆனா மனசு கேக்காது.

நல்லவகளோ, கெட்டவகளோ! அன்னைக்கி செஞ்சத மறக்கப்புடுமா? 'குடிக்கிறதொரு லெக்கு! கொலைக்கிறதொரு லெக்கு'ன்னா அது மனுசப் பிறவியா?

**அ**ப்பம் மாடத்தி வாக்கப்பட்டு ஊருக்கு வந்த புதுசு. அந்த வருசம் ஊருல மழை தண்ணியில்லாமப் பஞ்சமா போயிருச்சு! தாது வருசப் பஞ்சமாதிரி, ஒரு புல் பூண்டு கூட மொளைக்கல. கருசக் காடெல்லாம் மழையில்லாம பாளம் பாளமா வெப்போடிப் போய்க் கெடந்தது. சம்சாரிக ஒருத்தர் வீட்டுலயும் வேலை இல்ல. அன்னாடம் கொத்து வேல செஞ்சி பொழைக்கிற சனங்க வேலயில்லைன்னா என்ன செய்வாக? "கொத்தித் திங்கிற கோழிக்கு மூக்குல புண்ணு"ங்கற மாதிரில்ல ஆயிப் போச்சி!

மாடத்திக்கு ஒன்னும் ஓடல. வீட்லேயும் 'மாம்பிடி' தவசம் கெடையாது! இருளப்பனுக்கு வாரம் ஒரு நாள் வேலை கெடைக்கிறது கூட அருந்தலாப் போச்சி!

என்னமோ தெரியல, அந்த நேரத்துல சீனாத்தானா, தோட்டத்துல மாடத்திக்குப் பதிவா வேல கொடுத்திட்டிருந்தாரு! இல்லைன்னா மாடத்தி வீட்டுல அடுப்பே பொகைஞ்சிருக்காது.

**'சீ**னாத்தானா' வீட்டுக்கு மாடத்தி போன நேரம் அவரு தோட்டத்துக்குப் போயிருந்தாரு. அவரு சம்சாரம்தான் வீட்டுலயிருந்தது. அந்தம்மா ஒரு 'வெள்ளந்தி'யான பொம்பள! சூது வாது தெரியாது. சமயத்துல 'வாயில வந்தத வச்சித் தன்னு'ன்னு பேசிப்புடும்.

அந்தம்மா மாடத்தியப் பார்த்ததும்,

* முயற்சி
கூட்டுறவு
சுறுசுறுப்பு
உழைப்பு
சேமிப்பு
சமத்துவம்
இவையெல்லாம் இருக்க
தேனீயிடமிருந்து
நமக்குத் தேவை
தேன் மட்டுமே.

— ந.ச. நடராசன்

"வாடீம்மா இப்பத்தாம் எங்க வீட்டுக்கு வர வழி தெரிஞ்சுதாக்கும்! இனிமே நீ எங்க வேலைக்கு வரப் போறே"ன்னு அடைச்ச மாதிரி பேசிச்சி.

"அதென்ன தாயி அப்படிச் சொல்லிப் புட்டீக! நம்ம வீட்டை விட்டா எனக்கு நாதியேது! நா சாகுந்தன்டியும் நம்ம வீட்டுலதாம் கெடப்பேன். எனக்கு அப்படி மேட்டிம வந்துருச்சாக்கும்."

"சும்மா ஒரு பேச்சுக்குச் சொன்னேன். ஒன்னைய எனக்குத் தெரியாதா? ஒங்கொணங் கண்டுதான் ஆத்தா ஒனக்கு இப்படியொரு அருமைப் புள்ளையக் கொடுத்திருக்கா. நானும் பெத்துருக்கனே! எல்லாம் கூமுட்டப் பயலுவ!"

"ஆவட்டும் தாயி. நா சாமியவுகள தோட்டத்துல போயி பார்த்துட்டு நாளை மொதக் கொண்டு வேலைக்கி வாரந்தாயி!" சொல் லிட்டு மாடத்தி தோட்டத்தப் பார்க்க நடந்தா.

**மா**டத்தி தோட்டத்துக்கு போய்ச் சேரும் போது சினாத்தானா யாரோடயோ பேசிட்டிருக்கிற சத்தம் கேட்டிச்சிப் பேச்சு இவளப் பத்தியிருந்ததாலே மாடத்தி நின்னு கவனிச்சா. மாடத்தி நின்னயிடம் ஆமணக் கஞ்செடி மறைவாயிருந்ததாலே அவுக இவளக் கவனிக்கல.

"யோவ் சினாத்தானா! இந்த மாடத்தி மவன் என்னய்யா இந்தப் போடு போட்டிருக்கான்? மாநிலத்துலேயே 'பஸ்ட்டா'மில்ல" நாட்டாமை சத்தம் மாதிரியிருந்தது.

சினாத்தானா நமட்டுச் சிரிப்பு சிரிக்கக் கிட்டு, "பய ஒடம்புல ஆரு 'நெத்தம்' ஓடுதுன்னு நெனைச்சீரு?"ன்னாரு.

"அதானே பார்த்தேன்! இல்லையின்னா பய இந்த வரத்து வருவானா? ஆமா... நீரு மண்டக்கனம் புடிச்ச ஆளாச்சே! சாதிக்காரங்க கூடவே சரியா அண்டமாட்டீரு. நீரு எப்படி அவள...?"

"அதொரு நேரம்! அப்ப அவ ஆளு எப்படியிருப்பான்னு நெனைச்சீரு? ஆளு அம்மா உருட்டி வெச்ச கம்மஞ்சோறு அணக்கா நெளுநெளுன்னுல்லயிருப்பா!" சினாத்தானா பெருமையா 'அளந்து விட்டுப்'டுயிருந்தாரு.

மாடத்திக்கு 'படபட'ன்னு வந்துருச்சி! அடப்பாவி! எலும்பில்லா நாக்கு இப்படியும் பேசுமா? இப்படி வாக்கூசாம புளுகுறீரே! இவனை இம்புட்டுப் படிக்க வைக்க நானும் எம்புருசனும் ஓடாத்தேஞ்சி உருக் கொலைஞ்சி நிக்கமே! கட்டிக்க மாத்துத் துணியில்லாம அரைவயிறும் காவயிறுமாக் கயிட்டப்படுதமே! இதெல்லாம் ஒங்க கண்ணுக்குத் தெரியாதுல்ல! ஒங்க 'நெத்த'மாயில்ல! அப்பமுன்னா ஒங்க புள்ளைகளுக்கு ஏன் சாமி படிப்பு வரல? அதுங்க ஒடம்புல உங்க 'நெத்தம்' ஓடலயா?

இம்புட்டையும் அவ சினாத்தானா மின்னாடி கைநீட்டிப் பேசியிருக்க முடியும். அப்படி பேசுறதுக்கு அவ என்ன சினாத்தானா மாதிரி சின்னப் புத்திக்காரியா? நாய் கடிச்சா பதிலுக்கு கடிக்கவா செய்வாக?

மாடத்தி விறுவிறுன்னு சினாத்தானா மின்னாடி போயி நின்னா. இவளப் பார்த்ததும் "அட மாடத்தி! ஒனக்குச் சாவே கெடையாது! இப்பத்தாம் ஒன்னப் பத்தி பேசிட்டிருந்தம்"ன்னாரு சினாத்தானா.

"நானும் கேட்டுக்கிட்டுத்தானிருந்தேஞ் சாமி! எங்க 'பய'ன்னா படிப்பு வரப்புடாதா? எங்க சனங்க 'நரகல்' அள்ளுவாங்க, பொணம் எரிப்பாங்க! ஒங்க வீட்டுல 'எழவு' விழுந்தா சொல்லப் போவாங்க! இதெல்லாம் ஈனத் தொழிலுன்னு நீங்க கேவலமாப் பேசுவீக. அதெல்லாம் 'ஈனத்தனம்' இல்ல சாமி! செத்த பின்னே நீங்க பேசினீகளே அதாம் ஈனத்தனம்! இப்படி வாக்கூசாமப் பேச ஒங்களுக்கு ராஞ்சனையாயில்ல? புத்தியில நாங்க கொறஞ்சவங்கயில்ல சாமி! தெரிஞ்சிக்கோங்க. இனிமேக் கொண்டு ஒங்க மூஞ்சில முழிச்சாலே பாவம்!"

முந்திய ஒதறி இடுப்புல சொருகிட்டு வீட்டைப் பார்க்கத் திரும்பி நடந்தா மாடத்தி. ●

சுமார் முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு நாங்கள் எழும்பூரில் குடியிருந்தோம். எங்கள் வீட்டுக்கு சமீபத்தில் ஒரு மைதானம் உண்டு. (அதுதான் இப்போது பாந்தியன் ரோடில் கோ-ஆப்டெக்ஸ் வளாகமாக இருக்கிறது) அங்கே சுவாமி சின்மயானந்தாவின் சமயச் சொற்பொழிவுகள் நடைபெறும். அவருடைய சொற்பொழிவைக் கேட்பதற்கு சென்னை மாநகரத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஆன்மிக அன்பர்கள் வருவார்கள். ஒருநாள் மாலை நானும் அவருடைய சொற்பொழிவுக்குப் போனேன்.

அன்றைக்கு பகவத் கீதை சொற்பொழிவு நிகழ்த்தினார் சுவாமி சின்மயானந்தா. ஒரு மதத்துக்கு மட்டுமே உரிய சமாசாரமாக பகவத் கீதையைப் பார்க்காமல், அது ஒரு வாழ்க்கைமுறை என்பதை மிக அழகாக எடுத்துச் சொன்னார். "பகவான் கிருஷ்ணர், அர்ஜுனனுக்குச் செய்த வெறும் உபதேசமில்லை பகவத் கீதை; அர்ஜுனனின் சந்தேகங்களுக்குப் பகவான் அளித்த விளக்கங்கள் இல்லை பகவத்கீதை. அது உங்களுக்கும் எனக்கும் கூடப் பொருத்தமானது! அர்ஜுனனுக்கு வந்த சந்தேகங்கள் எல்லாமே, பொதுவாக மனிதர்கள் எல்லாருக்குமே வரக் கூடியவை. நம் சந்தேகங்களுக்கு விளக்கம் தேடி நாம் வேறு எங்கேயும் போக வேண்டாம்; பகவத் கீதையைப் படித்தால் போதும்! பகவான் கிருஷ்ணர், நம் எல்லாருக்குமே குருதான்! என்றார் சுவாமிஜி."

எத்தனை கனமான ஒரு விஷயத்தையும், கேட்பவர் மனத்தில் பதியும்படி, எளிதில் புரிந்து கொள்ளுகிறாற்போல அவரால் சொல்ல முடிந்தது என்றால், அதற்கு அவர் பயன்படுத்திய சின்னச் சின்ன கதைகள், உருவகங்கள், இவையனைத்துக்கும் மேலாக,



• ஔவையாராக திருமதி ஒய்.ஜி.பி

நகைச்சுவை கலந்து அவர் பேசியதுதான் காரணம்!

முதல் நாள் கேட்டவுடனேயே மனம் நெகிழ்ந்து போனேன். இத்தனை நாள், இவருடைய சொற்பொழிவுகளைக் கேட்காமல் இருந்து விட்டோமே என்ற வருத்தம் ஏற்பட்டாலும், இப்போதாவது அதைக் கேட்டு, அதன் பெருமையைப் புரிந்து

# சின்மயானந்தா – சில நினைவுகள்...

திருமதி ஒய்.ஜி.பி

வாஸ்து சாஸ்திரப்படி
வடிவம் மாறிய வீடு
கைரேகை பலனில்
விரல் சுமந்த மோதிரக் கல்.
நியூமராலஜியின்
பெயர் சிதைவு.
ஜாதகப் பரிகாரமாய்
நவக்கிரஹ வழிபாடு.
மெல்ல நகைத்தபடி
வாழ்க்கை
அதன் வழியில்...

— அண்ணா அன்பழகன்



கொள்ள நல்வாய்ப்புக் கிடைத்ததே என்று மனம் மகிழ்ந்தேன்.

தொடர்ந்து சுவாமிஜி மீது பெரும் மரியாதை கொண்ட டி.டி.கே. குடும்பத்தைச் சேர்ந்த பெண்மணியான பத்மா, தமது ஆபீசில் 'சின்மயானந்தா ஸ்டடி சர்க்கிள்' என்பதாக ஓர் அமைப்பை ஏற்படுத்தினார். அங்கே அடிக்கடி நாங்கள் ஒன்று கூடினோம். அவர் சுவாமிஜியின் சொற்பொழிவுகளில் அதிக ஆர்வமும் ஆழமான அறிவும் பெற்றவர். ஆகவே, ஸ்டடி சர்க்கிள் உறுப்பினர்கள் ஒன்று கூடுகிற சமயங்களில் எல்லாம் அவரது தத்துவங்கள், போதனைகள் பற்றி விளக்கமாகப் பேசுவார்.

கோவில் வழிபாடு, நம்முடைய பண்டிகைகள் மற்ற அனுஷ்டானங்கள் இவை பற்றிக் காரண காரியம் அறியாமலேயே ஏதோ சடங்குகள் போல செய்து கொண்டிருக்கிறோமில்லையா? அவை ஒவ்வொன்றையும் எதற்காகச் செய்கிறோம்? எப்படிச் செய்வது முறை என்றெல்லாம் எளிமையாக விளக்குவார் சுவாமிஜி.

ஒருதடவை சுவாமிஜியைச் சந்தித்த போது, அவரை எங்கள் பள்ளிக்கூடத்துக்கு வந்து மாணவர்கள் மத்தியில் உரையாற்ற வேண்டும் என்று கேட்டுக்கொண்டேன். உடனடியாக மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார். எங்கள் மாணவர்கள் மத்தியில் 'கடவுள் இருக்கிறாரா?' என்று ஆரம்பித்து, மிக அற்புதமாகப் பேசினார்.

"நம்முடைய உடம்பில் கண், காது, மூக்கு, வாய், கை, கால்... என்று ஏகப்பட்ட அங்கங்கள் உள்ளன. உடலுக்குள்ளே என்று எடுத்துக் கொண்டால் மூளை, இதயம், நுரையீரல், கிட்னி என்று பல உள்ளன. இவையெல்லாம் தம் வேலையைத் தயக்கம் ஏதுமில்லாமல் செய்து கொண்டே இருக்கின்றன. இந்த இயக்கத்துக்கு யார், எது காரணம்? ஏதோ ஒருவர் அல்லது ஒன்று காரணம் என்பதை நாம் எல்லோருமே ஒப்புக் கொள்வோம். ஆனால், அவரவர் தம் விருப்பத்துக்கு ஏற்ப அதற்குப் பெயர் சூட்டிக் கொள்கிறோம். கடவுள், இயற்கை, அது... இது... இப்படி..."

இப்படியாக ஆரம்பித்த சுவாமிஜியின் பத்மா சேஷாத்திரி விஜயம், ஒவ்வொரு முறை அவர் சென்னைக்கு சொற்பொழிவுக்கு வருகிறபோதும் தவறாமல் எங்கள் பள்ளிக்கு வந்து மாணவர்களுக்கென்று சொற்பொழிவாற்றுவது என்னுமளவுக்கு வழக்கமாகிப் போனது.

சில சமயங்களில், எங்கள் ஆசிரியைகளுக்கென்று பிரத்யேக சொற்பொழிவுகள் ஆற்றியதும் உண்டு. ஒரு குருவுக்கு, இந்த சமுதாயத்தில் என்ன கடமை என்பதை அவர் விளக்கிச் சொல்லக் கேட்கிற யாரும் ஆசிரியர் தொழிலை விட்டு, வேறு எந்தத் தொழிலுக்கும் போக மாட்டார்கள். அந்த அளவுக்கு, ஆழமாக விஷயங்களை அனைவருக்கும் புரியும்படி எளிமையாகக் கூறுவார் சுவாமிஜி.

ஆசிரியரின் பணி என்பது, வயிற்றுப் பிழைப்புக்கான ஒரு தொழில் இல்லை. இது ஒரு தர்மம் என்று சொல்லுவார். அதே போல, மாணவர்களையும் அவர் மூன்று பிரிவுகளாய்ப் பிரித்து விடுவார். உதாரணமாக, கண்ணாடியை எடுத்துக் கொள்வோம். மிக மங்கலான கண்ணாடி ஒன்று இருந்தால், அதைப் பளபளப்பாக்க கடும் உழைப்பு அவசியம். ரசம் போன கண்ணாடி என்றால், வெறுமனே ரசம் பூசினால் போதும். மூன்றாவது கண்ணாடி அழுக்கு படிந்த கண்ணாடி. அதனைத் துணியால் நன்கு துடைத்து, சுத்தம் செய்துவிட்டால் போதும், பளபளப்பாகி விடும்.

மாணவர்களும் கண்ணாடியைப் போலத்தான். அவர்களது மனப் பக்குவம், கிரகிப்புத் தன்மை இவற்றை வைத்து மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். எந்த மாணவனுமே முட்டாள் இல்லை. ஒரு சிலருக்கு லேசாகக் கோடி காட்டினால் போதும், புரிந்து விடும்; இன்னும் சிலருக்குக் கொஞ்சம் விளக்கிச் சொன்னால் போதும். பிடித்துக் கொண்டு விடுவர். மூன்றாவது பிரிவுக்காரர்கள் அடுத்த நிலையில் இருப்பவர்கள். அதிக சிரமமெடுத்து நாம் கொஞ்சம் கொஞ்சமாக விளக்கிச்

சொன்னால்தான் புரிந்து கொள்வார்கள்.

இந்த மூன்று விதமான மாணவர்களையும் ஒரே வகுப்பில் உட்கார வைத்து, ஒரே விதமாகப் பாடம் சொல்லிக் கொடுப்பது கூடச் சரியான அணுகுமுறை இல்லை என்று சுவாமிஜி சொல்லுவார்.

இதைக் கேட்ட பின்பு, எங்கள் பள்ளிக் கூடத்தில்கூட, இதைப் பரீட்சார்த்த ரீதியில் செயல்படுத்திப் பார்த்தோம். கணக்குப் பாடம் என்று எடுத்துக் கொண்டால், அதில் 'வீக்'கான குழந்தைகள் யார் என்று அறிந்து, அவர்களைத் தனியே பிரித்து, அவர்கள் மீது வழக்கமான பாடத் திட்டத்தின்படிப் பாடங்களைத் திணிக்காமல் மெதுவாக அவர்களும் புரிந்து கொள்ளும் விதமாக ஸ்பெஷலாய்ச் சொல்லித் தர ஏற்பாடு செய்தோம். அதுவும், அஸ்திவாரமான விஷயங்கள் நன்றாகப் புரிந்து கொள்ளும் வரை இதைக் கடைபிடிப்போம்.

அமெரிக்காவில், பள்ளிகளில் ஒரு குழந்தை பரீட்சையில் எப்படி மார்க் வாங்கியுள்ளது என்பதை அந்த வகுப்பில் உள்ள மற்ற குழந்தைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து அது நன்றாகப் படிக்கிறதா என்று முடிவு எடுப்பதில்லை! மாறாக, முந்தைய பரீட்சையைவிட, இந்தப் பரீட்சையில் நன்றாக மார்க் வாங்கியுள்ளதா என்றுதான் ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள். எனவே ஒரு குழந்தை ஒரு வகுப்பில் பெயிலாவது என்பதே அங்கே இல்லை. இதே கருத்தைத்தான் சின்மயானந்தாவும் தமது சொற்பொழிவுகளில் வலியுறுத்துவார். முடியாது என்பதே இல்லை; உன்னால் முடியும் என்ற நம்பிக்கையுடன் உழைத்தால் நிச்சயம் நினைத்ததை சாதிக்க முடியும் என்பார் அவர்.

ஒரு தடவை, கம்பராமாயணத்தை இசை, நடன நாடகமாக நடத்தி மேடையேற்ற விரும்பினார் சுவாமிஜி. அதற்குப் பெயர் 'கம்பர் தரும் காட்சி' வழக்கமான இசை நாட்டிய நாடகம் போன்றது அல்ல அது. தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில், பெரிய பெரிய மரங்களின் அடியில் மேடை அமைத்து, ஒரே மேடையில் காட்சிகள் மாறுவதற்கு பதிலாக காட்சிக்கு காட்சி, மேடையே மாறும். ஒரே கதாபாத்திரங்கள் என்றாலும்கூட, காட்சிக்கேற்ப வெவ்வேறு மேடைகளில் தோன்றுவார்கள். பார்வையாளர்கள் அமர்ந்து பார்ப்பதற்கென்று தனி 'கேலரி' கட்டப்பட்டது.

எல்லா கதாபாத்திரங்களுக்கும், நடிக்க மாணவ மாணவிகள் கிடைத்து விட்டார்கள். ஆனால் சூர்ப்பனகை வேடத்தில் நடிக்க யாரும் முன் வரவில்லை. கடைசியில் நானே அந்தப் பாத்திரத்தில் நடிக்கிறேன் என்றேன். அனைவருக்கும் இனிய ஆச்சரியம்!

ஒத்திகை ஆரம்பித்தது. மொத்த நிகழ்ச்சிக்கும் உரிய ஒலிப்பதிவு முடிந்தது. மேடையில் நாங்கள் அதற்கேற்ப வாயசைத்தபடி நடிக்க வேண்டும். எனவே பொருத்தமான உதட்டசைவுடன் நடிக்க கடுமையான ஒத்திகை நடந்தது.

அரங்கேற்ற தினம். பொதுமக்களிடம் அமோக வரவேற்பு. நிகழ்ச்சி முடிந்ததும், சுவாமிஜியைச் சந்தித்தோம். என்னைப் பார்த்தவுடன் 'அண்ணா?' என்று உரக்கச் சொல்லி விட்டுப் புன்னகைத்தார் சுவாமிஜி. நான் ஒரு காட்சியில் (சூர்ப்பனகை) அண்ணன் ராவணனைப் பார்த்து அண்ணா என்று கூப்பிடுவதைப் போலவே அவர் கூப்பிட்டுக் காட்டினார். அனைவரும் சிரித்து விட்டனர்!

இந்த வருடம் எங்கள் பள்ளி ஆண்டு விழாவில் 'பிரம்மம் ஒகடே' (இறைவன் ஒருவனே!) என்ற பொருளில் நிகழ்ச்சிகளை நடத்தினோம். அதில் பிள்ளையார், சிவன், சக்தி, முருகன், பெருமாள் என்று அனைத்து கடவுள்களும் இடம் பெற்றிருந்தனர். முருகன் சம்பந்தப்பட்ட காட்சியில் ஔவையாராக நான்தான் நடித்தேன்!

(அடுத்த வாரம் முடியும்)

திருமணம்
ஆயிரம் காலத்துப் பயிர்தான்
இல்லையென்றால் மாப்பிள்ளைக்கு மகசூல் அதிகம் கிடைக்குமா?
— ஜெயக்குமார்

# இன்று

கடலுக்கும் வானுக்கும்
இறகு தெறிக்கப் பறக்கும்
கறுப்புப் பறவைகள் தான்
நகரத்தின் காலைச் சிரிப்பா?

மேலைப் பள்ளிக்கு
மெதுவாக விரையும்
மேகக் குழந்தைகள்
நின்று நின்று தயங்குவது
எந்த அன்னை முகம் தேடி?

விடிந்துங் கூட
வெட்ட வெளி மெத்தையில்
வெட்கம் மறந்து தூங்கும் நிலவுக்குள்
அப்படியென்ன
பகல் கனவு?

கருத்தற்று விரிந்த மனக்கண்ணில்
தானாய் விழுந்த சில தோற்றங்கள்தான்
நிஜமாய் நிஜமா?





எஸ். வைதீஸ்வரன்

# சாமியிலே பேதமில்லை!

சினிமா கவிஞர்களை யாருக்கும் தெரியும். 'கார்த்திகை மாதமா?- ஐயப்பன் பக்திப்பாடல்கள். தைப்பூசம், பங்குனி உத்திரமா?-முருகன் பக்திப் பாடல்கள். ஆடி, சித்திரையா-அம்மன் பாடல்கள்' என்று சீஸனுக்கு ஏற்ப பக்தி கேஸட்களில் வெளுத்து வாங்கும் பக்திக் கவிஞர்களைத் தெரியுமா?

ஆடியோ கேசட் கம்பெனிகள் பக்திப்பாடல்களை எழுதத் தனியே கவிஞர்களை நியமித்துக் கொள்கின்றன. இந்தக் கவிஞர்களில், ஆயிரக்கணக்கில் பாட்டெழுதி சாதனை படைத்தவர்களெல்லாம் இருக்கிறார்கள்! சிலரைச் சந்தித்தோம்:

• காதல் மதி

• முகிலன்





• வாரஸ்ரீ

**கவிஞர் காதல்மதி:**

சொந்த ஊர் திருச்சி வரகனேரி என்றாலும், பிறந்து வளர்ந்ததெல்லாம் சென்னையில்தான். இருநூறுக்கும் மேற்பட்ட கேசட்டுகள் இவர் பாடல்களைத் தாங்கி வெளிவந்திருக்கின்றன. அவற்றில், அனுராதா ஸ்ரீராம் பாடிய 'ஆறுபடையப்பா', 'ஆதி', போன்ற பிரபலமான கேசட்டுகளும் அடக்கம். எல்லாக் கடவுள்களின் மேலும் இவர் பாடல் எழுதியிருக்கிறார். புத்தரைப் பற்றிக் கூடப் பாடல்கள் எழுதி வெளிவந்துள்ளன.

டீவி, ரேடியோ, சிரஞ்சீவி நடித்த 'டப்பிங்' சினிமாக்கள் உட்பட இவர் பல துறைகளில் வலம் வந்தாலும், "பக்திப்பாடல்கள் எழுதும்போது தமிழ் சுத்தமாக வருது. மனசுக்கு இதமாக இருக்கிறது. 'ஆனைக்கா உறையும் சிவன்' என்ற பாட்டில் சமயத்தைப் பத்தி அவ்வளவு அழகாக எழுதியிருக்கேன். வெறுமனே சாமியின் புகழ், அது வேண்டும் இது வேண்டும் என்று இறைவனிடம் இறைஞ்சுதல் மட்டும் இல்லாமல் பாடல்கள் கவித்துவத்தோடு வருவதற்கும் முயற்சி எடுக்கிறேன். கேட்டுப் பாருங்களேன்'' என்றார் காதல்மதி.

**வாரஸ்ரீ:**

வானமாமலை ரங்கராஜன் ஸ்ரீனிவாசன் 1984லிருந்து கவிதைகள் எழுதி வந்தாலும், 1993ல்தான் பக்திப்பாடல்கள் எழுதத் துவங்கினார். இதுவரை 180 ஆடியோ கேசட்டுகளில் இவர் பாடல்கள்தான். ஆரம்பத்தில் ஒரு ஆட்டோ வீல் யூனிட்டில் பணிபுரிந்தார். அதை விட்டு விட்டு பக்திப்பாடல் பக்கம் படையெடுத்திருக்கிறார்.

பாம்பே சிஸ்டர்ஸ், சுதா ரகுநாதன், உன்னி கிருஷ்ணன் என்று பெரிய பெரிய பாடகர்களெல்லாம் இவர் பாடல்களைப் பாடியிருக்கிறார்கள். சமீபத்தில் வெளியான 'நமசிவாயா' (எஸ்.பி. பாலசுப்ரமணியம் பாடியது) ரொம்ப ஹிட்டானதில் சந்தோஷமாக இருக்கிறார். சில கவிதைத் தொகுதிகள் வெளியாகியுள்ளன.

"சைதாப்பேட்டையில் உள்ள பாரதி கலைக் கழகம் எனக்குக் கவிதை எழுத ரொம்ப உந்துதல் தந்தது. சந்தப் பயிற்சி பண்ணுவதற்கு, பாடல்கள் வசதியாக இருக்கு. இந்த ஃபீல்டுல பத்து பேர்தான் இருப்போம்.

எனினும் இதை வச்சு வாழ்க்கையை ஓட்டறது ரொம்பக் கஷ்டம்" என்கிறார் வாரஸ்ரீ. சென்னை மாநிலக் கல்லூரியில் எம்.எஸ்சி. இயற்பியல் முடித்து விட்டு, சென்னை பல்கலைக்கழகத்தில் எம்.ஏ. வரலாறும் படித்திருக்கிறார் கவிஞர்.

**முகிலன்:**

இயற்பெயர் குலோத்துங்கன். இவரும் 200 கேசட்டுகளுக்கு மேல் பக்திப்பாடல்கள் எழுதியிருக்கிறார். சொந்த ஊர் சிதம்பரம் பக்கத்திலிருக்கும் பரதூர் கிராமம். இவருக்குப் பெயர் வாங்கிக் கொடுத்த ஆடியோ கேசட்டுகள் 'குறிமேடை', 'இருமுடி' ஆகியவை. இந்த ஆடி மாத சீசனுக்கு மட்டும் அம்மன் பெயரில் ஏழு கேசட்டுகளுக்குப் பாடல் எழுதியிருக்கிறார்!

"வருமானம்னு பெருசா ஒண்ணும் இல்லை. சினிமால ஒரு பாட்டுக்கு கவிஞர்கள் வாங்கற தொகையை நாங்கள் ஒரு கேசட்டுக்கு வாங்கிக் கொண்டிருக்கிறோம். மனதுக்கு ஒரு அமைதி கிடைக்குது. எப்பவும் தெய்வத்தையே நினைச்சுட்டு இருக்கற பலன் வாய்ச்சிருக்கு. ஜனங்களை ஆன்மீக வழிக்குத் திருப்பற முக்கியமான பணி எங்களுது. 'இருமுடி'ங்கற கேசட்ல நரிக்குறவங்க, ஐயப்பமார்கள்ட்ட கேட்டுத் தெரிஞ்சுகிட்டு சபரிமலைக்குப் போற மாதிரி ஒரு பாடல் எழுதியிருந்தேன். அதைக் கேட்டுட்டு ஒரு ஐம்பது நரிக்குறவங்க, வடபழனி சிவன் கோவில்கிட்டயிருந்து தனிபஸ் பிடிச்சு, மாலை போட்டு சபரிமலைக்குப் போய்ட்டு வந்தாங்க. முன்னாடி சாமி, ஸ்தலம், வரலாறு பற்றித்தான் பக்திப் பாடல்கள் இருந்தது. இப்போ நாங்க சமுதாய நோக்கோட, பொதுவுடைமைக் கருத்துக்களைக் கூடப் பாடல்களில் எழுதறோம். இயேசு மேல கூட பாடல் எழுதிட்டேன். முஸ்லீம் பாட்டு ஒண்ணாவது எழுதிடணும்கறது என் ஆசை" என்றார் முகிலன்.

— கே. பாலசுப்ரமணியன்

## போட்டிக்கு ரெடியா?



இந்த இதழ் அட்டையில் வெளியாகியிருக்கும் மனீஷா கொய்ராலாவின் படத்தைப் பாருங்கள்! வெட்கம் கவிந்த அந்தப் புன்னகையில் கோடி கவிதைகள் கொட்டிக் கிடப்பது புலப்படவில்லை? எதைப் பார்த்து இப்படியொரு சிரிப்புப் பீறிடுகிறது அவருக்கு?

அந்தப் புன்னகையில் புதைந்திருக்கும் ரகசியத்தை ஒரு எட்டு வரிக் கவிதையாக்க வேண்டியதுதான் போட்டி!

- கவிதையை கூப்பனில் மட்டுமே எழுத வேண்டும்.
- ஒருவர் எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் ஜெராக்ஸ் கூப்பன்கள் செல்லாது!
- மிகச் சிறந்த மூன்று கவிதைகள் மட்டும் பரிசு பெறும்.

**முதல் பரிசு ரூ. 200, இரண்டாவது பரிசு ரூ. 100. மூன்றாவது பரிசு ரூ. 50.**

- **கடைசித் தேதி 9.8.99**
- **ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**

**புன்னகைக்குப் பின்னால்...**

பெயர்:..........................................

முகவரி:..........................................

..........................................

..........................................

அட்டையில் : 'முதல்வன்' படத்தில் மனீஷா கொய்ராலா; படம் உதவி : நிகில் முருகன்.

# பொன்னியின் செல்வன்

## பூர்வ கதை




ராஜ ராஜ சோழன் என்று சரித்திரப் புகழ் பெற்ற அருள்மொழி வர்மன் இளம் பிராயத்தில் இலங்கையில் நடந்த போருக்குச் சென்றிருந்தான். அவனுடைய தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தி தஞ்சையில் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாயிருந்தார். அவனுடைய தமையனும் பட்டத்து இளவரசனுமான ஆதித்த கரிகாலன் காஞ்சியில் வடதிசைச் சேநாதிபதியாக இருந்து வந்தான். இவன் வீராதி வீரன். மிக இளம் வயதில் மதுரை வீர பாண்டியனைப் போரில் கொன்று, 'வீர பாண்டியன் தலை கொண்ட கோப்பரகேசரி' என்ற பட்டம் பெற்றவன்.

சுந்தர சோழரின் பெரிய தந்தை கண்டராதித்த சோழரின் குமாரன் மதுராந்தகன் இளம் பிராயத்தில் சிவ பக்தியில் ஈடுபட்டிருந்தான். பிறருடைய தூண்டுதலினால் அவனுக்குச் சோழ சிம்மாசனம் ஏற வேண்டும் என்ற ஆசை உண்டாகிவிட்டது. அவனுடைய கட்சியைப் பழுவேட்டரையர்கள், கடம்பூர் சம்புவரையர்கள் முதலான சோழ நாட்டுச் சிற்றரசர்களும் பெருந்தர அதிகாரிகளும் ஆதரித்தார்கள்.

இலங்கைப் போரில் சோழ சைன்யங்கள் பெரும் வெற்றி அடைந்தன. அநுராதபுரம் என்னும் பிரசித்தமான இலங்கைத் தலைநகரைக் கைப்பற்றின. இலங்கை அரசன் மகிந்தன் மலைநாட்டுக்குள் ஓடி ஒளிந்தான். அருள்மொழிவர்மன் அநுராதபுரத்தில் இடிந்து தகர்ந்

## அமரர் கல்கி




கல்கி கலெக்ஷன்

இருந்த புத்த விஹாரங்களைப் புதுப்பித்துக் கட்டினான். இதனால் மகிழ்ச்சி அடைந்த புத்த குருமார்கள் அருள்மொழிவர்மனுக்கு இலங்கைச் சிங்காதனத்தை அளிக்க முன் வந்தார்கள். அதை ஏற்றுக் கொள்ள இள வரசன் இணங்கவில்லை.

அருள்மொழி வர்மனை உடனே தாய்நாட்டுக்கு வந்து சேரும் படி இரண்டு இடத்திலிருந்து செய்திகள் வந்தன. ஆதித்த கரிகாலன் அவனைக் கையோடு காஞ்சிக்கு அழைத்து வரும்படித் தன் நண்பனான பார்த்திபேந்திரனை அனுப்பியிருந்தான். சுந்தர சோழரின் செல்வப் புதல்வியும் சோழ நாட்டில் செல்வாக்கு மிகுந்த சீமாட்டியுமான குந்தவைப் பிராட்டி அருள்மொழி வர் மனைப் பழையாறைக்கு அழைத்து வரு வதற்கு வந்தியத்தேவன் என்னும் வாணர் குலத்து வீர வாலிபனை அனுப்பியிருந்தாள்.

இதற்கிடையில் பழுவேட்டரையர்கள் இளவரசன் அருள்மொழிவர்மன் இலங்கைச் சிம்மாதனத்தைக் கவர எண்ணியதாகக் குற்றம் சாட்டி அவனைச் சிறைப்படுத்திக் கொண்டுவர இரண்டு கப்பல்களையும் அவை நிறைய வீரர்களையும் அனுப்பியிருந் தார்கள்.

அந்த இரண்டு கப்பல்களும் விபத்துக் குள்ளாகி அழிந்தன. அவற்றில் ஒன்றில் வந் தியத்தேவன் அகப்பட்டிருந்தான். அக் கப்பலில் இடி விழுந்து அது முழுகப் போகும் தறுவாயில், பார்த்திபேந்திரனுடைய கப்பலில் வந்த அருள்மொழிவர்மன் பார்த்து விட்டான். வந்தியத்தேவனைக் காப்பாற்று வதற்காகச் சுழற்காற்று அடிக்கும் சமயத்தில் கடலில் குதித்தான். அவர்கள் இருவரையும் பூங்குழலி என்னும் ஓடக்காரப் பெண் காப் பாற்றிக் கோடிக்கரை சேர்த்தாள்.

இளவரசன் கடலில் வரும்போதே கடு மையான குளிர் சுரத்தினால் பீடிக்கப்பட் டான். அவனை நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும் படி குந்தவை சேந்தன் அமுதனிடம் சொல்லி அனுப்பினாள். சேந்தன் அமுதனும் பூங்குழலியும் அருள்மொழி வர்மனை நாகைப்பட்டினத்திலிருந்த புத்த விகாரத் துக்குக் கால்வாய் மூலமாகப் படகில் அழைத்துச் சென்றார்கள்.

வந்தியத்தேவன் கோடிக்கரை யிலிருந்து பழையாறைக்கு வரும் வழியில் கொல்லன் பட்டறை ஒன்றில் அதிசயமான வாள் ஒன்றைப் பார்த்தான். அதன் அடிப் பகுதியில் பாண்டிய குலத்தின் மீன் சின்னம் மங்கலாகத் தெரிந்தது.

பிறகு அதே வாளைப் பெரிய பழுவேட் டரையரின் இளைய மனைவி நந்தினியிடம் அவன் கண்டான். வீர பாண்டியனுடைய ஆபத்துதவிப் படையைச் சேர்ந்தவர்கள் சிலர் சோழ நாட்டில் பரவியிருந்து பழிக்குப் பழி வாங்கும் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி யிருந்தார்கள் என்பது வந்தியத்தேவனுக்கு உறுதிப்பட்டது.

குந்தவையும் வந்தியத்தேவனும் ஒரு வருக்கொருவர் உள்ளங்களைப் பறி கொடுத்திருந்தார்கள். வந்தியத்தேவன் இலங்கைப் பிரயாணத்தில் தான் கண்டது, கேட்டது எல்லாவற்றையும் குந்தவையிடம் கூறினான். பழுவூர் இளைய ராணி நந்தினி யைப் போல் அதே தோற்றமுடைய ஊமை ஸ்திரீ ஒருத்தியை இலங்கையில் பார்த்தது பற்றியும் தெரிவித்தான். அந்த ஊமை ஸ்திரீ சுந்தர சோழ சக்கரவர்த்தியினால் இளம் பிராயத்தில் காதலிக்கப்பட்டவள் என்பதைக் குந்தவை அறிந்திருந்தாள். அவள் கடலில் விழுந்து உயிரை விட்டு விட்டாள் என்ற எண்ணத்தினால் தன் தந்தை மன அமைதி இழந்து தவிக்கிறார் என்பதும் குந்தவைக்குத் தெரிந்திருந்தது. சோழ ராஜ்யத்துக்கு ஏற் பட்டிருந்த அபாயங்களினால் குந்தவையின் உள்ளம் பெரிதும் கவலையில் ஆழ்ந்திருந் தது. அதுவரை அவள் துவேஷித்து வந்த நந்தினி ஒருவேளை தன் தமக்கையாயிருக் கலாம் என்ற எண்ணம் அவள் மனத்தை மேலும் கலங்கச் செய்தது.

இளவரசன் அருள்மொழி வர்மன் குழந்தையாயிருந்த போது காவேரி வெள்ளத்தில் மூழ்கி விட்டான். அவனை ஒரு ஸ்திரீ எடுத்துக் காப்பாற்றிவிட்டு உடனே மறைந்தாள். காவேரி அம்மன்தான் குழந்தையைக் காப்பாற்றியதாக அனைவரும் நம்பினார்கள். இதனால் 'பொன்னியின் செல்வன்' என்னும் காரணப் பெயர் அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

பொன்னியின் செல்வன் சோழ நாட்டு மக்களின் இதயத்தில் இடம் பெற்றிருந்தான். அவன் கடலில் முழுகி இறந்தான் என்னும் செய்தி கேட்டதும் சோழ நாடெங்கும் ஜனங்கள் கொதித்து எழுந்தார்கள். பழையாறை மக்கள் அரண்மனை முற்றத்தில் வந்து ஆரவாரம் செய்தார்கள். அச்சமயம் அங்கு வந்திருந்த இளவரசன் மதுராந்தகன் மீது தங்கள் ஆத்திரத்தைக் காட்ட எண்ணினார்கள்.



பொன்னியின் செல்வன் பத்திரமாயிருக்கும் செய்தியைக் குந்தவை வெளியிட விரும்பவில்லை. அது பழுவேட்டரையர்களுக்கும் நந்தினிக்கும் தெரியக் கூடாது என்று எண்ணினாள். எனினும் ஜனங்களைச் சமாதானப்படுத்துவதற்காக, ''பொன்னியின் செல்வனைச் சமுத்திர ராஜன் காப்பாற்றியிருப்பான்! நீங்கள் கவலைப்பட வேண்டாம்!'' என்று ஆறுதல் வார்த்தை கூறினாள்.

இச் சமயத்தில் பழையாறை வைத்தியர் மகன் பினாகபாணி, வந்தியத்தேவன் மீது ''பழுவேட்டரையர்களின் ஒற்றன்'' என்று குற்றம் சாட்டினான். இருவருக்கும் துவந்த யுத்தம் ஆரம்பமாகி நடந்தது.

அதே சமயத்தில் முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் அங்கு வந்து சேர்ந்தார். சண்டையிட்ட இருவரையும் சிறைப்படுத்தக் கட்டளையிட்டார். ஜனங்களையும் கலைந்து போகச் செய்தார்.

முதன்மந்திரி அன்பில் அநிருத்தர் சுந்தர சோழரின் இளம்பிராயத் தோழர். சோழ சாம்ராஜ்யம் மகோந்நதம் அடைந்து இலங்கை முதல் இமயம் வரையில் பரவ வேண்டும் என்ற நோக்கத்துடன் அவர் பாடுபட்டு வந்தார். அவரிடம் குந்தவைக்கு மிக்க மரியாதை உண்டு.

வந்தியத்தேவனைச் சிறையிலிருந்து விடுதலை செய்ய வேண்டுமென்று குந்தவை அநிருத்தரிடம் கூறியபோது, 'அவன் ஏன் மாற்றானின் ஒற்றனாய் இருக்கக் கூடாது' என்று அநிருத்தர் கேட்டு, அதற்கான காரணங்களையும் அடுக்கடுக்காகக் கூறியபோது உண்மையாகவே குந்தவை குழம்பிப் போனாள்.



## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# ஒற்றனுக்கு ஒற்றன்

மௌனமாயிருந்த அரசிளங்குமரியைப் பார்த்து முதன்மந்திரி அநிருத்தர் "தாயே! ஏன் பேசாமலிருக்கிறாய்? வந்தியத்தேவனை இன்னமும் நீ நம்புகிறாயா?" என்று கேட்டார்.

"ஐயா! அமைச்சர் திலகமே! நான் என்ன சொல்லட்டும்? இன்னும் சற்று நேரம் தாங்கள் பேசிக்கொண்டே போனால் என்னை நானே சந்தேகிக்கும்படி செய்து விடுவீர்கள் போலிருக்கிறதே!" என்றாள் இளவரசி.

"காலம் அப்படி இருக்கிறது, அம்மா! யாரை நம்பலாம், யாரை நம்பக் கூடாது என்று தீர்மானிப்பது இந்த நாளில் அவ்வளவு சுலபமில்லைதான். நாலாபுறமும் அவ்வளவு விரோதிகள் சூழ்ந்திருந்தார்கள்; அவ்வளவு மர்மமான சூழ்ச்சிகள் நடந்து வருகின்றன!'' என்றார் முதன்மந்திரி அநிருத்தர்.

"ஆனாலும் தங்களுக்குத் தெரியாத மர்மமும் தாங்கள் அறியாத சூழ்ச்சியும் இராது என்று தோன்றுகிறது. நான் அனுப்பிய தூதனைப் பற்றிய அவ்வளவு விவரங்களையும் எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?" என்று கேட்டாள் குந்தவை தேவி.

"அம்மணி! நான் ஆயிரம் கண்களும்

இரண்டாயிரம் செவிகளும் படைத்தவள். நாடெங்கும் அவை பரவியிருக்கின்றன. பழுவூர் அரண்மனையில் என் ஆட்கள் இருக்கிறார்கள். பழுவூர் இளையராணியின் மெய்க்காவலர்களிலே எனக்குச் செய்தி அனுப்புகிறவன் ஒருவன் இருக்கிறான். ஆழ்வார்க்கடியானைப் போல் ஊர் ஊராக அலைந்து திரிந்து செய்தி கொண்டு வருகிறவர்கள் பலர் இருக்கிறார்கள். சோழ நாட்டிலோ, சுற்றுப் புற நாடுகளிலோ நான் அறியாமல் எந்தக் காரியமும் நடைபெற முடியாது என்றுதான் எண்ணிக் கொண்டிருக்கிறேன். ஆயினும், யார் கண்டது? என்னையும் ஏமாற்றக் கூடியவர்கள் இருக்கலாம். நான் அறியாத மர்மங்களும் நடைபெறலாம்!"

இவ்வாறு முதன்மந்திரி சொன்ன போது, பொன்னியின் செல்வன் இப்போது சூடாமணி விகாரத்தில் இருப்பதும் இந்தப் பொல்லாத மனிதருக்குத் தெரியுமோ என்ற எண்ணம் குந்தவைக்கு உண்டாயிற்று. அதை அவள் வெளியிடாமல் மிகுந்த சிரமத்துடன் அடக்கிக்கொண்டாள்.

"ஐயா! நீங்கள் சொல்வதெல்லாம் உண்மையாக இருக்கலாம். ஆனாலும் அந்த வாணர்குல வீரன் பழுவூர் ராணியின் ஒற்றனாகியிருப்பான் என்று மட்டும் என்னால் நம்ப முடியவில்லை. அவனைத் தயவு செய்து விடுதலை செய்து விடுங்கள்!" என்றாள்.

"நன்றாக யோசித்துப் பார், அம்மா! அந்தப் பெண் நந்தினியிடம் மாயமந்திர சக்தி ஏதோ இருக்கிறது. சிவ பக்தன் மதுராந்தகன் அவளுடைய வலையில் விழுந்து இராஜ்யத்தில் ஆசை கொண்டான். சம்புவரையரின் மகன் கந்தமாறன் அவளுடைய ஓலையை எடுத்துக்கொண்டு ஆதித்த கரிகாலனிடம் போயிருக்கிறான். பழுவேட்டரையர்களின் பரம விரோதியாயிருந்த பார்த்திபேந்திரன் இன்று பழுவூர் ராணியின் அடிமையாகி விட்டான். சோழ ராஜ்யத்தை இரண்டாகப் பிரித்து மதுராந்தகனுக்கு ஒரு பகுதியும் ஆதித்த கரிகாலனுக்கு ஒரு பகுதியும் கொடுத்து ராஜி செய்து வைக்கவும் அவன் முன் வந்திருக்கிறான்..."

"இது என்ன அக்கிரமம்? இராஜ்யத்தை இரண்டாகப் பிரிக்கவாவது? எங்கள் குலத்து முன்னோர்கள் எவ்வளவு கஷ்டப்பட்டு ஒன்று சேர்த்துப் பெரிதாக்கிய மகா இராஜ்யம் இது?"

"இராஜ்யத்தைப் பிரிப்பதை நீ விரும்ப மாட்டாய்; நானும் விரும்பவில்லை, தாயே! பத்து நாட்களுக்கு முன் இந்த யோசனையைச் சொல்லியிருந்தால் பார்த்திபேந்திரனும் பொங்கி எழுந்திருப்பான். இப்போது அவனே இந்த ஏற்பாட்டுக்கு முதன்மையாக நிற்கிறான்..."

"இது என்ன விந்தை! அந்தப் பழுவூர் ராணியிடம் அப்படிப்பட்ட மாய சக்தி என்னதான் இருக்கும்?"

"இளவரசி! அதை நான் உன்னிடம் கேட்க வேண்டும் என்றிருந்தேன். நீ என்னைக் கேட்கிறாய். போகட்டும்; வந்தியத்தேவன் மட்டும் அவளுடைய மாய சக்திக்கு உட்பட மாட்டான் என்று எதனால் நீ அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறாய்?"

"ஐயா! காரணங் கேட்டால் எனக்குச் சொல்லத் தெரியாது. மனத்துக்கு மனசே சாட்சி என்பார்கள். வாணர் குல வீரன் அத்தகைய துரோகம் செய்ய மாட்டான் என்று என் மனத்தில் ஏனோ நிச்சயமாகத் தோன்றுகிறது."

"அப்படியானால், அதைப் பரீட்சித்துப் பார்த்து விடலாம், அம்மா!"

"எப்படி? என்ன பரீட்சை?"

"காஞ்சிக்கு ஒரு தூதனை நாம் உடனே அனுப்பியாக வேண்டும்: ஆதித்த கரிகாலனுக்கு மிக நம்பிக்கையான ஆளிடம் அவசரமாக ஓலை கொடுத்து அனுப்ப வேண்டும்."

"என்ன விஷயம் பற்றி?"

"சற்று முன்னால், நந்தினியை விஷநாகம் என்று நீ சொல்லிவிட்டு அதற்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டாய். உண்மையில் விஷ நாகத்தை விட அவள் பன்மடங்கு கொடியவள். இந்தச் சோழ குலத்தை அடியோடு நாசம் செய்து பூண்டோடு ஒழித்து விட அவள் திட்டமிட்டிருக்கிறாள்...!"

"கடவுளே! என்ன பயங்கரம்!" என்று குந்தவை கூறியபோது அவளுடைய உள்ளக்கடல் பற்பல எண்ண அலைகளினால் கொந்தளித்து.

"உன் தமையன் ஆதித்த கரிகாலனைக் கடம்பூர் அரண்மனைக்கு அழைக்கும்படி அவள் சம்புவரையர்களைத் தூண்டியிருக்கிறாள். சம்புவரையர் மகள் ஒருத்தியையும் பழுவேட்டரையர் குமாரி ஒருத்தியையும் கரிகாலனுக்கு மணம் செய்விப்பது பற்றிப்

பேசி வருகிறாள். இராஜ்யத்தை இரண்டாகப் பிரித்து ராஜி செய்விக்கும் விஷயத்தையும் அங்கே முடிவு செய்யப் போகிறாளாம். இவையெல்லாம் வெளிப்படையான பேச்சு. ஆனால் அவளுடைய அந்தரங்கத்தில் என்ன நோக்கம் வைத்திருக்கிறாளோ அது யாருக்கும் தெரியாது. எல்லாம் அறிந்தவன் என்று கர்வங் கொண்டிருக்கும் என்னால்கூட அவள் நோக்கத்தை அறிய முடியவில்லை."

"அதைப் பற்றி நான் என்ன செய்ய வேண்டும், ஐயா!"

"ஆதித்த கரிகாலன் கடம்பூர் மாளிகைக்குப் போகாமல் எப்படியாவது தடை செய்ய வேண்டும். அதற்குத்தான் நீயும் நானும் ஓலை கொடுத்து வந்தியத் தேவனிடம் அனுப்ப வேண்டும். நம்முடைய விருப்பத்தை மீறிக் கரிகாலன் கடம்பூர் மாளிகைக்குப் புறப்படும் பட்சத்தில் வந்தியத் தேவனும் அவனுடன் போக வேண்டும். உடம்பைப் பிரியாத நிழலைப் போல் அவன் உன் தமையனைத் தொடர்ந்து காவல் புரிய வேண்டும். நந்தினியைத் தனியாகச் சந்திப்பதற்குக் கூட அவன் இடந் தரக் கூடாது..."

குந்தவை பெருமூச்சு விட்டாள். முதன் மந்திரி கூறுவது எவ்வளவு முக்கியமான காரியம் என்பதை அவள் உணர்ந்தாள். எல்லா விவரங்களும் அறிந்து அவர் சொல்கிறாரா, அல்லது இராஜாங்க நோக்கத்தை மட்டும் வைத்துக்கொண்டு சொல்கிறாரா என்று அவளால் ஊகிக்க முடியவில்லை.

"ஐயா! அவர்களுடைய சந்திப்பைத் தடுப்பது அவ்வளவு முக்கியமான காரியம் என்று ஏன் கருதுகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"அம்மணி! வீரபாண்டியனுடைய ஆபத்துதவிகள் சிலர் சோழ குலத்தைப் பூண்டோடு அழிக்கச் சபதம் செய்திருக்கிறார்கள். அவர்களுக்குப் பெரிய பழுவேட்டரையருடைய பொக்கிஷத்திலிருந்து புதிய தங்கக் காசுகள் போய்க் கொண்டிருக்கின்றன. இதைக் காட்டிலும் இன்னும் ஏதேனும் நான் இதைப் பற்றிச் சொல்ல வேண்டுமா?"

"வேண்டாம்" என்று முணு முணுத்தாள் குந்தவை. சூடாமணி விஹாரத்தில் சுரத்துடன் படுத்திருக்கும் இளவரசனின் நினைவு அவளுக்கு வந்தது. பொன்னியின் செல்வனையும் அபாயங்கள் சூழ்ந்திருக்கலாம் அல்லவா?



"ஐயா! சோழ நாட்டுக்கு விபத்துக்கு மேல் விபத்தாக வந்து கொண்டிருக்கும் இச் சந்தர்ப்பத்தில் தாங்கள் முதன் மந்திரியாயிருப்பது அதிர்ஷ்டவசந்தான்! என் தம்பியின் விஷயமாக என்ன ஏற்பாடு செய்தீர்கள்?" என்று கேட்டாள்.

"சோழ நாட்டிலுள்ள எல்லாச் சிவாலயங்களிலும் விஷ்ணு ஆலயங்களிலும் இளவரசருடைய சுக க்ஷேமத்தைக் கோரிப் பிரார்த்தனை செய்து அர்ச்சனை அபிஷேகம் நடத்தச் சொல்லியிருக்கிறேன். அப்படியே புத்த விஹாரங்களிலும் சமணப் பள்ளிகளிலும் பிரார்த்தனை செய்யப் போகிறார்கள். நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் புத்த பிக்ஷுக்கள் ஒரு மண்டலம் விசேஷப் பிரார்த்தனை நடத்தப் போகிறார்கள். வேறு என்ன செய்யலாம் என்று நீ சொல்கிறாய்?"

சூடாமணி விஹாரத்தைப் பற்றிச் சொல்லும்போது முதன்மந்திரியின் முகத்தில் ஏதேனும் மாறுதல் ஏற்படுகிறதா என்று குந்தவை கவனித்தாள். ஒன்றுமே தெரியவில்லை.

"ஐயா! சூடாமணி விஹாரம் என்றதும் ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. சூடாமணி விஹாரத்தின் மீது பெரிய பழுவேட்டரையர் ஏதோ கோபங் கொண்டிருக்கிறாராம். இலங்கையில் பிக்ஷுக்கள் இளவரசருக்கு முடி சூட்டுவதாகச் சொன்ன செய்தி வந்ததிலிருந்து அந்தக் கோபம் முற்றியிருக்கிறதாம். இளவரசர் காணாமற் போனதற்குப் பழியைச் சூடாமணி விஹாரத்திலுள்ள பிக்ஷுக்களின் மீது சுமத்தினாலும் சுமத்துவார்கள். அதற்குத் தக்க பாதுகாப்பு தாங்கள்தான் செய்ய வேண்டும்" என்று சொன்னாள்.

"உடனே செய்கிறேன், அம்மா! சக்கரவர்த்தியின் கட்டளையுடன் சூடாமணி விஹாரத்தைப் பாதுகாக்க ஒரு சிறிய சைன்



யத்தையே வேணுமானாலும் அனுப்பி வைக்கிறேன். வந்தியத்தேவனைக் காஞ்சிக்கு அனுப்புவது பற்றி என்ன சொல்லுகிறாய்?"

"ஐயா! அவ்வளவு முக்கியமான காரியத்துக்கு வேறு யாரையாவது அனுப்புவது நல்லதல்லவா?"

"உனக்கு மட்டும் அவனிடம் நம்பிக்கையிருந்தால் அவனையே அனுப்ப விரும்புகிறேன். அவனுடைய வீர சாகஸச் செயல்களைப் பற்றியும் தெரிந்து கொண்டிருக்கிறேன். எதற்கும் அஞ்சாத அஸகாய சூரனையே இந்தக் காரியத்துக்கு நாம் அனுப்ப வேண்டும். இன்றைக்கு நான் அரண்மனை முற்றத்துக்கு வந்து கொண்டிருந்தபோது என் கண்ணாலேயே பார்த்தேனே! அந்த வைத்தியனை என்ன பாடுபடுத்தி விட்டான்? நான் குறுக்கிட்டுத் தடுத்திராவிட்டால் வைத்தியர் மகன் யமனுக்கு வைத்தியம் செய்யப் போயிருப்பான்..."

இளையபிராட்டி இதைக் கேட்டுப் பூரிப்பு அடைந்தாள். ஆயினும் சிறிது தயக்கத்துடன், "வீரனாயிருந்தால் மட்டும் போதுமா? படபடப்புக்காரனாயிருக்கிறானே? எவ்வளவு விரைவில் சண்டை தொடங்கி விட்டான்!" என்றாள்.

"அதற்கு வேணுமானால் பின்னோடு என்னுடைய சீடன் திருமலையையும் அனுப்பி வைக்கிறேன். நிதானமான யோசனைக்குப் பெயர்போனவன் ஆழ்வார்க்கடியான்!" என்றார் அநிருத்தர். இளையபிராட்டி தன் மனத்திற்குள், "இவருடைய உள்ளத்தில் இருப்பதைக் கடவுளும் அறிவாரோ, என்னமோ, தெரியவில்லை! ஒற்றனுக்குத் துணையாக ஒற்றன் ஒருவனையே அனுப்பி வைக்க விரும்புகிறார் போலும்!" என்று எண்ணிக் கொண்டாள்.

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

# வானதியின் மாறுதல்

குந்தவை வந்தியத்தேவனைச் சிறையிலிருந்து மீட்டு மறுபடியும் பிரயாணம் அனுப்புவதற்காகப் புறப்பட்டபோது, வானதி எதிரே வந்தாள். இளையபிராட்டியின் அடிபணிந்து நின்றாள்.

"என் கண்ணே! உன்னை விட்டு விட்டு வந்து விட்டேன். இன்னும் கொஞ்சம் முக்கியமான அலுவல் இருக்கிறது. அதை முடித்து விட்டு வந்து விடுகிறேன். சற்று நேரம் தோட்டத்தில் சென்றிரு! ஓடைப் பக்கம் மட்டும் போகாதே!" என்றாள்.

"அக்கா! தங்களுக்கு இனித் தொந்தரவு கொடுக்க மாட்டேன். கொடும்பாளூருக்குப் போக விரும்புகிறேன். அனுமதி கொடுங்கள்!" என்றாள் வானதி.

"இது என்ன, என் தலையில் நீயுமா இடியைப் போடுகிறாய்? உனக்கு என்





பேரில் என்ன கோபம்? உன் பிறந்தகத்தின் மீது திடீரென்று என்ன பாசம்?"

"உங்கள் பேரில் நான் கோபங் கொண்டால் என்னைப் போல் நன்றி கெட்டவள் யாரும் இல்லை. என் பிறந்தகத்தின் பேரில் புதிதாகப் பாசம் ஒன்றும் பிறந்து விடவும் இல்லை. தாயும் தந்தையும் இல்லாத எனக்குப் பிறந்தகம் என்ன வந்தது? எங்கள் ஊருக்குப் பக்கத்தில் உள்ள காளி கோவிலுக்குப் பூசை போடுவதாக என் தாயார் ஒருமுறை வேண்டிக் கொண்டாளாம். அதை நிறை வேற்றுவதற்கு முன் அவள் கண்ணை மூடிவிட்டாள். எனக்கு அடிக்கடி மயக்கம் வருகிறதல்லவா? ஒருவேளை அந்த வேண்டுதலை நிறைவேற்றாததால்தான் இப்படி என்னைப் படுத்துகிறதோ என்னமோ?"

"அதற்காக நீ அவ்வளவு தூரம் போக வேண்டியதில்லை. நானே சொல்லி அனுப்பி அந்த வேண்டுதலை நிறைவேற்றச் சொல்கிறேன்."

"அது மட்டுமல்ல, அக்கா! என் பெரிய





தகப்பனார் இலங்கையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருக்கிறாராம். அவர் தஞ்சையைத் தாண்டிப் பழையாறைக்கு வர மாட்டார். அவர் வரும்போது நான் கொடும்பாளூரிலிருக்க விரும்புகிறேன். அவரிடம் இலங்கையில் நடந்தவற்றையெல்லாம் நேரில் கேட்க ஆசைப்படுகிறேன்!"

"இலங்கையில் நடந்தவற்றைப் பற்றித் தெரிந்து கொள்வதில் உனக்கு என்ன அவ்வளவு ஆசை?"

"அது என்ன அப்

படிக் கேட்கிறீர்கள்? என் தந்தை இலங்கைப் போரில் வீர சொர்க்கம் அடைந்ததை மறந்து விட்டீர்களா?"

"மறக்கவில்லை. அந்தப் பழி இப்போது நீங்கி விட்டது..."

"முழுதும் நீங்கயதாக





எனக்குத் தோன்ற வில்லை. யுத்தம் முடிவதற்குள்ளே அவசரப்பட்டுக்கொண்டு பெரிய வேளார் திரும்புகிறார்."

"அவரை மறுபடி இலங்கைக்குப் போய்ப் போர் நடத்தும்படி சொல்லப் போகிறாயா? அதற்காகவா கொடும்பாளூர் போக வேண்டும் என்கிறாய்?"

"அவ்வளவு பெரிய விஷயங்களைப் பற்றிச் சொல்வதற்கு நான் யார்? நடந்ததைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ளவே விரும்புகிறேன்..."

"ஆகா! உன் மனம் இப்போது எனக்குத் தெரிகிறது. பொன்னியின் செல்வன் இலங்கைப் போரில் புரிந்த வீரச் செயல்களைப் பற்றி உன் பெரிய தகப்பனாரிடம் கேட்க விரும்புகிறாய், இல்லையா?"

"அது ஒரு தவறா, அக்கா?"

"அது தவறில்லை. ஆனால் இத்தகைய சமயத்தில் என்னைத் தனியே விட்டு விட்டுப் போகிறேன் என்கிறாயே, அதுதான் பெரிய தவறு!"

"அக்கா! நானா தங்களைத் தனியே விட்டு விட்டுப் போகிறேன்? என்னைப் போல் தங்களுக்கு எத்தனையோ தோழிகள். தங்கள் கருத்தை அறிந்து காரியத்தில் நிறைவேற்ற எத்தனையோ பேர் காத்திருக்கிறார்கள்..."

"நீ கூட இப்படிப் பேச ஆரம்பித்து விட்டாயா, வானதி? என் தம்பியைப் பற்றிய செய்தி கேட்டு உன் மனம் பேதலித்து விட்டது போலிருக்கிறது. அந்தச் செய்தியைப் பற்றி நீ அதிகமாய்க் கவலைப்பட வேண்டாம்..."

"தங்கள் தம்பியைப் பற்றித் தங்களுக்கு இல்லாத கவலை எனக்கு என்ன இருக்க முடியும், அக்கா!"

"உண்மையைச் சொல்! ஓடையில் நீயாக வேண்டுமென்று விழுந்தாயா? மயக்கம் வந்து விழுந்தாயா?"

"வேண்டுமென்று எதற்காக விழ வேண்டும்? மயக்கம் வந்துதான் விழுந்தேன். தாங்களும் அந்த வாணர் குலத்து வீரருமாக என்னைக் காப்பாற்றினீர்கள்."

"காப்பாற்றியதற்கு நன்றி உள்ளவளாகத் தோன்றவில்லையே?"

"இந்த ஜன்மத்தில் மட்டுமல்ல; ஏழேழு ஜன்மத்திலும் நன்றியுள்ளவளாயிருப்பேன்."

"இந்த ஜன்மம் இத்துடன் முடிந்து போய் விட்டது போல் பேசுகிறாயே? நான் சொல்கிறேன் கேள், வானதி! வீணாக மனத்தை வருத்தப்படுத்திக் கொள்ளாதே! அருள்மொழி வர்மனுக்கு அபாயம் எதுவும் வந்திருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. சற்று முன் அரண்மனை முற்றத்தில் கூடியிருந்த ஜனங்களுக்குச் சொன்னதையே உனக்கும் சொல்லுகிறேன். அன்றொரு நாள் காவேரித்தாய் என் தம்பியைக் காப்பாற்றினாள். அதுபோல் சமுத்திர ராஜனும் அவனைக் காப்பாற்றியிருக்க வேண்டும். சீக்கிரத்தில் நல்ல செய்தியை நாம் கேள்விப்படுவோம்."

"எந்த ஆதாரத்தைக் கொண்டு இவ்வளவு உறுதியாகத் தைரியம் சொல்கிறீர்கள், அக்கா?"

"என் மனத்திற்குள் ஏதோ ஒன்று சொல்லுகிறது. என் அருமைத் தம்பிக்கு ஏதேனும் நேர்ந்திருந்தால் அது என் உள் மனத்திற்குத் தெரிந்திருக்கும். நான் இப்படிச் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருக்க மாட்டேன்..."

"மனம் சொல்வதில் எனக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லை, அக்கா! உள் மனத்திலும் நம்பிக்கை இல்லை; வெளி மனத்திலும் நம்பிக்கை இல்லை!"

"அது எப்படி நீ மட்டும் அவ்வளவு தீர்மானமாகச் சொல்லுகிறாய்?"

"என் உள் மனத்திலும் வெளி மனத்திலும் சில நாளாக ஒரு பிரமை தோன்றிக் கொண்டிருந்தது. தூக்கத்தில் கனவிலும் தோன்றியது; விழித்துக் கொண்டிருக்கும் போதும் சில சமயம் அப்படிப் பிரமை உண்டாயிற்று."

"அது என்ன வானதி?"

"தண்ணீரில் தங்கள் தம்பியின் முகம் அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது. என்னை அழைப்பது போலவும் இருந்தது. கனவிலும் இந்தப் பிரமை அடிக்கடி ஏற்பட்டு வந்தது..."

"அதை ஏன் பிரமை என்று சொல்லுகிறாய்? நமக்கு வந்திருக்கும் செய்திக்கும் உன்னுடைய மனத் தோற்றத்துக்கும் பொருத்தமாக இருக்கிறதே!"

"இன்னும் முழுதும் கேட்டால் அது எவ்வளவு பைத்தியக்காரப் பிரமை என்பதை அறிவீர்கள். ஓடையில் மயக்கம் போட்டு விழுந்தேனல்லவா? அப்போது நான் நாக லோகத்துக்கே போய் விட்டேன். அங்கே ஒரு திருமண வைபவம் நடந்தது..."

"யாருக்கும் யாருக்கும் திருமணம்?"

"அதைச் சொல்ல விருப்பமில்லை, அக்கா! மொத்தத்தில் மனத்தில் தோன்றுவதிலும் கனவில் தோன்றுவதிலும் எனக்கு நம்பிக்கை இல்லை. கண்ணால் காண்பதையும் காதால் கேட்பதையும் தான் இனி மேல் நம்புவது என்று தீர்மானித்திருக்கிறேன்..."

"வானதி! நீ சொல்லுவது முற்றும் தவறு. கண்ணால் காண்பதும் காதினால் கேட்பதும் சில சமயம் பொய்யாக இருக்கும். மனத்திற்குள் தோன்றுவதுதான் நிச்சயம் உண்மையாயிருக்கும். கதைகள், காவியங்களிலிருந்து இதற்கு எத்தனையோ உதாரணங்கள் நான் உனக்குச் சொல்லுவேன்..."

"பிறகு ஒரு சமயம் கேட்டுக் கொள்கிறேன், அக்கா! இப்போது எனக்கு விடை கொடுங்கள்!" என்றாள் வானதி.

இளவரசி குந்தவைக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. இந்தப் பெண்ணுக்கு இவ்வ[illegible]வு தைரியமும் பிடிவாதமும் இடை[illegible] எப்படி ஏற்பட்டன என்று ஆச் ச[illegible]ட்டாள்.

"வானதி! இ[illegible]ன்ன அவசரம்? அப்படியே நீ கட்ட[illegible]யம் ஊருக்குப் போக வேண்டுமென்றாலும், சில நாள் கழித்துப் புறப்படக் கூடாதா? . இப்போது நாடெங்கும் ஒரே குழப்பமாயிருக்குமே? உன்னைத் தக்க பாதுகாப்புடன் அனுப்பி வைக்க வேண்டாமா?"

"எனக்கு என்ன பயம், அக்கா! கொடும்பாளூரிலிருந்த என்னை அழைத்து வந்த பல்லக்குத் தூக்கிகளும் காவல் வீரர் நால்வரும் ஒரு வேலையுமின்றி இத்தனை காலம் இங்கே தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களே என்னைத் திரும்ப அழைத்துக் கொண்டு போய் விடுவார்கள்..."

"அழகாயிருக்கிறது! உன்னை அப்படி நான் அனுப்பி விடுவேன் என்றா நினைக்கிறாய்?"

"உங்களை நான் ரொம்பவும் கேட்டுக் கொள்கிறேன். அக்கா! எனக்குப் பயம் ஒன்றுமில்லை. கொடும்பாளூர் வானதியை இந்த நாட்டில் யாரும் எதுவும் செய்யத் துணிய மாட்டார்கள். அதிலும் இளைய பிராட்டியின் அன்புக்குகந்த தோழி நான் என்பது யாருக்குத் தெரியாது? ஒரே ஒரு காரியத்துக்கு மட்டும் அனுமதி கொடுங்கள். போகும்போது அந்தக் குடந்தை ஜோதிடரின் வீட்டுக்கு இன்னொரு தடவை போய் அவரைச் சில விஷயங்கள் கேட்க விரும்புகிறேன். அவ்விதம் செய்யலாமா?"

"அவரிடம் எனக்குக் கூட வர வேண்டும் என்று ஆசைதான். ஆனால் நீ இவ்வளவு அவசரப்படுகிறாயே?"

"இல்லை, அக்கா! இந்தத் தடவை அவரை நான் தனியாகப் பார்த்து ஜோதிடம் பார்க்க விரும்புகிறேன்."

குந்தவை மூக்கின் மீது விரலை வைத்து அதிசயப்பட்டாள். இந்தப் பெண் ஒரு நாளில், ஒரு ஜாம நேரத்தில், இவ்வளவு பிடிவாதக்காரியாக மாறி விட்டது எப்படி என்று இளவரசிக்குப் புரியவேயில்லை. அவள் பிரயாணத்தைத் தடுத்து நிறுத்த முடியாது என்ற முடிவுக்கு வந்தாள்.

"சரி, வானதி! உன் விருப்பம் போலச் செய்யலாம். நீ பிரயாணத்துக்கு வேண்டிய ஆயத்தம் செய். அதற்குள் சிறையிலிருக்கும் அந்த வாணர் குலத்து வீர குமாரனை விடுதலை செய்து விட்டு வருகிறேன்" என்றாள்.

(தொடரும்)



# ஆஸ்தான கவிஞர்

கல்கி கலெக்ஷன்

அமரர் கல்கி

நாளது ஆகஸ்டு மாதம் 14ந் தேதி மாலை சென்னை ராஜாஜி மண்டபத்தில் ஓர் இனிய திருவிழா நடைபெற்றது. சென்னை மாகாணத்து ஆஸ்தான கவிஞர்களை அரசாங்கத்தார் அன்று அழைத்து மரியாதை செய்தார்கள். கவர்னர் பவநகர் மகாராஜா விழாவுக்குத் தலைமை வகித்தார். வெல்வெட் உறையிட்ட பட்டாக்கத்தி சகிதமாக பவநகர் மகாராஜா சிம்மாசனத்தில் வீற்றிருந்தது பழைய காலத்து ராஜ தர்பார்களை நினைவூட்டியது. பவநகர் மகாராஜாவுக்கு அருகே பவநகர் மகாராணியும் வீற்றிருந்தார். சென்னை மாகாண மந்திரிமார்கள் புடை சூழ்ந்து விளங்கினார்கள். கல்வி மந்திரி மாதவ மேனன் சென்னை சர்க்கார் கல்விக்காகவும் கலைக்காகவும் செய்திருக்கும் காரியங்களைக் கச்சிதமாக எடுத்துச் சொல்லி ஆஸ்தான கவிஞர்களை அன்புடன் வரவேற்றார். அரசாங்கப் பிரதம காரியதரிசி ஸ்ரீ ராமுண்ணி மேனன் ஆஸ்தான கவிஞர் ஒவ்வொருவரையும் பற்றிய வரலாறுகளைக் கட்டியம் கூறும் முறையில் எடுத்துச் சொன்னார். ஆஸ்தான கவிஞர் என்னும் பட்டம் பொறித்த பதக்கத்தைக் கவர்னர் ஒவ்வொரு கவியின் கழுத்திலும் சூட்டி அழகிய சால்வையும் போர்த்தினார். ஆயிரம் ரூபாய் செக் அடங்கிய உறையை ஒவ்வொரு கவிஞர் கையிலும் பிரதமர் குமாரசாமி ராஜா வழங்கினார். பின்னர் கவிகள் உரைநடையிலும், பா நடையிலும் மறுமொழி கூறினார்கள். நாட்டில் தர்மத்தையும் ஒழுக்கத்தையும் நிலை நாட்டுவதே அரசாங்கத்தின் முதன்மையான கடமை என்பதை நினைவூட்டி நாமக்கல் கவிஞர் அழகாகப் பேசினார். காந்தி மகாத்மாவுக்குப் பாமாலை சூட்டிய காரணத்தினாலேயே தமக்கு இந்த ஆஸ்தான கவிப் பட்டம் கிடைத்தது என்று கொள்வதாகக் குறிப்பிட்டு மகாத்மாவுக்குத்

தமது வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்து வாழ்த்தி வணங்கினார்.

## ஐந்து வருஷம் ஏன்?

ஆஸ்தான கவிஞர்களாக நியமிக்கப்படுகிறவர்கள் ஐந்து வருஷத்துக்கு மட்டும் அந்தப் பதவியில் இருப்பார்களாம். பிறகு சர்க்கார் இஷ்டப்பட்டால் மாற்றிக் கொள்ளலாமாம். ஆஸ்தான கவிஞர் பட்டம் ஜில்லா போர்டு அங்கத்தினர் பதவி அல்லது முனிசிபல் சேர்மன் பதவி போன்றது அல்ல என்பதை நாம் குறிப்பிட வேண்டியதாயிருக்கிறது. ஆஸ்தான கவிஞர் ஆகிறவர் அவருடைய ஆயுள்காலம் வரையில் ஆஸ்தான கவிஞராயிருப்பதுதான் உலகமெங்கும் வழங்கும் மரபு. நமது சென்னை மாகாணத்தில் மட்டும் அதற்கு மாறாக ஆஸ்தான கவிஞர் பதவி எதற்காக அற்பாயுள் பெற வேண்டும் என்பது தெரியவில்லை. இந்த மாகாணத்தில் மந்திரிகள் அடிக்கடி மாறுவது இயல்பாயிருப்பதால் ஆஸ்தான கவிகளையும் மாற்ற வேண்டும் என்று எண்ணினார்கள் போலும். கல்விக்கும் கவித் திறமைக்கும் அளிக்கப்படும் பட்டங்களையும் மரியாதைகளையும் தற்காலிகமாகக் கொடுப்பது பெரும் அபத்தம். ஒருவர் 'மகாமகோபாத்தியாயா' என்ற பட்டம் பெற்றால் தொண்ணூறு வயது வாழ்ந்தாலும் அந்தப் பட்டம் அவருக்கு நிலைத்து நிற்கும். ஒருதடவை சங்கீத கலாநிதி ஆனவர் என்றைக்கும் சங்கீத கலாநிதிதான்! மூதன் முதலில் நமது மாகாணத்தில் ஆஸ்தான கவிஞராகியிருப்பவர்களை ஐந்து வருஷக் கவிஞர்களாக வைத்திராமல், ஆயுள் கவிஞராக மாற்றுவது மிகவும் அவசியம்.

## காலி நாற்காலிகள்

நாற்காலி என்பது நாலு காலில் நிற்பதனால் அந்தப் பெயர் அடைந்தது. ஒருவேளை காலியாக இருக்க வேண்டியது நாற்காலி என்ற பொருளும் சொல்லலாமோ என்னும் சந்தேகம் ஆஸ்தான கவிஞர் விழாவுக்குச் சென்றவர்களின் மனதில் தோன்றியிருக்கும். மேடைக்கு எதிரில் பல வரிசை நாற்காலிகள் ஆள் இன்றிக் காலியாக இருந்தன. மற்ற அரசியல் சம்பந்தமான தர்பார்களுக்கு எப்படியோ அழைப்பு அனுப்பிக் கொண்டு போகட்டும். ஆஸ்தான கவிஞர்களுக்கு மரியாதை செய்யும் சபைக்கு இலக்கியப் பற்றுடையவர்கள், அந்தந்த தேச பாஷையில் ஆர்வம் உடையவர்கள், வித்வான்கள், புலவர்கள், நூலாசிரியர்கள், எழுத்தாளர்கள், பொது ஜனப் பிரதிநிதிகளான எம்.எல்.ஏ.க்கள், பிரபல காங்கிரஸ்வாதிகள், அரசியல் பிரமுகர்கள் முதலியோரை அழைக்க வேண்டாமா? ஹை கோர்ட் ஜட்ஜுகள், ஐ.சி.எஸ்.காரர்கள் முதலியோர்களை அழைத்தால் போதுமா? அப்படித்தான் அழைத்தார்களே? அழைத்தவர்கள் எல்லாரும் வந்திருந்தார்களா? வந்திருந்தால் நாற்காலிகள் ஏன் காலியாயிருக்க வேண்டும்? அன்று ராஜாஜி மண்டபத்திற்கு விஜயம் செய்தவர்களில் பாதிப் பேருக்கு மேலே ஆஸ்தான கவிகளைப் பற்றியோ அவர்களுடைய கவிதைகளைப் பற்றியோ அறியாதவர்கள் என்று நிச்சயமாகக் கூறலாம். 'தெரியாதவர்களுக்குத்தானே தெரியப் படுத்த வேணும்? தெரிந்தவர்களுக்குத் தெரியப் படுத்துவானேன்?' என்று திருப்பிக் கேட்கலாம். ரொம்ப நல்லது; அப்படியானால் அடுத்த தடவை இம்மாதிரி இலக்கிய மகாசபைகள் நடத்தும்போது எழுதப் படிக்கத் தெரியாதவர்களை மட்டும் கூட்டி வைத்து நடத்துங்கள்! ●

(கல்கி, ஆகஸ்ட் 21, 1949)

# பாடுவோம்! கொண்டாடுவோம்!

கவி ஒன்று கிடைக்குமானால், அதற்காகத் தனியே ஒரு விழா கொண்டாடலாம் என்று ரஸிக சிகாமணிகள் சொல்லுவார்கள்.

ஒரு கவிஞர் கிடைத்து விட்டால், அதற்காக எத்தனையோ விதமான எவ்வளவோ விழாக்கள் கொண்டாடலாம்.

ஒரு மகாகவி கிடைத்து விட்டாலோ, அந்த நாட்டின் மக்கள் என்ன விதமான கொண்டாட்டம் நடத்துவது என்று தெரியாமல் திண்டாட வேண்டியதாகும்.

• • •

ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் ஒரு நாட்டில் ஒரு மகாகவி தோன்றக் கூடும் என்று இலக்கிய ஆராய்ச்சியாளரும் சரித்திரக்காரரும் திட்டமாய்க் கூறுகிறார்கள்.



குறைந்த பட்சம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இடையறாமல் தொடர்ந்து கலைகளும் இலக்கியமும் வளர்ந்து வந்த நாட்டிலேதான் மூன்று மகாகவிகள் வரிசைக் கிரமத்தில் தோன்றியிருக்க முடியும்.

தமிழ்நாடு அத்தகைய அதிர்ஷ்டம் வாய்ந்த நாடு. இந்த நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் திருவள்ளுவர் என்னும் மகாகவி தோன்றினார். சத்திய வேதம் என்று சொல்லத்தக்க தத்துவ ஒழுக்க நூலை அற்புத சக்தி வாய்ந்த கவிதையில் அமைத்துக் கொடுத்தார்.

வள்ளுவருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு கவிச் சக்கரவர்த்தி கம்பர் அவதரித்தார். உலகத்தில் வேறு எந்த நாட்டு எந்த பாஷைக் காவியத்துக்கும் மேம்பட்டது என்று சொல்லத்தக்க இராமாயண மகா காவியத்தைத் தமிழில் செய்தளித்தார்.

கம்பருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு, நம்முடைய காலத்தில், மகாகவி பாரதியார் தோன்றினார். எத்தனையோ நூற்றாண்டுகள் அடிமையிருளில் கிடந்த நாட்டுக்கும் செத்தவர்கள் போலிருந்த நாட்டு மக்களுக்கும் புத்துயிர் தந்தார். தேச பக்தியையும் சுதந்திர தாகத்தையும் தமிழ் வெறியையும் தன்னம்பிக்கையுடன் கவிதை இன்பத்துடன் கலந்து மக்களுக்கு ஊட்டினார்.

பாரதியார் பாடல்கள் பலவற்றில் அதி ஆச்சரியமான தீர்க்க தரிசன சக்தியை நாம் காண்கிறோம். அவருடைய தீர்க்க தரிசன வாக்குகள் ஒவ்வொன்றாகப் பலித்து வருவதைக் கண்டு கண்டு மகிழ்கிறோம்.

பாரதியார் தம் காலத்தில் கண்ட தமிழ் மக்களைப் பற்றி அவ்வளவாக உற்சாகம் கொண்டுவிடவில்லை. தமிழ் மக்களிடத்திலும் இந்திய மகாஜனங்களிடத்திலும் பற்பல குறைகளைக் கண்டு நைந்துருகி நெஞ்சுகுகி நின்றார்.

**"நெஞ்சு பொறுக்குதில்லையே! – இந்த**
**நிலைகெட்ட மாந்தரை நினைந்து விட்டால்!"**

என்று மனம் பதறிக் கதறினார்.

**"நெஞ்சில் உரமும் இன்றி**
**நேர்மைத் திறமும் இன்றி**
**வஞ்சனை செய்வாரடி – கிளியே**
**வாய்ச் சொல்லில் வீரரடி!"**

என்று ஆத்திரத்தைக் கொட்டினார்.

ஆயினும் இத்தகைய நிலைமையைக் கண்டுவிட்டு உற்சாகக் குறைவு அடைந்து விட்டாரோ? அடியோடு நம்பிக்கை இழந்து விட்டாரோ?

அவருடைய காலத்து 'அறிவாளி'கள்

சிலரைப் போல, "இந்த தேசம் உருப்படவாவது? இந்தியாவுக்கு விடுதலையாவது?" என்று சொல்லிக் கொண்டு இருந்து விட்டாரோ? இல்லவே இல்லை!

அந்த நிலைமையில், அப்படிப்பட்ட மக்களுக்கு மத்தியில் இருந்து கொண்டு, தீர்க்க திருஷ்டியுடன் வருங்காலத்தை நோக்கினார்.

"ஜய பேரிகை கொட்டடா!" என்று முழங்கினார்.

**"ஜயமுண்டு பயமில்லை மனமே - இந்த**
**ஜன்மத்திலே விடுதலை யுண்டு நிலையுண்டு"**

என்று கையடித்துச் சத்தியம் செய்து கொடுப்பது போல் உறுதி கூறினார்.

காரிருளுக்கு மத்தியில் பேரொளி பொங்கி வரும் அறிகுறிகளைக் கண்டார். அடிமைத் தனத்துக்கு மத்தியில் விடுதலையின் உதயப் பிரகாசத்தைக் கண்டு வரவேற்றார்.

இந்தியாவைப் பீடித்திருந்த பீடைகளும் இந்திய மக்களிடம் குடி கொண்டிருந்த இழி குணங்களும் விரைவிலே அகன்று போய்விடும் என்பதை உள்ளுணர்ச்சியினால் மகாகவி பாரதியார் நிச்சயமாய் அளித்தார்.

**"வலிமையற்ற தோளினாய் போ போ போ**
**மார்பிலே ஒடுங்கினாய் போ போ போ"**

என்ற பாடலில், அச்சம் மடமை பலவீனம் முதலிய மக்களின் குறைபாடுகளையெல்லாம் அடித்து விரட்டுவது போல் சபித்து ஓட்டினார்.

**"வேறுவேறு பாஷைகள் கற்பாய் நீ**
**வீட்டு வார்த்தை கற்கிலாய் போ போ போ"**

என்று தாய்மொழிப் பற்றில்லாதவர்களை நாடு கடத்தினார்.

**"ஜாதிநூறு சொல்லுவாய் போ போ போ**
**தருமமொன் றியற்றிலாய் போ போ போ**
**நீதிநூறு சொல்லுவாய் - காசொன்று**
**நீட்டினால் வணங்குவாய் போ போ போ"**

என்று மூட நம்பிக்கையாளரையும் சமூகத் துரோகிகளையும் அதட்டி அடித்தார்.

பின்னர், வருங்காலத்தில் வரப் போகும் உண்மையான பாரத ஜாதியை ஞானக்கண் கொண்டு பார்த்து சக்தி வாய்ந்த சொற்களினால் அற்புதமான கவிதை செய்து வரவேற்றார் : -

**"இளைய பாரதத்தினாய் வா வா வா**
**எதிரிலா வளத்தினாய் வா வா வா**
**ஒளியிழந்த நாட்டிலே - நின்றேறும்**
**உதயஞாயி றொப்பவே வா வா வா**
**களையிழந்த நாட்டிலே - முன்போல**
**கலைசிறக்க வந்தனை வா வா வா**
**விளையுமாண்பு யாவையும் - பார்த்தன்போல்**
**விழியினால் விளக்குவாய் வா வா வா"**

இப்படிப்பட்ட தீர்க்க தரிசனத்துடன் சுதந்திர பாரதத்தை அகக் கண்ணினால் கண்டு வரவேற்புக் கூறிய மகனுக்கு எத்தனை விழாக்கள்தான் நடத்தக் கூடாது? தினந் தினம் ஒரு கொண்டாட்டம் ஊரெங்கும் நாடெங்கும் நடத்தி மகிழலாமே?

பாரதி வாழ்ந்திருந்த காலத்து மக்களின் இலட்சணத்தைப் பற்றி அவரே நன்றாகப் பாடியிருக்கிறார். தெளிவான வசன நடையிலும் "மண்ணுலகம்" என்னும் ஞானரதப் பகுதியில் எழுதியிருக்கிறார்.

ஆகவே, பாரதி வாழ்ந்திருந்த காலத்திலும் அதற்குப் பிற்பாடு சில காலம் வரையிலும் கூடத் தமிழ் மக்களின் பெரும்பாலோர் "பாரதி யார்?" என்றும், "எந்த பாரதி?" என்றும் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இப்போதெல்லாம் அப்படி யாரும் கேட்பதில்லை. "நம்முடைய பாரதியார்!" என்று பெருமையுடன் மார் தட்டிக் கொண்டு சொல்கிறோம். "கவியரசர் பாரதியார்" என்றும் "மகாகவி பாரதியார்" என்றும் போற்றிப் புகழ்கிறோம்; பாருக்கெல்லாம் அவர் பெருமையைப் பறை சாற்றுகிறோம். ●

(கல்கி, செப்டெம்பர் 11, 1949)

# முதல் முதலில்

தானாய்
சீப்பெடுத்து
தலைவாரிக் கொண்டது
எந்த வயதில்?

பால் பற்கள்
கீழ் விழ
சிரிக்கத் தயங்கிய
நிமிடம் நினைவில்லை.

எழுத்துக் கூட்டி
வாசித்த
முதல் கடிதம்
யார் அனுப்பியது?

யார் கையும்
பற்றாமல்
நடக்கத்
துவங்கியதெப்போது?

முதல் முதலில்
நொறுங்கிய
பொம்மை
என்றைக்கு
வீசப்பட்டது?

அம்மாவின்
அணைப்பிலிருந்து
விலகிப் படுக்கப்
பழகிய ஜாமம்
ஞாபகத்திலில்லை.

இம்சிக்கிற
அழகுகளோடு
கடந்து போன
முதல் பெண்ணின்
பெயரென்ன?

அத்தனை
நொடியையும்
அடுக்கடுக்காய்ச்
சொல்லும்
அம்மா கொஞ்சிய
முதல் வார்த்தை
யாருக்குத் தெரியும்!

ஆதாம் ருசித்த
ஆப்பிள்தான்
முதல் பாவம்

ஏவாள் ஈன்ற
குழந்தையே
முதல் புனிதம்

— யுகபாரதி



# வாடிக்கையாளர்களின் திருப்திதான்




இக்காலத்தில் மக்கள் எந்தப் பொருள் வாங்கினாலும் தரமான பொருளையே வாங்க விரும்புகின்றனர். அது சாப்பிடும் பொருளா யிருந்தாலும் சரி, மற்ற எந்தப் பொருளாயிருந் தாலும் சரி. பொதுவாக ஆண், பெண் இருவரும் ஓடி ஓடி உழைக்கும் இந்த நவீன கம்ப்யூட்டர் யுகத்தில் ஒரு வாய் உணவு சாப்பிடுவதற்கே நேரம் இருப்பதில்லை! அப்படியிருக்கும் பொழுது அந்தச் சாப்பாட்டு அரிசியில் கல் பொறுக்க, சுத்தம் செய்ய எங்கிருக்கும் நேரம்! அரிசி என்றில்லை, பருப்பு, புளி, உப்பு, எண் ணெய் இப்படி எல்லா உணவுப் பொருட்களும் சுத்தமாகவும், தரமானதாகவும், விலை மலி வாகவும் இருக்க வேண்டும். அப்படியிருந் தால்தான் நாம் உழைக்கும் உழைப்புக்கும், நம் உடலிற்கும் நல்லது.

"ஆமாம், இப்படி தரமான பொருட்கள் எல் லாம் ஒரே இடத்தில் கிடைக்கின்றதா? ஒவ் வொன்றையும் தேடிப் பிடித்து வாங்க பிரம்ம பிரயத்தனம் செய்ய வேண்டியுள்ளது" என்று அங்கலாய்த்துக் கொள்பவர்களுக்கு இதோ ஒரு நற்செய்தி-

அரிசி விற்பனையில் முப்பது ஆண்டுகளுக் கும் மேலாக ஈடுபட்டுள்ள **கே. சுப்பிரமணியம் & கோ**, சென்னைவாசிகளுக்கு மிகவும் பரிச்சயமானது. "வாடிக்கையாளர்கள் ஒரு முறை குறிப்பிட்ட ரக அரிசியை வாங்கத் துவங்கிவிட்டால், அடுத்த முறை தொலைபேசி மூலம் தங்களுக்கு அளிக்கப்பட்ட பிரத்யேக எண்ணைக் குறிப்பிட்டு எவ்வளவு கிலோ வேண்டும் என்று சொன்னால் போதும், அடுத்த சில மணி நேரங்களில் அரிசி அவரது வீட்டு முகவரியில் டெலிவரி செய்யப்பட்டு விடும்" என்று கூறுகிறார் இந்நிறுவன உரிமையாளர் திரு. **கே. சுப்பிரமணியம்.**

நாங்கள் கொடுக்கும் சரக்கு நயமாக இருப்பதால் மட்டுமே வாடிக்கையாளர் களைத் தக்கவைத்துக் கொள்ள முடி கிறது. வாடிக்கையாளர்களின் திருப்தி தான் எங்களது வெற்றிக்குக் காரணம்" என்று கூறுகிறார் திரு கே. சுப்ரமணியம். அரிசி, கோதுமை மற்றும் இதர தானியங்களைக் கொள்முதல் செய்து அவற்றினை அழகாகப் பிரித்து கல், மண் நீக்கி சுத்தம் செய்து முறையாக பேக் செய்து நியாய விலையில் விற்கப்படுகிறது. பெரிய வணிக வளாகம் போல் அமைந்துள்ள இக்கடையில் விலை மலிவான பொருட்கள் கூட உயர்தரமான நிலையில் கிடைக்கின்றன.

தியாகராய நகரில் இருக்கும் இக்கிளையை, சுப்பிரமணியம் அவர்களின் ஒரே புதல்வரான திரு. **S. வேல்ராஜ்** அவர்கள்தான் கவனித்து வந்தார். எம்.காம் பட்டதாரியான இவர் வியாபாரத்தில் பல யுக்தி களைக் கடைப்பிடித்து அதில் வெற்றியும் கண்ட வர். இந்த இளம் வயதி லேயே மாபெரும் வெற்றி யடைந்த இவர் திடீரென்று ஒருநாள் தன்னை விரும்பும் நல் இதயங்களை விட்டு இறைவனடி சேர்ந்து விட்டார். இதனால் மீளாத் துயரம் கொண்ட சுப்பிர மணியம் அவர்களினால் தொழிலில் முன்பு போல் அதிக ஈடுபாடு கொள்ள முடியவில்லை.



• கே. சுப்பிரமணியம்

இதனையறிந்த டாக்டர் **ஏ. கி. மோகன், எம்.எஸ்.,** தமது டாக்டர் தொழிலை விட்டு தங்கள் குடும்பம் தழைத் தோங்கச் செய்து, தாமும் மருத்துவப் பட்டம் பெற உதவிய திரு. சுப்பிரமணியத்திற்கு உதவிட

# ங்களது வெற்றி!

இந்த வியாபாரத்தில் இறங்கினார். இவர் சுப்பிரமணியத்தின் மூத்த சகோதரரும், அரசியலில் புகழ்பெற்றவருமான ஆற்றலரசு திரு. கே. ஆறுமுகசாமி அவர்களின் தவப் புதல்வராவார்.

தமிழக அரிசி ஆலை அதிபர்களின் சங்கத்திற்கு 15 ஆண்டுகளாக தலைவராக இருந்த தமது தந்தையின் சமூகப் பணியையும் இந்த அரிசி வியாபாரம் பெருக அவர் செய்த முயற்சிகளையும் நினைவுகூர்ந்த டாக்டர் ஏ.சி. மோகன் கூறுகிறார், "வாடிக்கையாளர் மத்தியில் இந்நிறுவனத்துக்குப் பெயரும் புகழும் உள்ளது. வாடிக்கையாளர்களின் ஆதரவினாலேயே இந்த அளவுக்கு வளர்ந்துள்ளது. தம்பி திரு. வேல்ராஜ் மேற்பார்வையில் கட்டடமாக எழுப்பிய இப் புதிய ஷோரூமை அவரது விருப்பப்படி நிர்வகிப்பதே நான் அவருக்குச் செய்யும் நன்றிக் கடனாக இருக்கும்.

"நாங்கள் விற்கும் தரமான அரிசியை வாங்கும் ஏராளமான வாடிக்கையாளர்களின் விருப்பத்திற்கேற்ப எல்லா உணவுப் பொருட்களும் ஒரே இடத்தில் கிடைக்கும்படி முடிவு செய்து வாடிக்கையாளர்களின் வசதிக்கேற்ப தியாகராய நகரில் 47, சௌத் வெஸ்ட் போக் ரோட்டில் இந்தப் புதிய ஏ.சி. ஷோரூமை துவக்கி வெற்றியுடன் நடத்திக் கொண்டு வருகிறோம்.

"மேலும், இங்கு கிடைக்காத பொருட்களே இல்லை எனலாம். ஏ.சி. சூப்பர் மார்க்கெட் வடிவில் உள்ள சௌத் வெஸ்ட் போக் ரோடு, தி.நகர் கிளையில் தரமான அரிசி, பருப்பு அனைத்து தானியங்கள் மட்டுமின்றி சோப்பு, வாஷிங் பவுடர், பேன்சி பொருட்கள், கிஃப்ட் பொருட்கள், ஸ்னேக்ஸ், கூல்டிரிங் வகைகள், ஐஸ்கிரீம், அழகு சாதனப் பொருட்கள், காய்கறி வகைகள் வரை ஃப்ரஷ்ஷாக விற்பனை செய்யப்படுகின்றது. வாடிக்கையாளர்கள் இங்கு வர வேண்டும் என்று கூட அவசியமே இல்லை. தொலைபேசியில் தகவல் தெரிவித்தால் போதும். உடனே அவர்களது வீட்டு முகவரிக்கு எல்லாவற்றையும் டெலிவரி செய்து விடுகிறோம். அனைத்து Visa மற்றும் Master Credit கார்டுகளும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

"வாடிக்கையாளர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக நாங்கள் விளங்குகிறோம். நாங்கள் அவர்களுக்குச் செய்யும் சேவையைப் பார்த்து நிறையபேர் எங்களிடம் விரும்பி வந்து பொருட்கள் வாங்குகிறார்கள்." இதனால்தான் நாங்கள் இத்தொழிலை வெற்றியோடு நடத்தி வருகிறோம் என்று கூறுகிறார் டாக்டர் ஏ.சி. மோகன்.

"வாடிக்கையாளர் வீடுகளுக்கு டெலிவரி செய்ய குறைந்த தொகையே டெலிவரிக் கட்டணமாக வசூலிக்கப்படுகிறது. இதற்கென்றே பிரத்யேக வேன்கள், டிரை சைக்கிள்கள் உள்ளன. சமயத்தில் எதுவுமில்லையென்றாலும் எங்களது காரில் அவற்றை டெலிவரி செய்துவிடுவோம். வாங்கிச் சென்ற பொருட்களில் ஏதாவது குறைகள் இருந்தால் உடனே அந்தப் பொருளையும் டெலிவரிக் கட்டணம் ஏதுமின்றி வீட்டிற்குச் சென்றே மாற்றித் தருகிறோம்.



• ஏ.சி. மோகன்

''இங்கு விற்பனை செய்யப்படும், அரிசி மற்ற தானிய வகைகளின் தரத்தைச் சோதிப்பதற்காகவே ஒருவரை நியமித்திருக்கிறோம். சோதனை முடிவு திருப்திகரமாக இருந்தால் மட்டுமே அவற்றை கடைகளில் விற்பனைக்கு வைக்கிறோம்.

"கோதுமை மாவு அரைப்பதற்கென்று பிரத்யேக இயந்திரம் உள்ளது. பஞ்சாப் கோதுமை மாவை ஒரு வாரத்துக்குள் சமைத்தால் மட்டுமே உயரிய சுவை இருக்கும். இதற்காக ஒரு வாரத்துக்குத் தேவையான கோதுமையை மட்டுமே அரைத்து பேக் செய்து விற்பனை செய்கிறோம். அதனால் அவை அதிகமாக விற்கிறது. இப்படி ஒவ்வொரு பொருளையும் எங்கள் வீட்டிற்கு எந்த விதத்தில் பயன்படுத்துகிறோமோ அதே வகையில் வாடிக்கையாளர்களுக்கும் நாங்கள் செய்து கொடுக்கிறோம்" என்று வியாபார ரகசியத்தை வெளியிடுகிறார் ஏ.சி. மோகன்.

அரிசி மற்றும் வணிக வியாபாரத்தில் இன்று கொடி கட்டிப் பறக்கும் சுப்பிரமணியம் & கோவிற்கு வண்ணாரப்பேட்டை மற்றும் தியாகராய நகரில் இரண்டு கிளைகள் உள்ளன. இவர்களது வெற்றியின் பிரதான ரகசியம் வாடிக்கையாளர்களின் திருப்திகரமான சேவைதான்!

இனி அரிசி மட்டுமில்லாமல் மற்ற அனைத்து உணவுப் பொருட்களையும் தரமான மலிவான விலையில் நம்பிக்கையுடன் வாங்க ஒரே இடம் "சுப்பிரமணியம் & கோ"தான்.

வாருங்கள் வாடிக்கையாளர்களே! மகிழ்ச்சியுடன் உங்கள் ஆதரவை பெருக்குங்கள்.



# ஒரு காதல்

இரவு ஒன்பது மணிக்கு வீட்டில் வைத்து தேவியைப் பார்த்தேன்.

நான் சட்டை இல்லாமல் வெளியே வந்திருந்தேன். என் அறையைத் திறக்க வழியில்லை. சாவியைத் தொலைத்து விட்டேன். சும்மா உலவுவதற்கு வந்து, நேர்ந்தது.

வழியில் தேவியின் தம்பியைப் பார்த்தேன். வீட்டில் ஒரு கொத்து நிறையச் சாவிகள் உண்டு என்றும் அதைப் பரீட்சித்துப் பார்த்தால் ஏதாவது பொருந்தும் என்றும் அவன் சொன்னான்.

நாங்கள் போனோம். நான் இருட்டில் படியிலேயே நின்றேன். அவன் உள்ளே போய் சாவிக் கொத்தைக் கொண்டு வந்து தந்தான். நான் வாங்கிக் கொண்டு நடந்த போது அவள் தம்பி கூப்பிட்டான். தேவி கூப்பிடச் சொல்லி இருக்கிறாள். ஒரு சிறிய

புத்தகத்தைத் திருப்பித் தரும் நோக்கத்தில்.

வேண்டும் என்று சொல்லி நான் நின்றேன். உள்ளே வரச் சொன்னாள். சென்றேன். இருவரும் பேசினோம். என் வேஷத்தைப் பற்றி விசாரித்தாள்.

அறை பூட்டி இருக்கிறது. சட்டையும் மற்றதும் எடுக்க வழியில்லை.

"என்கிட்டே ஒரு வேட்டியும் சட்டையும் இருக்கு. துவைச்சது" என்றாள்.

"வேண்டாம்" என்றேன்.

"வேணும்" என்றாள்.

தேவி உள்ளே போனாள். சற்று நேரம் கழித்து அவள் தம்பி அவற்றோடு வந்தான்.

"வேணாம் தம்பி."

"சே, இது என்னோடது பஷீர்."

இல்லையென்று நான் அறிவேன். தேவி ஒரு கதர் வேட்டியும் சால்வையும் அணிந்து ஆலயத்துக்குப் போவதை நான் பார்த்திருக்கிறேன். எனினும் அவற்றை ஏற்றுக் கொண்டேன். சாவிக் கொத்தில் ஒரு சாவி பொருந்த, அறையைத் திறந்து பெட்டிக்குள் அவற்றைப் பத்திரப்படுத்தினேன்.

**6.2.46.**

காலையில் எட்டு மணிக்கு நான் அவள் வீட்டிற்குச் சென்றேன். தேவி மாடியில் ஜன்னல் அருகே இருந்தாள்.

"தம்பி இருக்கானா?" என்று கேட்டேன்.

# டைரி

"இல்லே" அவளுடைய அம்மா.

மாடியில் இருந்து தேவி சல்யூட் செய்தாள்.

நான் வேதனையோடு அகன்றேன். காலை முதல் எதுவும் செய்ய முடியவில்லை. ஆறரை மணிக்கு அவள் தம்பி வந்தான். சினிமாவுக்குக் கூப்பிட்டான். நான் போகவில்லை. அவன் அகன்றான்.

நான் நேரே நடந்தேன்.

இடைவழியில் சாவித்திரியும் தேவியும்! தேவியின் கையில் ஒரு குழந்தை. சாவித்திரியின் கையில் இருந்த பூவை வாங்கி நான் தேவியின் கையில் இருந்த குழந்தையிடம்



கொடுத்தேன். சாவித்திரி போய்விட்டாள்.

"பஷீர், கூடக் கூட வராதீங்க" என்றாள் தேவி.

"இல்லே."

நாங்கள் பாதி வழியில் நின்றோம்.

"அறுபது ரூபா சம்பளத்திலே திருச்சியிலே வேலை கெடைச்சிருக்கு. ஏத்துக்கவா?"

"ஏத்துக்கோ."

"பற்றாக்குறையை நீங்கதான் பாத்துக்கணும்."

"பார்க்கலாம்."

தேவி குழந்தையைப் பார்த்து அதனிடம் "அண்ணான்னு கூப்பிடு" என்றாள். நாங்கள் சிரித்தோம். மேற்கே சந்திரகலை தெளிந்திருந்தது. தேவி அணிந்திருந்த சாரி, வெள்ளையில் அகலவாட்டில் 'டார்க்-பிங்க்' கோடுகள் உள்ளது.

"இதான் உனக்குப் பிடிச்ச சாரியா?"

"இல்லே."

அப்போது செளமினி வந்தாள். சிரித்துவிட்டுக் கோயிலுக்குப் பேகிறவள். அவள் நகர்ந்ததும் பின்னாலிருந்து சொன்னேன்.

"செளமினி.. எனக்காகப் பிரார்த்திச்சுக்கோ! எனக்குக் கொஞ்சம் முடி வளரணும்னு!"

"ஓ, வழுக்கைன்னாலும் ஒரு குழப்பமும் இல்லியே" இரண்டு மூன்று அர்த்தம் தொனிக்கும் வார்த்தைகள். செளமினி போய் விட்டாள்.

"புறப்படுங்க. திங்கட்கிழமை ஆறரை மணிக்குப் பார்ப்போம். அதுக்கு முன்னாடி வராதீங்க."

நான் கிளம்பினேன்.

திரும்பிப் பார்த்தபோது அவள் வருத்தத்தோடு நின்றிருப்பதைக் கண்டேன்.

இருவரும் சிரித்துக் கொண்டோம். பிறகு நான் தேவியைப் பார்க்கப் போகவில்லை. சில நாட்கள் கழிந்தன.

திடீரென்று தேவியிடம் இருந்து ஒரு

தமிழில் : வையவன்

கடிதம். முழுக்க ஆங்கிலத்தில்.

டியரஸ்ட்.

தயவு செய்து என்னை திங்கட்கிழமை காலை சரியாக 10.45க்கு .................. இடத்தில் சந்திக்கவும். கதவைத் திறங்கள். நான் அங்கே இருப்பேன்.

நன்றி

உங்கள்
தேவி.

திங்கட்கிழமை பத்தரை மணிக்கு நான் போனேன். படியேறினேன். வீட்டுக்குள் இருந்து தேவி சொன்னாள்.

''நீங்க கதவைத் திறந்து உள்ளே உட்காருங்க. நான் வர்றேன். வீட்டிலே யாராவது இருக்காங்களாண்ணு பார்க்கணும். என்னோட அண்ணன் இருக்கான்.''

நான் போய் கதவைத் திறந்து உள்ளே போனேன். சற்றுக் கழித்து தேவி வேறொரு வழியாக ஒரு ஏணி வைத்து சுவர் ஏறிப் பிறகு அங்கிருந்து இறங்கி உள்ளே வந்தாள்.

மற்றொரு வீட்டின் மொட்டை மாடியில் இருந்து ஓர் இளைஞன் அதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

தேவி வீட்டின் குளியல் அறைக்குள் நுழைந்தாள். நானும் போனேன். யாரோ பார்க்கிறார்கள் என்ற விஷயத்தைச் சொன்னேன்.

''ஐயோ சங்கடமாப் போச்சே'' என்றாள்.

பிறகு உட்கார்ந்தாள். கண்ணாடியை எடுத்துக் கீழே வைத்தாள்.

நான் நெருங்கிச் சென்று அவள் முகத்தைப் பிடித்து கண்களில் முத்தமிட்டேன். தேவி ஒரு கவரை என்னிடம் நீட்டினாள்.

''வாசிச்சுப் பார்த்துட்டு என்னை நேசிக்கணும்னு தோணினா நேசியுங்க. கடிதத்தை ஏப்ரல் முதல் தேதி போஸ்ட் பண்ணணும்.''

இன்று மார்ச் 25 என்று தோன்றியது.

அறைக்கு வந்து கடிதத்தை வாசித்தேன். ஆஜ்மீரில் வசிக்கும் அண்ணனுக்கு, தேவி எழுதியது. எல்லாம் அதில் உண்டு; பழைய காதல் விவகாரம் உட்பட.

ஓம்.

மை டியரஸ்ட் அண்ணா,

இது மூன்றாம் முறை. என்னோட இதயத்தைத் திறந்து உனக்குக் கடிதம் எழுத அவசியப்படுவது. சிவப்பு மையில் ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய கடிதம் கோழிக்கோட்டிற்கு. அடுத்தது எர்ணாகுளத்துக்கு.

நான் அப்போது எதையும் மனம் திறந்து எழுதவில்லை. இந்தக் கடிதம் முழுவதையும் படித்து முடிக்கும்போது நீ பச்சாதாபம் கொள்வாய். ஆனால் இனி என் பொருட்டு, நீ பரிதவிக்க வேண்டி வராது என்று ஆறுதல் அடையவும்.

இதை ஒரு கதை வாசிப்பது போல வாசிக்கவும். முடிந்தால் ரவி அண்ணாவிடமும் காண்பிக்கவும். பிறகு, இங்கே வரும் போது, பெரியண்ணாவிடமும் தம்பியிடமும் காண்பிக்கவும்.

ஒரு பெண்ணுக்கு, மிகவும் முக்கியமானது காலம். அவளுடைய பதினைந்து வயது முதல் இருபத்தி ஐந்து வயதுவரையுள்ள காலம்.

அவளுடைய ஆசைகள், லட்சியங்கள், உணர்ச்சிகள், ஆவேசங்களின் மொட்டுகள் மலரும் காலம். அது பூக்கும் காலம். ஆனால் என்னைப் பொறுத்தவரை அது விரக்தியின், அழுகையின் காலம் மட்டுமாய் இருந்தது. அப்படி மாற்றிய ஒவ்வொரு அணுக்கள் அளவிலான நிகழ்ச்சிகளும் எனக்குள்ளே ஆத்மார்த்தமாக ஏற்படுத்தியிருக்கும் பழி வாங்கும் உணர்வோடு இந்தக் கடிதத்தை எழுதுகிறேன்.

இப்படி வெளிப்படையாக எழுதுவதற்கு மன்னிக்கவும்.

எனக்குப் பரீட்சை நெருங்கி விட்டது. ஏப்ரல் முதல் தேதி. நான் போகிறேன். ஆனால் எதையும் படிக்காமல்...

**அஞ்சலி**

* **இதுவரை இழந்ததில் ஈடு செய்ய முடியாதது உங்கள் இறுதி மூச்சு.**

**— எம்.ஜி. கன்னியப்பன்**

அப்போது தான் இதை எழுதுகிறேன்.

அந்த சிவப்பு மையில் எழுதிய கடிதம். அப்புவின் எல்லா தவறுகளையும் குறைகளையும் ஒதுக்கிவிட நான் தயாராய் இருந்தேன். நிர்மலமான நேசத்தை அனுபவபூர்வமாய் அறிந்தும் நீ கண் மூடிக் கொண்டாய்.

உங்கள் ஒவ்வொருவருடைய வாழ்வின் ஒவ்வொரு அத்தியாயத்தையும் வாசித்துப்பார். மனிதர்களுக்கு – குறிப்பாக ஆண்களுக்குச் சில விட்டுக்கொடுத்தல்கள் இல்லாமல் வேறு வழியில்லை.

நான் தயாராய் இருந்தேன். அப்பு ஆறு ஆண்டுகள் உறுதியோடு எனக்காகக் காத்திருந்தான். நான் யாரையும் எல்லோரையும் உதறி எறிந்து விடாமல் திருப்திப்படுத்தவே என் வாழ்வைப் பலியாக்குவது என்று உறுதி செய்து கொண்டேன்.

நான் அப்புவை நிராகரித்தேன். இந்த விஷயத்தில் பலர் அவனைக் குற்றவாளி ஆக்குவதை நான் அறிவேன். ஆனால் அப்பு நிரபராதி.

அந்தக் காலத்தில் நான் ஒரு கோழையாக இருந்தேன். முழுக்க ஒரு மணி நேரம் அப்புவோடு பேச, மனம் திறந்து உரையாட எனக்கு இயலவில்லை. அப்பு இன்று அன்னியமானான்.

பத்தோடு பதினொன்று.

கஷ்டம்! அப்புவின் திருமணம் நடந்தது என்று கேள்விப்பட்டேன். கொஞ்சம் 'ஸயனைட்' வாங்கி நான் ஐந்து ரூபாய் செலவழித்தேன். அன்றே அதை விழுங்கி இருந்தால் இப்படி வெந்து வெந்து சாகவேண்டி இருந்திருக்காது. அன்று என் அபிமானம் சுடர் விட்டு எரிந்தது.

மனிதருக்கே இயல்பான தேவைகளும் உணர்ச்சிகளும் இல்லாத ஒரு சைத்தானாக என்னைப் பற்றி எனக்கு வேண்டியவர்கள் கருதினார்கள்.

குட்டிக் கிருஷ்ணமேனனின் கல்யாண ஆலோசனை நெருக்கடியாக வந்தபோது விலாசினியைக் கட்டிக் கொள் என்று அப்பா உன்னைக் கேட்டாரே!

என் சௌமினி – சாதுப் பெண். இன்று அவள் ஓர் எலும்புக்கூடு. கல்யாண வயசு வந்த ஒரு பெண்ணின் நிச்சயிக்கப்பட்ட திருமணம் தாய் தந்தையர் உதாசினத்தால் நடக்காமல் போனதால் விளைந்த நிராசை! அதை அனுபவித்தால்தான் தெரியும்.

அவளுக்குத் திருமணம் நடந்திருந்தால் என் பழிவாங்கும் தீ இவ்வளவு சுடர் விசிப் படர்ந்து எரியாது. அப்பாவின் அந்த அலட்சியம், ஒரு தலைப்பட்சமான நடத்தை என் சவத்தைச் சிதையில் வைக்கும் போதும் மறையாது. நான் மிகவும் மதிக்கும் என் தந்தை மீது பழிவாங்கும் வெறி கொண்டிருக்கும்.

அண்ணா நெற்றியைச் சுளிக்காதே!

அப்புவை நான் திருமணம் செய்து கொள்ளாமல் போனதில் எனக்கு, அவ்வளவு மனோ வேதனை உண்டு. ஆனால் அன்று அதைப் புன்னகையோடு சகிக்கத் தயாராக இருந்தேன்.

எல்லாம் என் அண்ணன்களின் திருப்திக்காக, என் குடும்பத்திற்காக, என் சாதிக்காக.

ஆனால் எதற்காக ஒரு உத்தியோகத்திற்கு என்னை அனுப்பவில்லை? பெயரும் புகழுமுள்ள ஒரு சமூக சேவகியாக நான் எவ்வளவு ஆசைப்பட்டேன்!

நான் ஏன் சம்பாதிக்க வேண்டும்? நான் கொடுத்த பணத்தை பாங்கிலே போட்டு வை என்று என் தந்தை என்னிடம் சொன்னார்.

நான் அவரை நம்பவில்லை என்று பகவானே – அவரே என்னிடம் சொன்னார்! நான் எவ்வளவு பாடுபட்டு செல்வாக்குள்ள அந்த செலக்ஷனை வாங்கினேன்.

இங்கிலீஷிலும் மலையாளத்திலும் ஒரு நல்ல மேடைப் பேச்சாளியாக எனக்கு, ஓர் அருமையான வாய்ப்பு கிடைத்திருந்தது. கொச்சி எம்.எல்.ஏ. வேட்பாளராக பெண்கள் சார்பாக நிற்க உனக்குச் சம்மதமா என்று என்னை அவர்கள் கேட்டிருந்தார்கள்.

(தொடரும்)



# அந்தப்புரம்

தியேட்டருக்கு வந்தப்புறம் தான் தெரிகிறது, எந்தப்புறம் திரும்பினாலும் ரத்தம் என்று.

அடி, தடி, வெட்டு, கொலைப் படத்துக்கு இப்படியொரு மயிலிறகு டைட்டிலா என்று கேட்கலாம். இந்தப் புறத்திலிருந்து அதற்கு பதில் கிடையாது!

பிரகாஷ் ராஜும் மன்சூரலிகானும் பங்காளிகள். விதிப்படி, மோதிக் கொள்கிறார்கள். பலி யாவது பிரகாஷ் ராஜின் மகன் சாய்குமார்.

யுத்தபூமியில், கணவன் இறந்து, தனித்து விடப் படும் செளந்தர்யாவைக் காப்பாற்றிக் கரை சேர்ப்பவர் பார்த்திபன்.



இந்தக் கால் கடுதாசிக் கதையைக் கசாப்புக் கடை வாசனையுடன் தயாரித்திருக்கிறார்கள்.

ஊருக்கு ராஜா மாதிரி பிரகாஷ் ராஜ். இன்ஸ்பெக்டர் முதல் அரசியல்வாதி வரை பிரகாஷ்ராஜைப் பார்த்து பயத்துடன் பணிந்து கும்பிடுகிறார்கள். பிரகாஷ்ராஜ், சுற்றிலும் பத்துப்பேர் துப்பாக்கி சகிதம் காவலுக்கு நிற்க, வீட்டின் கோட்டைக் கதவைப் பூட்டிக் கொண்டு, பத்திரமாய், 'வீரமுடன்' உள்ளே இருக்கிறார். ஆனாலும், புதுவிதமான ரோல். கண்ணை உருட்டி, அட்டகாசமாய்ச் சிரித்துக் கொண்டு, வசனம் பேசும் ஸ்டைல் நன்றாகத்தான் இருக்கிறது.

படம் மொத்தத்தையும் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு, நடிப்பில் வலம் வந்திருக்கிறார் செளந்தர்யா. ஏயப்பா! இத்தனை திறமையா இவருக்குள்?

'ஷோலே' அமிதாப்பச்சன் மாதிரி பார்த்திபன். முதுகில் குண்டு பாய்ந்தும், சிரித்தபடி வசனம் பேசி, தன் வலி செளந்தர்யாவுக்குத் தெரியாமல் கொஞ்சம் ஓவராய் நடித்திருந்தாலும், உண்மையில் பார்த்திபன் வந்த பிறகுதான் படம் களை கட்டுகிறது.

மாற்றி மாற்றி வெட்டு குத்து. வன்முறை இவற்றிற்கிடையில் இளையராஜாவின் இசை. எந்தப் பாடலோடும் ஒன்ற முடியவில்லை.

பழைய 'தேவர் மகனை' புதிதாகத் துவைத்து எடுத்திருக்கிறார்கள். அலசுவதற்குப் பயன்பட்டிருப்பது, தண்ணீரல்ல, ரத்தம்!

— கே.பி.எஸ்.



மேஷராசிக்காரரான பத்திரிகையாளர் செல்லப்பா, இந்த வாரம் வெளியூர் பயணங்களைக் கட்டாயம் தவிர்க்கணும்!

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கடுமையான உழைப்பு, மனச்சங்கடம், காரிய தாமதம்... இதெல்லாம் இந்த வாரம் தவிர்க்க முடியாத விஷயங்களா இருக்கும். குடும்ப ஆரோக்கியத்தில் அதிக கவனம் செலுத்த வேண்டியிருக்கும். செலவு அதிகமா இருந்தாலும் பண விஷயம் சீரான முறையில் இருக்கும் என்பது நல்ல விஷயம். கூடவே, நண்பர்களும் உறவினர்களும் உதவிக்கு வருவாங்க. சிலர் சில சாதனைகளைச் செய்கிற வாய்ப்பும் உண்டு. வீண் வம்பு தும்புகளுக்குப் போயிடாதீங்க. பயணமும் வேண்டாம்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

சில பிரச்னைகள் இதுவரை தீராமல் இருந்திருக்கும். அதெல்லாம் இந்த வாரம் சரியாயிடும். திறமை கூடும் வாரம் இது. வழக்கு விவகாரங்களில் உங்களுக்குச் சாதகமான பலன்கள் ஏற்படும். சட்டம், காவல், இராணுவத் துறையினருக்குப் பாராட்டு கிடைக்கும். எல்லோருக்குமே பண விஷயம் திருப்திகரமா இருக்கும். செலவும் அதிகமாகவே இருக்கும். உஷாரா இருங்க. சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் வரலாம்! குழந்தைகள் நலனில் கவனம் காட்டுங்க. வியாபாரிங்க உஷாரா இருக்கணும்.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்க புத்திசாலித்தனமும் செயல் திறமையும் பளிச்சிடும் வாரம் இது. குடும்பத்தில் சுப காரியங்கள் நடப்பதற்கான ஏற்பாடுகள் நிகழும். கடிதப் போக்குவரத்து நல்ல சேதிகளைக் கொண்டு வரும். விருந்துகளில் கலந்து கொள்கிற வாய்ப்புகள் கிடைக்கும். பண விஷயம் திருப்திகரமா இருக்கும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் உண்டு. டி.வி, ரேடியோ போன்ற தகவல் தொடர்பு சாதனங்களில் பணிபுரிபவர்களுக்கு கிரேட் உயரலாம். புது ஆளுங்ககிட்ட உஷாரா இல்லேன்னா கைப்பொருளை இழக்க நேரிடலாம்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

பல கிரகங்கள் உங்களுக்குச் சாதகமா இல்லாததால, பெரிய பெரிய காரியங்களைச் செய்யறதுக்கு இது உகந்த வாரம் அல்ல. சின்னக் காரியமானாலும் நிதானமா செய்ய வேண்டியது அவசியம். பிறருடைய ஆலோசனை கேட்டுச் செய்யறதும் நல்லது. விருந்து, கேளிக்கைகளில் கலந்துக்குவீங்க. கணவன் - மனை விக்குள் விட்டுக் கொடுத்தல் அவசியம். பயணம் வேண்டாம். விளையாட்டு வீரர்கள் எச்சரிக்கையா இருக்கணும். புது சிநேகமெல்லாம் வேண்டாம். பண நெருக்கடிக்கும் சான்ஸ் இருக்கு.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்கள் அந்தஸ்து உயரும் வாரம். புத்திசாலித்தனம் + செயல் திறமை இரண்டையும் யூஸ் பண்ணி சில சாதனைகளை செஞ்சு காட்டப் போறீங்க. குடும்பத்தில் கல்யாணப் பேச்சு அடிபடும். பொருளாதார விஷயத்தில் வளர்ச்சி தெரியும். வி.ஐ.பிகளின் தொடர்பு மிகவும் உபயோகமா இருக்கும். எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள், பத்திரிகையாளர்களுக்குச் சிறு சிறு பிரச்னைகள் வரும். வீண் செலவுகளைத் தவிர்க்க வேண்டியது அவசியம். அரசியல்வாதிகளுக்குப் புகழ் பரவும் வாரம்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

உங்க பர்சனாலிடி பளிச்சிடும் வாரம்னே சொல்லலாம். கவர்மெண்ட் காரியங்களில் நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். அரசியல்வாதிகளுக்கு செல்வாக்கு உயரும்.

வியாபாரிகளுக்கு வளர்ச்சி உறுதி. சேல்ஸ் ரெப்களுக்கு விற்பனை அதிகரிக்கும். எழுத்துத் துறையில் உள்ளவர்களுக்குப் புகழ் கூடும். ஆபீஸுக்கு லேட்டா போய் மெமோ வாங்கறது ஆபத்து. பேச்சில் நிதானம் காட்டலேன்னா வீண் வம்புகளில் மாட்டிக்குவீங்க. கொடுக்கல் வாங்கல் வேண்டாம்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

நல்லவங்களோட நட்பு கிடைக்கும். அதனால் உங்கள் வாழ்க்கையில் நல்ல திருப்பம் ஏற்படும். வரவேண்டிய பாக்கிகளெல்லாம் இந்த வாரம் வசூலாயிடும். நுட்பமான அறிவுத் திறனால் சில சாதனைகள் புரியும் சான்ஸும் இருக்கு. வியாபாரிகளுக்கு வளர்ச்சி தெரியும். புதுப் புது பொருள்களை வாங்கற சான்ஸும் இருக்கு. வெளிநாட்டுச் செய்தியால் உற்சாகம் பிறக்கும். புது ஆளுங்க கூட உங்களுக்கு உதவ முன்வருவாங்க. சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டாலும் ஊதித் தள்ளிடுவீங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

அரசாங்க விவகாரங்கள் ஏதும் பெண்டிங் இருக்கா? இந்த வாரம் நல்ல திருப்பம் ஏற்படும். கணவன் - மனைவிக்குள் பரஸ்பரம் உதவியும் ஊக்கமும் கிடைக்கும். சிக்கலான காரியமாக இருந்தாலும் யோசிச்சுச் செயல் பட்டீங்கன்னா வெற்றி உறுதி. சிலருக்கு டிரான்ஸ்ஃபர் அல்லது புரமோஷன் கிடைக்கலாம். உத்தியோகஸ்தர்கள் ஏனோ தானோன்னு வேலை செஞ்சா சிக்கலில மாட்ட வேண்டியிருக்கும். கொடுக்கல் வாங்கலில் உஷாரா இல்லேன்னா, கைப்பொருளை இழக்க வேண்டி வரலாம். புது முதலீடுகளும் வேண்டாம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

மனத்தில் தெளிவும் செயலில் வேகமும் தெரியும். பிரண்ட்ஸுங்க உதவுவாங்க. எழுத்துத் துறையினரின் எண்ணங்கள் நிறைவேறும். கலைத்துறையினருக்கு வெற்றிப் படிகளில் ஏறும் வாய்ப்பு உண்டு. பெண்களுக்கு உற்சாகமான வாரம். சில மாணவர்கள் பெயர் சொல்லும்படியான செயல்களைச் செய்வாங்க. பண விஷயத்திலும் பிரச்னை இருக்காது. வெளிநாட்டுத் தொடர்பு ஆதாயம் தரும். உத்தியோகஸ்தர்களுக்கு ஊதிய உயர்வு கிடைக்கும். வேலையில்லாதவர்களுக்கு நல்ல வேலை கிடைக்கும். சிலர் வெளிநாட்டுப் பயணம் மேற்கொள்ளவும் கூடும்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

எதிலும் சிறப்பான பலன்களை எதிர்பார்த்து ஏமாந்துடாதீங்க. கிரக பலன் அப்படி! தடங்கலும் தாமதமும் தவிர்க்க முடியாத வாரம். மனசுல ஒரு விதக் குழப்பம் இருந்துக்கிட்டே இருக்கும். அலைச்சல் இருக்கும். அதால உடம்புக்கும் ஏதாவது வந்து சேரும். குழந்தைகளால செலவுகள் ஏற்படும். எதுவானாலும் கோபப்படாதீங்க. கோபத்தைக் காட்டாம இருக்கறதே நல்ல பலன்கள் கிடைக்கற மாதிரி! ஜஸ் வெக்கறவங்ககிட்ட கைப்பொருள் இழக்கற சான்ஸ் இருக்கு. வாகனம் ஓட்டும் போதும் உஷாரா இருங்க.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

அரசாங்கப் பணியாளர்களுக்கு அனுகூலமான வாரம். தினக்கூலி செய்வோர், ஒப்பந்தப் பணியாளர்களுக்கு நல்ல முன்னேற்றம் தெரியும். நிர்வாகப் பணிகளில் உள்ளவர்களின் நிர்வாகத் திறமை பளிச்சென வெளிப்படும். வெளிநாட்டுத் தொடர்பால ஆதாயம் அதிகரிக்கும். சிலருக்குப் பயணத்தில் அனுகூலம் கிடைக்கும். நண்பர்கள், உறவினர்களால் அனுகூலமும் உதவியும் கிடைக்கும். கொடுக்கல் வாங்கல், ஸ்பெகுலேஷன் விஷயங்களில் உஷாரா இருக்கணும். இல்லேன்னா கவுத்திடும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்கள் அந்தஸ்து உயரும் அமோக வாரம் இது. வழக்கு விவகாரங்களில் நல்ல திருப்பம் ஏற்படும். பண விஷயம் சீராக இருக்கும். கொடுக்கல் வாங்கலில் லாபம் எதிர்பார்க்கலாம். ஆனாலும் எதிலும் நிதானம்காட்ட வேண்டியது அவசியம். விட்டுக் கொடுத்தல் இல்லேன்னா வீட்டில் சண்டை வர சான்ஸ் இருக்கு. விளையாட்டு வீரர்கள் எச்சரிக்கையா இல்லேன்னா கையைக் காலை உடைச்சுக்க வேண்டி வரலாம். சகோதர சகோதரிகளாலும் சிறு சிறு தொல்லைகள் வரலாம்.

# மாயக்கயிறு

பயணம் முடிவற்றதாயிருந்தது. கூட்டை விட்டு மூக்கை மட்டும் நீட்டிப் பார்க்கும் குட்டிக் குருவி போல ஒரு சின்ன சந்தேகம்தான் முதலில் அவனுக்குத் தோன்றியது: 'பாதை சரியா கத்தான் போகிறதா?' சில விநாடிகளில் அதற்கு ராட்சஸத் தலையும் உலக்கை போன்ற கால்களும் கோர விழிகளும் கூர் பற்களும் முளைத்து, பிம்பம் குலுங்கித் தறிகெட்டு ஓட ஆரம்பித்தது. திசை தப்பி விட்டோமோ என்கிற உணர்வு ஆக்டோபஸ் மாதிரித் தன் கரங்களால் அவனைப் பற்றி அழுத்தி, மேற்கொண்டு பயணத்தைத் தொடர விடாமல் ஸ்தம்பிக்கச் செய்தது. மிகவும் சோர்வுற்றுச் சுருண்டு விழுந் தான்.

பசியும் உறக்கமின்மையும் அவனைச் செயல்படவிடாமல் அடித்துக் கொண்டிருந்தன. தூக்கத் தின் விளிம்புகளில்தான் பல நாட் களாக நின்று கொண்டிருந்தான். ஆனாலும், சொருகிய விழிகளுக்கு உட்புறமிருந்து வலுவான ஒரு கரம் அவனது இமைகளை மூடவிடா மல் பிடித்துத் தள்ளிக் கொண் டிருந்தது.

மிகவும் தாகமாக இருந்தது. தான் விழுந்திருந்த இடத்தைச் சில விநாடிகள் மனத்தில் இருத்திக் கொள்பவனாகச் சுற்றிப் பார்த்தான்.

ஆளரவமற்ற பிரதேசமா யிருந்தது அது. மரங்களும் வீடு களுங்கூட அங்கே இல்லை. கண்ணுக்குத் தென்பட்ட இடங்களிலெல் லாம் மணல் மேடிட்டிருந்தது. பாலை வனமோ என்று எண்ணித் திரும்பியவன், சற்று தூரத்தில் அங்கவஸ்திரம் மாதிரி ஒரு மெல்லிய நதி வளைந்து வளைந்து நடந்து கொண் டிருக்கக் கண்டு அதிசயித்தான். ஒரு கை அள்ளிப் பருகும் வேட்கையில் அவசரமாகத் தடுமாறி எழுந்து நடந்தான்.

நான்கு கழிகளையும் ஒரு பாலிதீன் ஷீட்

பா. ராகவன்



டையும் கொண்டு நதிக்கரையில் ஒரு கூடாரம் அமைத்துத் தங்கி விடலாமா என்று ஒரு கணம் நினைத்தான். ஆளரவமற்ற நதிக்கரை. ஒரு புதிய நாகரிகத்தைத் தானொருத்தன் தோற்றுவித்துவிட முடிந்தால் பிரமாதம். பின்பற்றுகிறவர்களல்ல; தோற்றுவிக்கிறவர்கள் அல்லவா கொண்டாடப்படுகிறார்கள்?

அவனுக்குக் கொண்டாட்டம் எப்போதும் பிடித்தமானதாக இருந்தது. கொண்டாடப்படுகிறவர்களைத் தேடிப் போய், திரைவிலக்கி தரிசிக்கிற கணம் சிலிர்ப்பூட்டக் கூடியது. விஸ்வரூப தரிசனம். கண் கூசச் செய்யும் வெளிச்சமும் இருளும். புவியும் வானமும் அடைத்து நிறைந்திருக்கிற புகழ்புதர்.

**கா**ர்ஸியா மார்க்யூஸைப் பற்றி அப்படித்தான் கேள்விப்பட்டான். தெற்கு கொலம்பியாவில் அவன் ஊன்றிய ஒரு

* காப்ரியேல் கார்ஸியா மார்க்யூஸ், நோபல் பரிசு பெற்ற (வாழும்) லத்தீன் அமெரிக்க எழுத்தாளர். மேஜிக்கல் ரியலிஸம் என்னும் நவீன இலக்கிய உத்தியின் தந்தை எனப் போற்றப்படுபவர்.

விதை, ராட்சஸப் பார்த்தீனியச் செடி போலப் பரவிப் பரவி புவியை நிறைத்துப் பிற செடிகள் முளைவிட இயலாத வண்ணம் செய்து விட்டதாகச் சொன்னார்கள். இதைச் சொல்கிறபோது என்ன புளகாங்கிதம்! என்ன கொக்கரிப்பு! என்ன எகத்தாளம், அவனது ஏகலைவர்களுக்கு!

'உலகம் மந்திர வித்தைக் கலைஞர்களால் ஆளப்படுகிறது. சூ, மந்திரக்காளி என்று அதிபர்களும் பிரதமர்களும் சொல்கிறார்கள். உடனே மாயங்கள் நிகழ்ந்து விடுகின்றன. பாலைவெளிகளில் பூக்கள் பூத்துக் குலுங்கு கின்றன. பனிப் பிரதேசங்கள் கதகதப்பான சீதோஷ்ணம் அடைகின்றன. சூ மந்திரக் காளி என்று முதல்வர்கள் சொல்கிறார்கள். மறுகணம் கிராமங்கள் மேம்பாடு அடைந்து விடுகின்றன. வேலை வாய்ப்புகள் அவரவர் சட்டைப் பைகளிலிருந்து துள்ளிக் குதித்து, கையைப் பற்றி அழைத்துப் போகின்றன. சூ மந்திரக்காளி என்று பொருளாதார விற்பன்னர்கள் சொல்கிறார்கள். அடைக்கப்படாத கடன்கள் பற்றிய ஞாபகம் உலகவங்கியின் ராட்சஸக் கம்ப்யூட்டர் மெமரியிலிருந்து விடுபடுகின்றன. மேலும் கேட்கப்படுகிற கடன்கள் எப்படியோ கிடைத்து விடுகின்றன. சூ மந்திரக்காளி. வருஷ பட்ஜெட்டில் விழுகிற துண்டுகள் சேலைகளாகி, சுருக்குக் கயிறாகவும் மாறி கழுத்தை நெறித்தும் உயிர் விடுபடாமல் தடுக்கப்பட்டு விடுகிறது. மிக நீண்டதொரு பயணத்தின்போது, ஏதோ ஓரிடத்தில் நாம் தலையில் சூடிக் கொண்டிருந்த யதார்த்தப் பூவை நழுவவிட்டிருக்கிறோம். அதைக் கண்டெடுத்து மார்க்யூஸ் நம் காதுகளில் திறமையாகச் சுற்றிவிடுகிறான். அவன் கரம் பட்டதால் உருவான மாயத்தன்மையில் அது நம் செவிகளுக்கு சங்கீத நீர் ஊற்றுகிறது'.

ஏகலைவர்களின் கிறக்கப் பேச்சுகளை அவன் இடைவிடாமல் கேட்கும்படி நேர்ந்தது. மார்க்யூஸ், மார்க்யூஸ் என்கிற பெயர் அவன் காதுகளை நிரப்பிப் பிதுங்கிக் கொண்டிருந்தது. வாசிப்பை வேள்வியாகக் கருதுகிற எவனும் மார்க்யூஸின் ஹவிஸைப் புசிக்காமல் வேள்வி நிறைவுறாது என்று சொன்னார்கள். மார்க்யூஸின் எழுத்து, மார்க்யூஸின் உத்திகள், மார்க்யூஸின் மேஜிக்கல் ரியலிஸம். மார்க்யூஸின் மாய உலகம். மார்க்யூஸின் மனிதர்கள். மார்க்யூஸின் ராஜாங்கம். மார்க்யூஸின் ரசிகர்கள். மார்க்யூஸின் அடிமைகள்.

ஆகவே அவன் புறப்பட்டான். தெரிந்தவர்களிடம் மார்க்யூஸைச் சென்றடையும் வழி கேட்டபோது ஆளுக்கொரு விதமாகச் சொன்னார்கள். வடமேற்கு திசையில் ஏழு கடல்களையும் எழுநூறு மலைகளையும் மூன்று நீண்ட பாலைவனங்களையும் கடந்தால் ஒரு நதிப் படுகை தென்படும். அது வரைக்கும் அனைவருக்கும் தெரிந்த வழி பொதுவானதாக இருந்தது. பிறகுதான் ஆளுக்கொரு வழி சொல்ல ஆரம்பித்தார்கள். மார்க்யூஸை மிக நெருக்கமாகத் தெரிந்திருந்த அவனது நண்பன் முனியாண்டி மிக விளக்கமாகப் போட்டுக்காட்டிய வரைபடம் கூட சமயத்தில் ஏமாற்றுவதாயிருந்தது.

"உன் பயணத்தின் தூரத்தில் நீ முன்னேற்றிச் செல்லச் செல்ல, காலத்தில் பின்னிறங்கியும் போய்க் கொண்டே இருக்க வேண்டும். ஓர் இடத்தில் தூரத்துக்கும் காலத்துக்கும் இடைவெளியற்றுப் போய், தொன்ம வெளியில் பல நட்சத்திரங்கள் சிதறிக் கிடக்கக் காண்பாய். அங்கே மார்க்யூஸைக் கண்டு பிடிப்பதில் உனக்குச் சிரமம் ஏதும் இருக்காது. மற்றவர்கள் தம் நெற்றியில் நட்சத்திரங்களைப் பொட்டாக வைத்துக் கொண்டிருப்பார்கள். இவன் ஒருத்தன்தான், தானே ஒரு நட்சத்திரமாக ஒளிர்ந்து கொண்டிருப்பான்."

அவன் வந்து சேர்ந்திருந்த நதிப்படுகை மிக அமைதியாக இருந்தது. இது எந்த இடம் என்று கேட்க நினைத்தான். பதில் சொல்ல ஆளற்ற பேரமைதி. சரிதான், பார்த்துக் கொள்ளலாம் என்று நதியில் இறங்கினான். ஓரடி எடுத்து வைத்தவுடனேயே, 'ஆழம் எவ்வளவு இருக்குமோ?' என்கிற சந்தேகம் எழுந்தது. உடனே, 'லென்

• உன் சிரிப்பை
மொழி பெயர்த்தன
வளையல்கள்.
— சு. சாந்தகுமாரி

நதியின் ஆழத்தை நீயே அளந்து பார்' என்றொரு அசரீரி ஒலித்தது. சற்றும் எதிர்பாராத கணத்தில் அவன் பாதங்கள் உள்ளுக்குள் இழுக்கப்பட்டன.

ஒரு கணம் மூச்சடைத்தது. நதி அவனை உள்ளே, உள்ளே, உள்ளே கொண்டு போகத் தொடங்கியபோது சுவாசம் சிராகிவிட்டாற் போலவும், நடக்காமல் இப்படி மிதந்து கொண்டே பயணம் செய்வது பரம சுகம் என்பது போலவும், இன்னும் பலவாகவும் தோன்றியது.

வழியில் மனித முகமும் மீனின் உடலும் கொண்ட ஆண்களும் பெண்களும் குழந்தை களும் அவனுக்கு முகம் மலர வரவேற்புப் பா பாடினார்கள். சிப்பிகளுக்குள் மூடி எடுத்து வந்து தின்பண்டங்களைத் தந்து உப சரித்தார்கள். அழகிய கண்ணாடிக் கோப்பை களில் சுடச்சுட நேநீர் வழங்கினார்கள், வழி தோறும். இதுகாறும் பயணத்தில் ஏற்பட்ட வெறுமையும் அலுப்பும் களைப்பும் நீங்கி விட்டதாகத் தோன்றியது. இன்னும் பல ஆயிரம் மைல்கள் பயணத்துக்கான வலுவை இந்தப் பிரதேசத்தின் வழியாகச் செல்லும் போது சேமித்துக் கொண்டு விடலாம் என்று பட்டது.

இரவாகி விட்டால், அவன் விகாரங் களில் தங்கினான். பிட்சுக்கள் அவனை அன் புடன் கவனித்துக் கொண்டார்கள். கடும் விஷக் காய்ச்சலில் அவன் அவதிப்பட்ட போது, ஒரு விகாரத்தின் தலைமை பிட்சு அவனைத் தம் மடியில் படுக்க வைத்துப் பச்சிலை வைத்தியம் செய்து குணப்படுத் தினார்.

"நேற்று அருள்மொழி வர்மன். இன்று நீ!" என்று அவர் சொன்னபோது அன்பில் நெகிழ்ந்து போனான்.

ஆனால், அடி மனத்தில் ஒரு சந்தேகம் வலுவாக இருந்தது. முனியாண்டி சொல்லி யிருந்தான், மார்க்யூஸை அடைய அழைத் துப் போகும் பாதை அத்தனை சுலபமாக இருக்காது என்று. ஆனால், தானொரு விண் கலமாக மாறி, இடையூறுகளற்ற பால்வீதியில் மிதப்பது போலத்தான் அவனுக்கு அந்தப் பயணம் இருந்தது. எடுத்து வந்திருந்த வரை படங்களை மறுபடியும் ஆராய ஆரம்பித் தான். சந்தேகமில்லை. சிலந்தியின் வலை பின்னப்பட்ட நேர்த்தியில் பிரத்தியட்ச மாகிக் கொண்டிருந்த கோடுகள், முடிவற்ற பெருவெளியைத் தாண்டி விரிந்து, ஒன் றோடொன்று பின்னியும், விலகியும் வளைந் தும் நெளிந்தும் லட்சம் பாம்பு கள் ஊர்வது போலப் புல னானது.

ஒரு கணம் அதிர்ந்தான். சிங்கம் பிடறியைச் சிலுப்பிக் கொள்வது போலத் தன்னை உலுக்கிக் கொண்டு, பாய்ந்து ஓட ஆரம்பித்தான்.

வியப்படைந்த பிட்சுக்கள், "நில்! ஏன் ஓடு கிறாய்?" என்று கத்தியபோது "என் திட்டம் குலைந்து விட்டது. நான் மார்க்யூஸைச் சந்திக்க மட்டுமே புறப்பட்டு வந்தேன்" என்று அறிவித்துவிட்டு, மேலும் ஓடலா னான்.

**ஆசை**

* காற்றோடு சேர்ந்து
புகுந்து வரவேண்டும்
புல்லாங்குழலுக்குள்.
– வெற்றிப்பேரொளி

**ப**தினாறாம் நூற்றாண்டின் முற்பகுதி யில் அவன் ஓடிக் கொண்டிருந்தபோது கோயிலா, விகாரமா, மசூதியா, தேவாலயமா என்று பிரித்துணர முடியாத ஒரு பிரும் மாண்டமான கட்டடத்தின் வாயிலைச் சென்றடைந்தான்.

புராதனமான, மிக உயர்ந்த இரும்புக் கதவு சாத்தியிருந்தது. அத்தனை பெரிய கத வையும் அதனினும் உயர்ந்த மதில் சுவரை யும் அசாதாரணமாக அங்கு நிலவிய பேரமைதியையும் புழுக்கத்தையும் கண்ட போது அவன் வியப்புற்றான்.

"இது என்ன?" என்று கேட்க நினைத் தவன், வாயிலில் சிறிய நாற்காலியில் கவலை யுடன் அமர்ந்திருந்த காவலாளியிடம் சென்று தன் பெயர், முகவரி, வந்த காரணம் முதலியவற்றைக் கூறி, 'இங்கே என்ன இருக் கிறது?' என்று விசாரித்தான்.

காவலாளி சிரித்தான். வேதனை கவிந்த அச்சிரிப்பு அவனுக்கு வருத்தம் ஏற்படுத்து வதாக இருந்தது.

"நீங்கள் என்னிடம் தாராளமாக இது பற்றிச் சொல்லலாம். என் பாத்திரத்துக்கு மூடி கிடையாது" என்றான் உற்சாகப்படுத் தும் விதமாக.

"மூடி! ஹா!" என்று மேலும் சிரித்த அந்தக் காவலாளி, தன் கிரீடத்தை எடுத்து விட்டு, தலையில் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டான்.

"நான் ஒரு மன்னன் என்பது உனக்குத் தெரியுமா? வெறும் காவலாளி அல்ல; மன்னன்! என் மக்களின் பாத்திரங்களுக்கு

மூடி கிடையாது என்று மடத்தனமாக நினைத்தவன். அவர்களின் ஆன்மாவுக்குச் சோறிட ஒரு கதம்பசாதம் தயாரித்தேன். அவர்கள் அதுவரை ருசித்திராதது. சமைத்து முடித்தபின்தான் அறிந்தேன், என் மக்களிடம் பாத்திரங்கள் இல்லை என்பதை. அவர்கள் வெறும் மூடிகளை மட்டுமே வைத்திருந்தார்கள். அத்தனையும் பாழ். இங்கே உள்ள உக்கிராண அறையில் பதப்படுத்திக் குவித்து வைத்திருக்கிறேன். நீ ஒரு பிடி ருசித்துப் பார்க்கிறாயா? உள்ளே போக நுழைவுக் கட்டணம் ஏதும் இல்லை."

காவலாளி, தன் சட்டைப் பை அருகே குத்தியிருந்த சிறு பெயர்த் தகட்டில் அக்பர் என்று எழுதியிருக்கக் கண்டவனுக்கு வியப்பும் அதிர்ச்சியும் ஒரு சேர ஏற்பட்டது.

"தோற்றுவிக்கிறவர்கள் தோற்பதில்லை என்று எண்ணியிருந்தேன்" என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன.

"யாரை முன் வைத்து அப்படியொரு தீர்மானத்துக்கு வந்தாய்?" என்று அக்பர் கேட்டார்.

"மார்க்யூஸ். கப்ரியேல் கார்ஸியா மார்க்யூஸ். அவரைத் தேடித்தான் போய்க் கொண்டிருக்கிறேன்."

காவலாளி அவனை ஏற இறங்கப் பார்த்தார்.

"இந்த வழியில் நீ அவனைச் சென்றடைய இருநூறு ஒளி ஆண்டுகள் பிடிக்கும். உன் கரங்களைச் செதுக்கி, சிறகுகளாக மாற்றிக் கொண்டு பறக்கத் தொடங்கிவிடு" என்றார்.

"இன்னும் எத்தனை தூரம் போக வேண்டியிருக்கும்?" என்று அவன் கேட்டான்.

"அது எனக்குத் தெரியாது. ஆயிரத்தைத் நூறு வருடங்களைக் கடந்து புனித வேதாகம வீட்டை அடைந்து இயேசுவைச் சந்திக்க முயற்சி செய். மார்க்யூஸுக்கு அவருடன் நல்ல சிநேகிதம் உண்டு. அவர் உனக்கு வழி காட்டக் கூடும்."

**வி**டைபெற்றுப் புறப்பட்டபோது அவனுக்குக் குழப்பமாகவே இருந்தது. தோற்றுவிப்பவர்கள் கூடத் தோற்க முடியுமா? தோல்விக்கு மார்க்யூஸ் விலக்காக முடியாதா?

அவர் தோற்கக் கூடியவர் என்பதையே அவனால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தின் சாரதி போன்றதொரு பிம்பம் அவன் மனத்தில் உருவானது. காலமும் வெளியும் கடந்து சீறிப் பாய்கிற ரதம். செலுத்துவதில்தான் என்ன லாகவம்! கொப்பளிக்கிற திமிர்! மார்க்யூஸ் தோற்பவனல்ல. புவியை உதைத்துப் புறப்பட்ட ரதம் அவனுடையது. புவிக்கு அப்பாலும் பால்வீதியில் வலம் வரக் கூடியது. வேகம், வேகம், வேகம். அசுர வேகம். ஆர்ப்பரிக்கிற அலைகளின் சீற்றம்.



தொலைவில் ரதத்தின் அடிச்சுவடுகள் அவனுக்குத் தென்பட்டன. உடனே அவன் சுதாரித்துக் கொண்டு, வழியில் கடைவிரித்திருந்த கார்த்தவீர்யார்ஜுனனின் உலைக் களத்திலிருந்து கூர் மினுங்கும் ஒரு வாளை வாங்கித் தன் கரங்களைச் செதுக்கிச் சிறகு போலாக்கிக் கொண்டு பறக்கத் தொடங்கினான்.

தனக்கும் ரதத்துக்குமான தூரத்தின் இடைவெளி குறையக் குறைய காலம் மிக விலகிப் போவதைக் கண்டான்.

**பி**ரதேசம் பசுமை போர்த்திக் கொண்டிருந்தது. மக்கள் மேல் ஆடையற்றுத் திரிந்து கொண்டிருக்கக் கண்டவன், ஓர் ஆடுமேய்க்கும் சிறுவனை அணுகி, இது எந்த இடம் என்று விசாரித்தான். அவன் சிரித்து, "பெயர் இல்லை; இது புவி" என்றபோது, பதறி மறுபடியும் திசைமாற்றி முன் நோக்கிப் போக ஆரம்பித்தான். கண்ணில் தென்பட்டு, மறைந்துவிட்ட ரதம் அவன் ஏக்கத்தை மிகைப்படுத்தியிருந்தது.

பொங்கிய துக்கத்தின் விளிம்பில் அவன் கண்களைச் சுடு நீர் நிறைத்து உதிர்ந்தது. திட்டங்களும் தீர்மானமும் குலைந்து போய் வழி தப்பிய ஆட்டுக்குட்டி போலாகி விட்டதை எண்ணி அவன் மனம் பதைத்தான். காலப் பிரக்ஞை அற்றுப் போய்க் கடந்து வந்த இடம் எந்தப் பிராந்தியத்தைச் சார்ந்தது என்றே அவனால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. வாழ்வில் மார்க்யூஸைத் தரிசிக்காமலே இறந்து விடுவோமோ என்கிற பயம் ஒரு மின்சாரச் சுருளாக வயிற்றில் புறப்பட்டு அவன் நெஞ்சை அடைத்தது.

சிறகுகள் உதிர்ந்து, ஓர் எச்சில் இலை போல அவன் வீசி எறியப்பட்டான்.

**க**ண் விழித்தபோது அவனுக்குத் தென்பட்டதெல்லாம் பரிபூரண ஒளி. குகை போலிருந்த அந்த பாதாள உலகின் இண்டு

இடுக்கு களிலெல்லாம் ஒளி பரவி, நிரம்பியிருந்தது. நூறு நூறு வருடங்களாக இறுகிப் போயிருந்த கருங்கல் சுவர்களில் பல விதமான சிற்பங்கள் செதுக்கப்பட்டிருந்தன. காதல் காட்சிகள். போர்க் காட்சிகள். அரசவைக் காட்சிகள். அந்தப்புரக் காட்சிகள்.

நியாயம்

தவறான காதலுக்கு
சரியான
தண்டனை –
பிரிவு.
– சையத்



வியப்புடன் அவற்றைப் பார்த்துக் கொண்டே வந்தவன், ஓரிடத்தில் ஒரு நதியின் தோற்றமும் நீரோட்டமும் அத்தனை துல்லியமாகக் கல்லில் செதுக்கப்பட்டிருப்பதைக் கண்டு அதிசயித்தான்.

நதிக்கரையில் இருந்த ஒரு மரத்தின் அடியில் பனை ஓலையும் எழுத்தாணியுமாக, தாடிவைத்த ஒரு முனிவர் அமர்ந்திருந்தார். தோற்றத்தின் தொன்மத்தில் அவன் கரைந்து கொண்டிருந்தபோது சட்டென்று முனிவரின் கரம் நீண்டு, தன் தோளைத் தொட்ட போது அவனுக்குச் சிலிர்த்தது.

"எங்கிருந்து வருகிறாய்?" – குரல் மிகத் தெளிவாக அவனுக்குக் கேட்டது.

"தெரியவில்லை" என்று அவன் பதில் சொன்னான். தவறாக எடுத்துக் கொண்டு விடுவாரோ என்று உடனே தோன்றவும் "போக விரும்புகிற இடம் மட்டும்தான் ஞாபகத்தில் இருக்கிறது. சந்திக்க விரும்புகிற நபரும் கூட!" என்றான் பணிவுடன்.

"அது யார்?" என்று முனிவர் கேட்டார்.

"காப்ரியேல் கார்ஸியா மார்க்யூஸ். தொன்மங்களின் தோழர். மாய யதார்த்தக் கயிறால் உலகைக் கட்டி இழுத்துச் சென்று கொண்டிருக்கிற நபர். அவர் கரத்தில் பற்றியிருக்கும் கயிறின் முனையைத் தொட்டுப் பார்க்க விருப்பம். என் பயணம் அதன் பொருட்டு ஆரம்பமானதுதான்" என்று அவன் சொன்னான்.

முனிவர் சிரித்தார். அவர் கரம் தன்னிச்சையாக தாடியை நீவி விட்டது. துல்லியமான வெள்ளைத் தாடி, காற்றில் அசைந்து அவர் மார்பை வருடியது.

"பசிக்கிறதா?" என்று அவர் கேட்டார்.

"மிகவும்" என்று அவன் பதில் சொன்னான்.

"இந்தச் சிற்பங்களைப் பார்த்தாயா?"

"பார்த்தேன். இவையெல்லாம் என்ன சிற்பங்கள்? யார் இவர்கள்?" – அவன் விழிகளில் அறிந்து கொள்ளும் ஆர்வம் தீயாகப் பரவி நின்றது.

"அத்தனை பேரும் என் குழந்தைகள். மொத்தம் நூற்று ஐந்து பேர். இந்தச் சிற்பங்கள் அவர்களின் முந்தைய வம்ச சரித்திரத்தைச் சொல்கின்றன" என்று முனிவர் சொன்னார்.

"நீங்களே சிற்பமாக இருந்து, இந்தச் சிற்பங்களை எப்படிச் செதுக்க முடிந்தது? உங்களைச் செதுக்கியவர் யார்?"

அவனுக்குக் குழப்பம் மிகுந்தது.

முனிவர் சிரித்தார். "குழந்தையாக இருக்கிறாய் நீ! சிற்பங்களைச் சிற்பியா செதுக்குவதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய்? உண்மையில் சிற்பிகள்தாம் சிற்பங்களால் செதுக்கப்படுகிறார்கள்."

"மன்னிக்கவும். எனக்கு விளங்கவில்லை. நான் மார்க்யூஸைத் தேடி மட்டுமே வந்தேன்" என்று அவன் சொன்னான்.

முனிவர் சிரித்தார். "அவன் தொன்மங்களைத் தேடிப் போகிற எதிர்காலக்காரன். நீ அவனைத் தேடி இறந்த காலத்துக்கு வந்து விட்ட நிகழ்காலக்காரன்!"

அவன் ஒரு கணம் ஸ்தம்பித்தான். முனிவரை உற்றுப் பார்த்தான். உடலின் சகல அணுத் துகள்களிலும் பரபரப்புக் கூட, "உங்களுக்கு மார்க்யூஸைத் தெரியுமா? அவர் எங்கிருக்கிறார்?" என்றான் படபடப்பாக.

"மிகவும் முன்னால்! நீ உன் பயணத்தில் காலம் கடந்து, பலகாதம் பின்னால் வந்து விட்டாய். உண்மையில் உன் வீட்டுக்கு மிக அருகில்தான் அவன் வசிக்கிறான்!"

"எனில், நீங்கள் அவரை அறிவீர்களா?"

"அறிவதா?" முனிவர் சிரித்தார்.

"பேரனை அறியாத பாட்டனா?" முனிவர் மேலும் சிரித்தார். கண்களில் நீர் வரும் அளவுக்குக் குலுங்கிக் குலுங்கிச் சிரித்துக் கொண்டே இருந்தார். சட்டென்று ஓர் இடைவெளி விட்டு, "அவன் கையில் பிடித்துக் கொண்டிருப்பதாகச் சொன்னாயே, மாயக் கயிறு! பிதுரார்ஜித சொத்தாக நான் அளித்ததுதான்."

"உங்கள் பெயர்?"

"வியாசன்!"

முனிவர் புன்னகை செய்தார். சிற்பத்தின் கரம் நீண்டு அவன் தலையை வருடியது. தான் தேடிவந்தவனின் பெயர் சட்டென்று அவனுக்கு மறந்து போயிற்று.

# KALKI SHOPPING PAGE

# KALKI SHOPPING PAGE

# கார்கிலுக்கு ஒரு கடிதம்

கட்டிய புதுச்சேலை கைபட்டுக் கசங்கலியே,
கன்னத்தில் வச்சமையி கரிக்கோடு போடலியே,
கண்ணாடி வளையல்களில் ஒண்ணிரண்டு குறையலியே,
கண்ணாலம் பாத்த சனம் வண்டி கட்டித் திரும்பலியே!
தாலி ஈரம் காயலியே, தலைகாணி நோகலியே,
கோலத்தில் மஞ்சள் நீர் கோலமின்னும் மாறலியே,
தாலிகட்டி முடிச்சவுடன் தாய்மண்ணைக் காப்பதற்காய்
கார்கிலுக்கு வரச்சொல்லி கடுதாசி வந்ததுங்க
பொட்டாள வந்தவனை போர்செய்ய அனுப்பி வைச்சு
பொட்டுக்குக் காவலென பூவாத்தா துணை கேட்டேன்.
அறியா வயசுலயே அத்தமவன் தான் புருசன்.
அன்னைக்கே அடிமனசில் ஆணி ஒண்ணு அடிச்சிட்டேன்.
பட்டாளமாமனை நான்  பலவருசம் காதலிச்சேன்.
பரிசம் தான் போட்டபின்னும் பலமாசம் காத்திருந்தேன்.
பனிமலையில் என்மாமன் பந்தாட எதிரிகளை,
தணியாத வெப்பத்தில் தனியாக நானிருக்கேன்.
பள்ளியறைப் பாடமெல்லாம் பாதியிலே நிக்குதய்யா,
சொல்ல வந்த கதையெல்லாம் சுழட்டி எனைப் போடுதய்யா
ஆடி மாசம் ஓடட்டும், அதுக்குள்ள அந்நியனை
ஓடஓட விரட்டிட்டு ஊர் திரும்ப வேணுமய்யா!
வரும்போது எனக்கென்ன வாங்கி வரப் போறீங்க?
வால்பேரி ஆப்பிளெல்லாம் வாய் புளிச்சுப் போச்சுதய்யா
பரிசா ஒருபுள்ள பெத்தெடுக்க வேணும் அவன்
போரில்லா தேசத்துப் புலியாள வேணுமைய

அமுதன்

## நாற்காலி நாடகங்கள்

லோக்சபா, அசெம்ப்ளி, இரண்டு தேர்தல்களும் செப்டெம்பரில் (4, 11) நடத்துவதற்கு எல்லோரும் ஒருமுறை ஆதரவு தெரிவித்து விட்டதால், கவர்னர் அலெக்ஸாந்தர் மஹாராஷ்ட்ரா சட்டசபையைக் கலைத்து விட்டார். கார்கில் வெற்றியை வோட்டுகளாக மாற்றி விடலாம் என்பது வெளிப்படையான ஆசை. பவாரின் என்.சி.பி. வேரூன்றுவதற்கு முன்னால் தேர்தல் வந்தால், காங். வோட்டுகள் சிதறும் என்று உள்ளூர ஆசை. 4½ வருட சாதனை என்று எதையாவது காட்டலாமென்று பார்த்தால், மூக்குக்கு மூக்கு முளைத்திருக்கும் மேம்பாலங்களையும், ஓரளவு பல் பிடுங்கப்பட்டிருக்கும் அண்டர் வர்ல்டையும் சொல்லலாம். ஆனால் இவை



• ராஜேந்திர குமார்

பி.ஜே.பி.யின் வசமிருந்த டிபார்ட்மெண்டுகளாயிற்றே! சிவசேனா பொறுப்பிலிருந்த ரெவின்யூ, கல்வி போன்ற துறைகள், மோசத்திலிருந்து படுமோசம் என்ற நிலைக்கல்லவா தள்ளப்பட்டிருக்கின்றன? அதனால் தான், பி.ஜே.பி, முண்டேவை வருங்கால சி.எம். மாகப் பிரகடனப் படுத்தி பிரசாரிப்பதை சிவசேனை கண்டு கொள்ளாமலிருந்து வருகிறது. என்ன இருந்தாலும், பெரும்பான்மை வெற்றிகளைக் குவிக்கப் போகும் கட்சியிலிருந்துதானே சி.எம். தேர்ந்தெடுக்கப்படுவார்? மக்களை ஈர்க்க, முதல் கட்டமாக ராணே, தம் பங்களாவில் ஒரு ஸ்பெஷல் ஃபோனையும், அதனடியில் ஒரு ஸ்பெஷல் ஆபீசரையும் அமர்த்தியிருக்கிறார். யார் வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் ஃபோன் செய்து போலீஸ் பற்றியோ, சட்ட விரோதமான செயல்கள், தொல்லைகள் பற்றியோ புகார் செய்யலாம். (இரவு 10 மணிக்கே இது 'டெட்' ஆகி விடுவது வேறு கதை). இன்னும் அடுத்தடுத்து, என்னென்ன கவனிப்புகள் தொடருமோ? நாலு கால் ஜடப் பொருளைப் பிடிக்க, இரண்டு கால் மனிதர்கள் அடிக்கப் போகும் கூத்தை வேடிக்கை பார்க்க மக்கள் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள்.



சுற்றிலும் உறவினர்கள்
மருத்துவர் கைவிரிப்பு
சட்டை உரிந்து விடுமோ?
'சட்டைக்குள் நான்' மறைந்து
'சட்டையே நான்' வளர்த்து
சட்டை இழக்க மனமில்லை.
புதுச்சட்டை உண்டா?
கும்பலாய்க் குழப்ப அலைகள்
கம்மியாய் விஷமென்றால்
சட்டை உரிப்பது இயல்போ?
மகனுக்கு மேற்படிப்பு
மனைவிக்கு இன்னும் தங்கம்
தொடரணும் மைத்துனனுக்கு
கொடுக்கல்கள் இல்லா
வாங்கல்
நிரந்தரத் தேவை உண்டு
தாற்காலிக சட்டைக்கு.

— ஜி.எஸ்.எஸ்

## நாற்காலி

## கருப்பு வெள்ளி

தொலை தூரத் துயரங்களைக் காட்டிலும், அண்மையிலுள்ள அவலங்களின் தாக்கம் அதிகம்தான். ஜி.டி. எக்ஸ்பிரஸ் விபத்துக்குள்ளான செய்திகள்

வேதனைப்படுத்தின என்றால், அதே நாளில் மும்பையில், பாண்டுப், விக்ரோலி பகுதிகளில், தொடர் மழை தொடர்பான விபத்துச் செய்திகள் வெளிவந்து மனதைப் பிழிந்தெடுத்தன. பாண்டுப்பில், குன்றுகளில் ஏற்பட்ட சரிவில், பாறைக் கற்கள் உருண்டு விழுந்து கீழேயிருந்த துல்ஸிபாடா குடிசைப் பகுதியில், ஒரு குடும்பத்தைச் சார்ந்த நான்கு சின்னஞ் சிறிசுகளுக்கும், அவற்றின் தாய்க்கும் முக்தி அளித்திருக்கின்றன. பக்கத் திலிருந்த நான்கு வீடுகளும் உருக்குலைந்து போக, அதில் புது மணத் தம்பதிகள் கணேஷ் வகோடாவும் அவர் மனைவியும் உருத் தெரியாமல் சிதைந்த சம்பவம் நெஞ்சைப் பிசைந்தது. விக்ரோலி, வாஷா நகர் நிலச்சரிவில் மேலும் இருவர் உயிர் நீத்தனர். பலருக்கு ஆஸ்பத்திரி வாசம். இத்தனைக்கும், குன்றிருக்கும் பகுதிகளில் மழைக் காலத்தில் இத்தகைய விபத்து களை எதிர்பார்த்தே, மழை துவங்கு வதற்கு முன்பாகவே இவர்களை எல்லாம் வெளியேறச் சொல்லி இருக்கிறார் வார்டு ஆபீசர். அதுவும் ஒரு வாரத்துக்கு முன்புதான் இவர்கள் வீடு எழுப்பப் பட்டிருந்த நிலப்பரப்பே சரிந்து, நாலு வீடுகளை நாசப்படுத்தியிருக்கிறது. நம் ரிஷி முனிகள்கூட உயிரை ரட்சிக்க வேண்டும் என்றுதான் சொல்லியிருக் கிறார்கள்; மும்பைக்காரர்கள் அவர் களையும் விஞ்சி விட்டார்களா? உயிர் மேல் கூட ஆசை இல்லாமலிருக்கிறார் களே?




நாடகங்கள்!

## நெஞ்சில் ஓர் ஆலயம்

'ஜூபிலிகுமாரி'ன் (ராஜேந்திர குமார்) மறைவுக்கு பாலிவுட்டே திரண்டு அஞ்சலி செலுத்தியது. மனோஜ் குமாரின் நினைவலைகள், இந்த நடிகரின் உன்னதப் பண்புகளைப் பறைசாற்றின. தினமும் யாராவது சான்ஸுக்கு அலையும் பாவப் பட்ட இளைஞர்கள் கண்ணில் பட்டால், உடனே அவர்களை அழைத்துச் சென்று, தம் வீட்டில் சாப்பாடு போட்டு, தமக்குத் தெரிந்த ப்ரொட்யூசர்களிடமெல்லாம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்து வாராம். ஆயிரம் ரூபாய்க்கு முதன் முதலில் ஒரு 'செக்'கைப் பெற்று, அதனை ராஜேந்திர குமாரின் திருவடிகளில் சமர்ப்பிக்க மனோஜ் ஓடியபோது, "இனி லட்சங்கள் உன்னைத் தேடி வரும்; உடனே ஒரு கார் வாங்கி விடு" என்று ஆசிர்வதித்தாராம். 'அதற்கெல்லாம் பணமில்லையே' என்று இவர் கைவிரித்த போது, 'நாளைக்கே என் வீட்டுக்கு வா' என்றிருக்கிறார். அங்கே புத்தம் புதிய ஃபியட்டைக் காட்டி, "விலை 11,000; மாதம் 1000 என்று தவணை கட்டி விடு" என கார் ப்ரோக்கரையும் அறிமுகப் படுத்தினாராம். தர்மேந்திராவுக்கும் இவர் தான் முதல் கார் வாங்க உதவியிருக் கிறார். முதுகில் குத்தும் பொறாமைக் காரர்கள் நிறைந்த சினிமா உலகில், முதுகில் தட்டும் பெருந்தன்மை யாளர்களும் உண்டு போலும். அன்று பாந்த்ராவில் இறுதி யாத்திரைக்குக் கூடியிருந்த கூட்டத்தைப் பார்த்ததுமே தெரிந்து விட்டது - எல்லோர் நெஞ்சிலும் ராஜேந்திர குமாருக்கென்று நிச்சயம் ஓர் ஆலயம் உண்டு என்பது!

— ஜெயஸ்ரீ ராஜ்

# டுப்பியின் குடும்பம்

அலமு: அரஸ்













Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)

# கல்கி

KALKI 1.8.99 ரூ. 4.50

அழகுக் கலை முதல்
அவசரச் சமையல் வரை...

## சிறுதொழில் தொடங்கலாம், வாங்க!



ON RAJ TV

# கே. பாலசந்தரின்

'அடுத்த வீட்டுக் கவிதை'

## சின்னத்திரையில் முதன்முறையாக

S.P.B லட்சுமி



ஜூலை 30 முதல்
வெள்ளிதோறும்
இரவு 9.00 மணிக்கு

JANNAL




இயக்கம் : சுந்தர் கே. விஜயன்

கதை : தேவிபாலா

CUECOM ENTERTAINMENT PRIVATE LIMITED

Minbimbangal Production Pvt. Ltd



1999 ஆகஸ்ட் 1
பிராமாதி ஆடி 16
மலர் : 58
இதழ் : 1

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## மூப்பனாருக்கு வராத கோபம்!

தனிமைப்படுத்தப்பட்டு நிற்கிறது த.மா.கா.!

அ.தி.மு.கவுடன் கூட்டணி கொள்ள காங்கிரஸ் துணிந்தபோது, வீரத்துடன் வெளியேறியவர்கள் உருவாக்கிய தனிக்கட்சி!

அன்று அந்தச் செயலுக்குக் கிடைத்த மகத்தான வரவேற்பும் மக்களாதரவும் பாராட்டும் மூப்பனார் கட்சியினரின் இன்றைய நிலைக்கு நிச்சயமாகக் கிடைக்கப்போவதில்லை.

1996ல் த.மா.கா வேட்பாளர்கள் பெற்ற அமோகமான வெற்றியும் இந்த முறை கிட்டப் போவதில்லை.

இருந்தாலும் மூன்றாவது அணி என்பதாக ஒன்றை உருவாக்கிப் போட்டியிடுவதென்று முடிவெடுத்திருக்கிறார் மூப்பனார்!

த.மா.காவின் மகத்தான தோல்வி தவிர, வேறு சில விளைவுகளும் இந்தப் பிடிவாத மான முடிவின் காரணமாக ஏற்படப்போகின்றன.

தமிழர்களின் வாக்குகள் மூன்று அணியினரிடையே சிதறிப் போகும். த.மா.கா. எதிர்க்கும் மதவாதக் கூட்டணிக்கே ஆதரவாக இந்த 'வாக்குப் பிளவு' அமையக்கூடும்.

'மதவாதம், ஊழல் இரண்டையுமே புறக்கணிக்கிறோம்' என்ற த.மா.காவின் உறுதி நிலை கேள்விக்குள்ளாகும். காரணம், பி.ஜே.பியுடனும் சேர முடியாமல் அ.தி.மு.கவுடனும்




சேர முடியாமல் தவித்துக் கொண்டிருக்கும் வகுப்புவாத உதிரிக் கட்சிகள், மூப்பனாரின் மூன்றாவது அணியில் தொற்றிக் கொண்டிருக்கின்றன. அதே தவிப்புடன் விளங்கும் மதவாதக் கட்சியும் காத்திருக்கிறது. இவர்களைச் சேர்த்துக் கொண்டால், மூப்பனார் எதை எதிர்ப்பதாகச் சொல்கிறாரோ, அதே சக்திகளுடன் கைகுலுக்குவதாக அமையும்!

வெற்றி வாய்ப்பு மிகக் குறைவு என்பதை உணரும் த.மா.கா. தொண்டர்கள் பலர், உற்சாகம் குன்றிப்போய் கட்சியைவிட்டு வெளியேறினாலும் வியப்பதற்கில்லை.

புதிதாகத் தொடங்கப்பட்ட ஒரு கட்சி, தேர்தலுக்குத் தேர்தல் ஒரு சிறு முன்னேற்றத்தையாவது பதிவு செய்தாக வேண்டும். த.மா.காவோ, ஏற்கெனவே கடந்த நாடாளுமன்றத் தேர்தலில் (1998) பின்னடைவைச் சந்தித்திருக்கிறது. அடுத்து வரும் தேர்தலில் மேலும் பின்னடைவு ஏற்படுமானால், நல்ல நோக்கங்களையுடைய ஒரு நல்ல கட்சியின் எதிர் காலம் கேள்விக் குறியாகிவிடும்.

இவையெல்லாம் அனுபவசாலியான ஜி.கே. மூப்பனாருக்குத் தெரியாமலிருக்க நியாய மில்லை. அப்படியிருந்தும் அவர் மூன்றாவது அணி அமைக்கும் முடிவை எடுத்தாரென் றால், மதவாதத்தையும் ஆதரிக்க முடியாது; ஊழலையும் ஆதரிக்க முடியாது என்கிற சமச்சீரான நிலை - கொள்கை உறுதி மக்களிடையே நன்மதிப்பை ஏற்படுத்தும் என்று அவர் கணக்கிட்டிருக்கலாம். 'இந்த நன்மதிப்பின் பலத்தில் அடுத்தத் தேர்தலில் வெற்றி பெறலாம்' என்று கூட அவர் திட்டமிட்டிருக்கக்கூடும்.

ஆனால் இந்த முயற்சிகள் விழலுக்கிறைத்த நீராகப் போகின்றன.

நம்பிக்கை வாக்கெடுப்பில் பா.ஜ.கவுக்கு எதிராக த.மா.கா. வாக்களித்ததை மக்கள் இன்னும் மறந்து விடவில்லை. த.மா.கா. மட்டும் தி.மு.கவைப் போலவே பா.ஜ.கவை ஆதரிக்க முடிவெடுத்திருந்தால் இந்தத் தேர்தலே தவிர்க்கப்பட்டிருக்கும். ஆனால் காங் கிரஸ் கூட்டணி ஆட்சிக்கு வரும் என்ற எதிர்பார்ப்பில் மூப்பனார் அப்போது செயல் பட்டார்.




இப்போது... அந்த காங்கிரஸையும் ஆதரிக்க முடியாத நிலையில் அவர் இருக்கிறார் என்பது மக்களிடையே அனுதாபத்தையோ, ஆதரவையோ ஏற்படுத்தப்போவதில்லை; எரிச்சலையே உண்டாக்கும்!

அரசியல் கொள்கையுடன் ராஜதந்திரமும் இணையும் போதுதான் நாட்டுக்கு நல்லது நடக்கும். தனது ராஜ்யத்தை விஸ்தரிக்க விரும்பும் ஒரு குறுநில மன்னன் ஒரே சமயத்தில் இரு சக்ரவர்த்திகளை எதிர்த்துப் போரிட்டால் அழிந்துதான் போவான். ஒருத்தரின் துணையுடன் மற்றவரை வீழ்த்துவது, ஒப்புக்கொள்ளப்பட்ட போர் முறை. ஊழலை மீண்டும் தலையெடுக்க விடாமல் செய்வதற்கு மதவாதத்துடன் சேருவது இன்றைய சூழலில் ராஜதந்திரம்.

இந்த வெற்றி தரக்கூடிய பலத்தில் கட்சியை வளர்த்து, மதவாதத்தை எதிர்த்து, தனித்துப் போராடும் அளவுக்குப் படிப்படியாக உயரலாம்.

''நான் செய்த ஒரே தவறு பி.ஜே.பியை ஆதரித்ததுதான். பரிகாரமாக ஆதரவை வாபஸ் பெற்றுவிட்டேன்'' என்று ஜெயலலிதா பேசியிருக்கிறார். இதன் பின்னாலுள்ள சுயநலம் மக்களுக்கு நன்றாகப் புரியும்.

சோனியாவால் கைவிடப்பட்ட மூப்பனாரும், ''நான் செய்த ஒரே தவறு, சோனியாவை நம்பி நம்பிக்கை வாக்கெடுப்பில் பி.ஜே.பிக்கு எதிராக வாக்களித்ததுதான். பரிகாரமாக, வருகிற தேர்தலில் அக்கூட்டணியை ஆதரிக்கிறேன்'' என்று பேசியிருப்பாரானால் அந்த வாக்கியத்தின் பின் உள்ள தேச நல நோக்கை வாக்காளர்கள் உணர்ந்து கொண்டிருப்பார்கள்.

ஆனால், அ.தி.மு.கவுடன் நரசிம்மராவ் கூட்டணி அமைத்தபோது பீறிட்டுக் கிளம்பிய மூப்பனாரின் கோபம், இப்போது சோனியா அதே பாதகத்தைச் செய்யும்போது சிலிர்த்தெழக் காணோமே!

அதனால்தான் த.மா.காவின் எதிர்காலம் குறித்து நமக்குக் கவலை ஏற்படுகிறது. ○

# குறையொன்று

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

நிர்வேதம் என்றால் கடந்த காலத்தை நினைத்து நினைத்து வருந்துதல்.

பழுதே பலபகலும் போயின என்று
அஞ்சி அழுதேன்.
தாயே தந்தையென்றும் தாரமே கிளை
மக்களென்றும்
நோயே பட்டொழிந்தேன் தெரியேன்
பாலகனாய்
பல தீமைகள் செய்துவிட்டேன்-
பெரியேன்
ஆயினபின் பிறர்க்கே உழைத்து
ஏழையானேன்!

என்று வருந்துவது.

ஊரிலேன் காணியில்லை உறவு
மற்றொருவரில்லை
பாரில்நின் பாத மூலம் பற்றிலேன்: பரம
மூர்த்தி
காரொளி வண்ணனே(என்)கண்ணனே
கதறுகின்றேன்
ஆருளர் களைகண் அம்மா! அரங்கமா
நகருளானே!

என்று கதறுவது!

மனத்திலோர் தூய்மையில்லை
வாயிலோர் இன்சொல் இல்லை
சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி
விளிவன்; வாளா
புனத்துழாய் மாலையானே!
பொன்னிசூழ் திருவரங்கா
எனக்கினி கதியென் சொல்லாய்?
என்னையாளுடையகோவே!

என்று அவனிடம் சரண்புகுந்து கெஞ்சுவது!

27

ஆழ்வார்களுடைய பாசுரங்களை இப்படி எடுத்துப் பார்த்தோமானால், என்ன கதறி அழுதிருக்கிறார்கள்!

எத்தனையோ காலம் அவனை நினையாமல் வீணாகப் போய் விட்டது.

குடும்பத்துக்கே உழைத்து உழைத்து ஏழையானேன். பாலகனாய் பல தீமைகள் செய்தேன்; பெரியேனானபின் பிறர்க்கே உழைத்து ஏழையானேன்! பெரியவனான பிறகாவது விவேகம் வந்ததா என்றால் வரவில்லையே! அப்புறமும் பல தீமைகள்தான் செய்தேன்!

'பிறர்க்கே உழைத்து' என்றால் இங்கே குடும்பத்தில் இருக்கக் கூடியவர்களுக்கே என்று அர்த்தம். அவர்களுக்கே உழைத்து உழைத்து ஓடாய்த் தேய்ந்தேன்.

சங்கராந்தி அன்று, மாட்டுக்குக் கொம்பிலே நன்றாக வர்ணத்தைத் தீட்டி, கொப்பி போட்டு அதற்கு அலங்காரம் பண்ணி விடுவார்கள். 'கல் கல்' என்று ஓடுகிறது அந்தச் சின்ன மாடு-கன்றுக்குட்டி! அதுவே பின்னர் பெரிதாகிறது. அது நன்றாக உழைக்கிறது. அதன் சொந்தக்காரன் அதை வண்டியிலே கட்டுகிறான். முனையிலே கட்டி ஓட்டினால் அழகாகச் சுற்றிச் சுற்றி வருகிறது; செக்கிலே போட்டு இழுக்கிறான்; ஏற்றம் இறைக்கிறது; வேகமாக வண்டி இழுக்கிறது; பொதியைச் சுமக்கிறது...

இவ்வளவு சிரமப்பட்டு சிரமப்பட்டு சிரமப்பட்டு கடைசியிலே அதற்கு உடம்பெல்லாம் ஒடுங்கி, பலம் போய்விடுகிறது. கண்களெல்லாம் வெளியிலே பிதுங்கி நிற்கின்றன. கன்னத்திலே குழி விழுகிறது. வாயிலேயிருந்து நுரையாகக் கொட்டுகிறது. வயிறு ஒட்டிப் போய், எலும்பெல்லாம் தெரிகிறது! பின்னங்கால்கள் இரண்டும் இடிக்கின்றன. பாவம் அந்த மாடு! அதால் வண்டி இழுக்க முடியவில்லை; படுத்துக் கொண்டு விடுகிறது! அதை அடி அடி என்று அடிக்கிறான்! அப்போதும் எழுந்து கொள்ளமாட்டேனென்கிறது.

'இனிமேல் இது பிரயோஜனப்படாது' என்று கொண்டு போய் தூரத்தில் கொட்டில் கட்டி விடுகிறான்!

எப்போதாவது ஞாபகம் வந்தால் அதற்குக் கொண்டுபோய் ஒரு பக்கெட் ஜலம் வைப்பான். இல்லையென்றால் அதற்கு ஒரு

# மில்லை

பிடி வைக்கோல் போடுவான். இப்படிக் கொஞ்சம் காலம் பார்த்து, கடைசியிலே விற்கத் தகாத இடத்திலே அதை விற்று விடுகிறான்! அடிபட்டு மாண்டு போய் விடுகிறது மாடு!

இந்த எருதின் கதை நம் கதைதான்!



இதை யார் சொன்னார்கள்...?

சுக பிரும்ம மஹரிஷி சொன்ன விஷயம் இது! ஏதோ எருதுக்கு நடந்திருக்கிறது; நமக்கல்ல என்று ஒதுக்க முடியாது.

எருதைப் போலவே நாமும் பிறர்க்கென உழைத்து, ஓடாய்த் தேய்ந்து சிரமப்படுகிறோம். அந்திமக் காலத்தில் எழுந்திருக்க முடியாமல் போய்விடுகிறது.

அப்போது என்ன சிரமப்படுகிறோம் என்று சாஸ்திரம் சொல்கிறது பாருங்கள்:

வயதான காலம். உட்கார முடியவில்லை, எழுந்திருக்க முடியவில்லை. மூச்சு வாங்குகிறது! கண் தெரிய

வில்லை; இன்னொருத்தருடைய தயவிலே எப்போதும் இருக்க வேண்டியதாயிருக்கிறது. அந்த மாதிரி ஒரு நிலை ஏற்பட்டுப் போய் விடுகிறது. ஆதி சங்கர பகவத் பாதாள் சொல்கிறார்:

'எல்லாம் இவரை விட்டுப் போய்விடு கிறது. ஆனால், ஒன்றே ஒன்று மட்டும் போக மாட்டேன் என்கிறது: ஆசை!

அந்த அந்திமக் காலத்திலேயும் சிரமப் படுத்துகிறதே! உடல் கூனி, கேள்விக்குறி போல் போய்விடும்– அந்த மாதிரி ஒரு நிலை ஏற்படுகிறது.

இதுவே கஷ்டம்தான். இன்னொரு கஷ்டம் பாருங்கள்:

அந்திமக் காலத்திலே பத்தினி கூட இருக்க வேண்டும். ஆனால் பத்னியையும் இழந்து விட்டவர் கதி என்ன! அது இன்ன மும் கஷ்டமான நிலை!

கல்யாணத்திலே பாணிகிரஹணத்திலே அதற்கு முன்னால் வருகிற சப்தபதி மந்திரத் தில், 'இந்த இளமையிலே உன்னைக் கைப் பிடித்தேன். பிடித்த இந்தக் கையை, எழுந் திருக்க முடியாமல் தொண்டுகிழம் ஆனா லும் நான் விடமாட்டேன். ஜீவிதாப்தம் நீயும் நானும் அப்படியே இருக்க வேண்டும்'– என்று அமைந்திருக்கிறது!

ஆகவே அந்திமக் காலத்தில் பத்னியை இழந்து தவிப்பது இருக்கிறதே.. அந்த சிரமத் தைச் சொல்லி முடியாது!

என்ன சிரமத்தைப் படுவார் அவர்...?

அடுத்தது அதைச் சொல்கிறது சாஸ்திரம்:

எல்லாவற்றுக்கும் பிள்ளைகளிடத்தி லேயே கேட்க வேண்டும்! ஒரு தடவை கேட்டால் கொடுப்பார்கள். மறு தடவை கேட்டால் என்ன நினைப்பார்களோ என்று தயக்கம் வரும். பத்னியுமில்லை; உடம்பும் ஒத்துழைக்கமாட்டேனென்கிறது. மருமகள் ஏசுகிறாள். அந்த நச்சுப் பேச்சுக்களைத் தாங் கவே முடியவில்லை.

– இப்படி விவரித்துக் கொண்டே வருகிற சாஸ்திரம் கடைசியாய்ச் சொல்கிறது:

'இப்படி ஜீவித்துக் கொண்டேயிருப் பதைவிட 'போய்விடுவதே நல்லது!'

அந்த மாதிரி ஒரு நிலை!

இப்படிப்பட்ட நிலையை அடைய லாமா? அந்த மாதிரி நிலையை அடைந் தாலாவது விவேகம் வர வேண்டாமா?

அப்போதாவது கிருஷ்ணா, ராமா, கோவிந்தா என்று சொல்லக் கூடாதா?

சொல்லமாட்டார்! அந்த சமயத்திலேயும் விவேகம் வருவதில்லை. சாமான்ய விஷயத் தையே பேசிக் கொண்டிருக்கிறார்கள்!

ஆகையினாலே அந்திமக் காலம் என்பது ரொம்ப சிரமம்.

அதையெல்லாம் நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். அந்த மாதிரி ஒரு காலம் வரும் என்று நினைத்துப் பார்க்க வேண்டும். அந்த மாதிரி நிலையில் பகவான் நம்மை

## அருள்வாக்கு

**ஸங்கமாகச் சேர்ந்து தொண்டு செய்கிற வர்களுக்கு அத்யாவசியமாயிருக்க வேண்டிய யோக்யதாம்சங்கள்: அவர்களுக்குக் கட்டுப்பாடு (நியமம்) ரொம்பவும் தேவை. எடுத்துக் கொண்ட வேலையில் கொஞ்சம்கூடப் பொறுப்பு குறையக் கூடாது. ஸத்தியமும், அந்தரங்க சுத்தமும் இதே போலத் தேவை. அன்போடு மதுரமாகப் பேசவும், பழகவும் வேண்டும். பணத்தைக் கையாளுவதில் அப்பழுக்கில்லாதவர்கள் என்ற நம்பிக்கையை உண்டு பண்ணக் கூடியவர்களாக இருக்கணும். நியாயமாக ஸந்தேஹப்படுபவர்களிடம் பொறுப் பில்லாமலோ, பொறுமையிழந்தோ பதில் சொல் லக்கூடாது. அதே ஸமயத்தில் அநேக ஸந்தேஹப் பிராணிகள் ஏதாவது 'ரூமர்' கிளப்பிக் கொண்**



**ஓடிப்போன காரணம் தெரியாமல்**
**முழுதாய் ஐந்து வருடங்கள் ஓடிவிட்டன**

**ஊட்டி எஸ்டேட் வாட்ச்மேன்**
**திருப்பூர் கம்பெனியில் வேலை**
**மெட்ராஸ்ல ஓட்டல் வேலை**
**மீன் மார்க்கெட்டுக்கு.**
**மேட்னி ஷோ பார்க்க...**
**இப்படி எதையாவது சொல்லி**
**'உன் புருசன் எங்கே?' எனக்**
**கேட்பவர்களை**
**சமாளித்துவிடுகிறாள்.**

**ஓட்டுவீட்டில்**
**ஒன்றரை வருடம் வாழ்ந்ததற்கு**
**அடையாளமாக வளர்ந்து நிற்கும்**
**குழந்தை**
**'நா அப்பா மாதிரி**
**பெரிய்யஆளா வருவேம்மா'**
**என சொல்லும்போது மட்டும்**
**அழுவதா சிரிப்பதா**
**இன்று வரை தெரியவில்லை.**

**– உத்தம எழிலரசு**

டிருக்கிறார்களே என்பதற்காக, ''நமக்கென்னத்துக்கு வரான் பாடு?'' என்று பொதுத் தொண்டை விட்டு விடவும் கூடாது. அதாவது அவமானங்களைப் பாராட்டிக் கொண்டிராத மனப்பான்மை வேண்டும். நகரமானால் ஒரு பேட்டையில் இருப்பவர்களெல்லாம் சேர்ந்து செய்யலாம். க்ராமமானால் நாலு க்ராமத்து ஜனங்கள் ஒன்று கூடிப் பண்ணலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.



வைக்கக் கூடாது என்பதையும் நினைத்துப் பார்க்க வேண்டும். அதற்கு நாம் என்ன பண்ண வேண்டும் என்பதையும் இப்போதே நிர்ணயம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

நமது நரம்புகளெல்லாம் நன்கு முறுக்கேறி மிடுக்குடன் இருக்கையிலேயே நிர்ணயம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

எல்லாம் போன பிற்பாடு என்ன பண்ணுவது? ஒன்றும் பண்ண முடியாது!

அப்போதைக்கப்போதே சொல்லி வைக்க வேண்டும்.

'பிறர்க்கே உழைத்து' என்பதில் இன்னொரு அர்த்தமும் இருக்கிறது. 'பிறர்' என்பது பந்து மித்ரர்களைக் குறிக்கிறது போலவே 'தான்' அல்லாத தன் 'சரீரத்துக்கே' என்றும் குறிக்கும்.

இந்த சரீரம் நாமல்லவே! ஆத்மா தானே நாம். சரீரம் வெறும் உபகரணம். நாம் உயர்ந்து மேலே போய் உத்தம கதியை அடைவதற்காக இந்தக் கர்ணகளேபரங்களையெல்லாம் பரமாத்மா நமக்குக் கொடுத்திருக்கிறான். இதைப் போய் நாம் சாச்வதம் என்று நினைக்கலாமா?

மாமிசத்தாலும் ரத்தத்தாலும் பிசைந்து கடையப்பட்ட சுவர் இது! இது நிற்பதற்கு உள்ளுக்குள்ளே ஸ்தம்பங்கள் எலும்புக்கூடு! அதற்கு மேல் கூரை வேயப்பட்டிருக்கிறது— ரோமங்களைக் கொண்டு! அதற்கப்புறம் வாஸ்து சாஸ்திர ரீதியாக நவத்வாரங்கள்!

பெரியாழ்வார்— இதை— உடலைப் பெரிய பட்டிணம் என்று சொல்கிறார்!

இந்த நகரத்துக்கு ஒன்பது வாயிற்படிகள்; பரமாத்மா வைத்திருக்கிறான்.

இந்த வீட்டை நமக்குக் கட்டிக் கொடுத்து, க்ஷேத்ரக்ஞன் என்று சொல்லக் கூடிய ஆத்மாவைக் கொண்டுவந்து இந்த வீட்டிலே உட்கார வைக்கிறான். கிருஹப் பிரவேச சுப முகூர்த்தம்!

வந்து உள்ளே உட்கார்ந்ததும் இது ஒரு தடவை உடலைப் பார்க்கிறது. பார்த்தவுடனே 'இதுதான் சாச்வதம்— இதுதான் நம்மை ரக்ஷிக்கிறது' என்று இந்த சரீரத்துக்கே உழைக்கிறது.

ஒரு நாள், ஒவ்வொன்றாகக் குறைய ஆரம்பிக்கிறது. சரீரத்திலே இருப்பது ஒவ்வொன்றும் சொன்ன வார்த்தை கேட்காமல் வேறான திக்கிலே போகவே, இது நமக்கு சாச்வதமில்லை என்று தெரிந்து போகிறது. அப்போது 'வந்து திருவடியை அடைந்தேன்' என்று விழுகிறான்!

பகவானுடைய காருண்யத்தைப் பாருங்கள். நன்றாயிருக்கும்போது வரவில்லை. எல்லாம் போய்விட்ட பிறகு, இப்போது 'உன்னிடத்திலே வந்தேன்' என்று சொன்னால், அவன் 'இப்போதாவது வந்தாயே!' என்று ஏற்றுக் கொள்கிறான்.

'ஏன் முந்தாநாள் வரவில்லை; ஏன் நேற்று வரவில்லை; ஏன் அப்புறம் வரவில்லை' என்று அவன் கேட்கமாட்டான். வந்ததைக் கொண்டாடி அனுக்கிரஹம் பண்ணுகிறான்!

இந்தக் குழந்தை நம்மிடத்திலே வந்ததே என்று அனுக்கிரஹம் பண்ணுகிறான்.

அதனாலே நினைத்து நினைத்து, நினைத்து நினைத்து வருந்த வேண்டும். பச்சாதாபப்பட வேண்டும். கண்ணீர் விட்டுக் கதறவேண்டும்.

கண்களிலிருந்து விழக்கூடிய நீரைக் கைகளால் இரைத்து, வாரி வாரி விட வேண்டும்.

அதுதான் நிர்வேதம்!

அந்த நிர்வேதம் யாருக்கு வரும்?

விவேகமுடையவனுக்குத்தான் வரும். விவேகமுடையவனுக்குத்தான் நிர்வேதம் வருமேயொழிய அவிவேகிகளுக்கு வருமா!

ஆகவே விவேகம் என்கிற முதல் படிக்கட்டை ஏறினால்தான் நிர்வேதம் என்கிற இரண்டாவது படிக்கட்டை ஏற முடியும்.

விவேகமே வரவில்லையானால் நிர்வேதம் வராது.

(தொடரும்)

# நெஞ்சை அள்ளிய
# தஞ்சை விழா!

**க**ம்பீரமாகத் தலைமையுரையாற்ற எழுந்து வந்தார் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் கதிர். மகாதேவன்.

"எந்தவொரு கருத்தரங்கமும் நடந்ததும் - முடிந்ததும் - மறந்ததும் என்றிருக்கும். ஆனால் அமரர் கல்கி நூற்றாண்டு விழாக் கருத்தரங்கு மட்டும் நடந்ததும் - முடிந்ததும் - மறக்க முடியாததுமாக இருக்கும்" என அவர் குறிப்பிட்டபோது அரங்கிலே கரவொலி அலை ஓசையாய் எழுந்தது!

அவர் வாக்கை மெய்ப்பித்தன இரு கருத்தரங்கு நிகழ்ச்சிகள்.

**த**ஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழக வளாகம் முழுவதும் அழகிய வனம் போல் காட்சி தருகின்றது. சுமார் ஆயிரத்து முன்னூறு ஏக்கர் பரப்பளவில் மரங்கள் சூழ்ந்த இடங்களுக்கு நடுவே 'மாடர்ன் தியேட்டர்ஸ்' பட செட்டிங்குகளை நினைவுக்குக் கொண்டு வந்து நிறுத்தும் கலை நயம் மிகுந்த கட்டடங்கள்!

இங்கேதான் திருச்சி, அகில இந்திய வானொலி நிலையமும் தஞ்சை தமிழ்ப் பல்லைக்கழக இலக்கியத் துறையும் இணைந்து அமரர் கல்கி நூற்றாண்டு விழாவை நடத்தின.

விழாவுக்கு வரவேற்புரை வழங்கியவர் முனைவர் து. சீனிச்சாமி. இவர் இந்த விழாவுக்காக அயராது உழைத்து அனைவருடனும் தொடர்பு கொண்டு பணியாற்றியவர்.

ஒரு நல்ல துவக்கமாக அமைந்தது, மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக்கழகத் துணைவேந்தர் க.ப. அறவாணனின் தொடக்கவுரை.

"கல்கியின் படைப்புகள்



• வந்திருந்தோரில் ஒரு பகுதி





மிகவும் எளிமையானவை. மெத்தப் படித்தவர்கள் மட்டுமின்றி சாதாரண படிப்பு உள்ளவரும் வாசித் துணர்ந்து புரிந்து கொள் ளக்கூடிய எளிய தமிழ்ச் சொற்களைக் கையாண்ட வர் அவர். அழகிய பட்டுப் புடைவையில் ஒற்றைச் சரிகை போல நளினமாக வார்த்தைகளை வடித்துத் தந்தவர் கல்கி. தமிழர்களின் வாசிப்புத் தாகத்தை மிகவும் அதிகப்படுத்தியவர். வீட்டில் நானும் படித்து, என் மனைவியும் படித்து, என் மகளும் படித்து, என் மகனும் படித்து மற்றவர்க் கும் படிக்கக் கொடுப்பது போல் வருகின்ற வார இதழ் கல்கி!" எனக் குறிப்பிட்டார்.

தனித்தனி முத்துக்களாய் முப்பது கட்டு ரைகள். அத்தனையும் ஆய்வுக் கட்டுரைகள். கருத்தரங்க அமர்வில் வாசிக்கப்படும் கட்டுரைகள் அவரவர் கைப்பைக்குள்ளே காகிதச் சுருளாய் அடங்கிப் போகாமல், அனைத்தையும் ஒன்றாய்த் தொகுத்து புத்தகமாய்ப் பொலிவு பெறச் செய்திருந்த னர். தலைப்பு 'கல்கியின் கதை உலகம்'.

முதல் பிரதியை திருச்சிராப்பள்ளி, அகில இந்திய வானொலியின் நிலைய இயக்குனர் பி. தனலெட்சுமி வெளியிட, அதனைக் கி.ரா. பெற்றுக் கொண்டார்.

வானொலி நிலைய இயக்குனர் பி. தன லெட்சுமி, "மாமனிதரைப் பற்றிய நூலை வெளியிடுவதில் மகிழ்ச்சி. கல்கியின் நாவல்களில் பெண்ணி யத்திற்கு முக்கிய இடம் உண்டு. எனக் குப் பிடித்த நவீனம் தியாகபூமி. ஒரு நல்ல படைப்பாளியால்தான் பல படைப்பாளி களை உருவாக்க முடியும். அந்த வகையில் அமரர் கல்கி அவர்கள் மிகச் சிறந்த படைப்பாளி" எனக் குறிப்பிட் டார்.


• அசோகமித்திரன்


• பொன்னீலன்


• நீல. பத்மநாபன்



'கல்கி'யில் வரலாறு என் னும் தலைப்பில் பேசியவர் முனைவர் சிற்பி பாலசுப்பிர மணியன். தமிழ் நாவல் வரலாறு, ஆங்கில நாவல் வரலாறு, இந்திய மொழி நாவல் வரலாறு என மிகப் பெரிய ஆய்வுத் தளத்துடன் அவர் தந்த அருமையான உரையில், "ஒரு வரலாற்று நாவலாசிரியர் வாழ்ந்து மறைந்த பிறகும் பேசப்படுவதே அவர் தம் வெற்றிக்குச் சான்று. ஐம்பதாண்டுகளுக்குப் பின்னரும் கல்கியின் வரலாற்று நாவல்கள் வாசகர்கள் மத்தியில் உலா வந்து கொண்டிருக் கின்றன. அமரர் கல்கி எழுதிய வரலாற்றுப் புதினங்கள் எழுதப்பட்ட காலத்திலும் சரி, இப்போதும் சரி ஒருவித மாயக் கவர்ச்சியோடு புதிய புதிய வாசகர்களைத் தன்ன கத்தே மயங்க வைத்துக் கொண்டிருக்கிறது என்றால் அது மிகையாகாது" என நெஞ்சார்ந்த புகழாரம் சூட்டினார்.

தேசியவாதியும், சமூக சிந்தனையாளருமான தஞ்சை அ. ராமமூர்த்தி, 'கல்கி'யில் விடுதலை வேள்வி பற்றி உரை


• விழா மேடையில்

நிகழ்த்தினார்.

"வரலாற்றுப் புதினங்கள் எழுதிய நாவலாசிரியர்கள் உண்டு. ஆனால் வரலாற்றுப் புதினங்கள் எழுதிய கல்கி, தேச விடுதலைக்காக மூன்று முறை சிறை சென்றவர் என்கிற வரலாறு வேறு யாருக்கும் கிடையாது" என்றார்.

'கல்கி'யில் தமிழிசை குறித்து உரை நிகழ்த்திய திருவையாறு, தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி முதல்வர் முனைவர் ராம. கௌசல்யா,

"வேற்றுமொழி இசை மீது வெறுப்பு ஏற்படாவண்ணம் தமிழிசைக்குத் தொண்டு செய்தவர் அமரர் கல்கி" எனக் குறிப்பிட்டார்.

உதவி நிலைய இயக்குனர் துரை. செல்வராசு நன்றி நவில, காலை நேர நிகழ்ச்சிகள் நிறைவு பெற்றன.

தஞ்சை மண்ணுக்கேயுரிய குளிர் தென்றல் வீசிய மாலை நேரம். அரண்மனை வளாகத்தில் சிறப்பு ஆய்வரங்கம். ஆடவரும் பெண்டிருமாய் அரங்கு நிறைந்த கூட்டம்.

யாரோடும் அன்புடன் உறவாடத் தயங்காத 'தேரோடும் வீதி' எழுத்தாளர் நீல. பத்மநாபன் ஆய்வரங்க நெறியாளராக உரை தந்தார்.

"ஒரு படைப்பாளியை அவரது வாழ்நாளில் செய்யும் மதிப்பீடுகள் சரிவர அமைவதில்லை. அமரர் கல்கி அவர்களின் படைப்புகளை மறு மதிப்பீடு செய்ய உகந்த தருணம் இதுவே. அவர் எழுதிய காலம் காந்தியமும் தேசியமும் இந்த மண்ணில் வேரூன்றத் தொடங்கிய காலம். அவரது படைப்புகளை இரு பெரும் பிரிவுகளாக வகைப்படுத்தலாம். ஒன்று சமூக சீர்திருத்த சிந்தனைகளைச் சார்ந்தது. மற்றொன்று காந்திய, தேசியச் சிந்தனைகளை உள்ளடக்கியது. வரலாற்று நாவலாக இருந்தாலும் சரி, சிறுகதைகளாக இருந்தாலும் சரி; புதிது புதிதாகத் தோன்றிய கற்பனைகளுக்கு அழகிய வடிவம் கொடுத்து அழியாத படைப்புகளைத் தந்தவர் கல்கி!"

'கல்கியில் இலக்குகள்' என்னும் தலைப்பில் எழுத்தாளர் அசோகமித்திரன் பேசுகையில், "எதைப் பற்றியும் தெளிவு ஏற்பட்ட பிறகுதான் எழுதவே முடியும். அத்தகைய தெளிவு ஆரம்ப நாட்களில் இருந்தே அவருக்கு ஏற்பட்டு விட்டது. காந்திய வழியில் தேச விடுதலையும், தேசியமும் அவரது இலக்காக இருந்தன. தமிழ் மொழி மீது தளராத ஈடுபாடு கொண்டவர். உரை நடையில் ஆங்கிலச் சொல் தவிர்த்து தமிழில் எழுத இன்னும் அவரது புதினங்கள் வழிகாட்டியாக அமைந்துள்ளன. தேச விடுதலை, சமூக முன்னேற்றம், பெண் உரிமை என மிகச் சிறந்த மதிப்பீடுகளையே அவரது இலக்குகள் உள்ளடக்கி உள்ளது" எனக் குறிப்பிட்டார்.

'கல்கி'யில் காந்தியம் பற்றி உரை வீச்சு தந்தவர் எழுத்தாளர் பொன்னீலன்.

"மாணவப் பருவத்தில் காந்தியத்தின் தாக்கத்தால் ஈர்க்கப்பட்டு சுதந்திரப் போராளியாய் மாறியவர் அமரர் கல்கி. ராஜாஜியின் ஊடாக காந்தியை தரிசித்தவர் அவர். காந்திய சிந்தனையை அலை ஓசை நாவலில் அற்புதமாகப் பதிவுசெய்திருக்கிறார். அலை ஓசை நாயகி சீதாவை காந்தியவாதியாக, ஏன் காந்திய பக்தை என்று சொல்லக்கூடிய அளவுக்கு சித்தரித்திருக்கிறார்" என்றார் பொன்னீலன்.

'கல்கி'யில் நகைச்சுவை என்னும் தலைப்பில் பேசியவர் முனைவர் குருவம்மாள்.

"சிரிக்கத் தெரியாதவர்க்குப் பகல் கூட இருட்டாக இருக்கும் என்றவர் கல்கி. அவரது ஏட்டிக்குப் போட்டி கட்டுரை படிப்போரை சிரிக்க வைத்ததுடன் சிந்திக்கவும் வைத்தது. சிரிக்க வைத்து சிந்தனையைத் தூண்டி விட்டவர் அவர். அவரது எழுத்துக்களில் நகைச்சுவை சாடல் நிறைந்து இருக்கும்" என்றார்.

முதல் நாள் நிகழ்ச்சிகளை வானொலி



## அரிதார மனசு

யாரும்
யாரோடும் சேரலாம்
யாரும்
யாரோடும் பேசலாம்
நேற்று பேசியது
இன்று மறந்திருக்கலாம்
இன்று பேசுவது
நாளை மறக்கலாம்...
உள்ளத்திற்கு
அரிதாரம் பூசி
அப்பாவி முகங்களாக
உலா வரும்
அரசியல்வாதிகள்!

— பா. உதயகண்ணன்

அறிவிப்பாளர் சி.பி. சிவமேனி தகுந்த வர்ணனையுடன் தொகுத்தளித்தார். நா. தமிழ்வாணன், விாசகர் ஆகியோரின் மேற்பார்வையில் இரண்டு நாள் நிகழ்ச்சிகளும் வானொலித் தொகுப்பாக வடிவம் பெற்றன. அவற்றை மூன்று நாட்கள் தொடர்ந்து ஒலிபரப்பினர், திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தினர்!

முதல் நாள் மதியமும், மறுநாள் (ஜூலை 11) காலையிலும் பல்கலைக்கழக வளாகத்தில் கருத்தரங்க அமர்வுகள் மூன்று இடங்களில் நடைபெற்றன.

கருத்தரங்க அமர்விலும் 'மகளிர் அணி'யே 'பேரணி'யாக விளங்கியது. முனைவர் கஸ்தூரி நாகராஜன், முனைவர் வே. சசிகலா இருவரும் வந்தது குற்றாலத்திலிருந்து. அதனால்தானோ என்னவோ இருவரின் கருத்தரங்க உரையிலும் மலையருவியின் நீர்வீழ்ச்சியாய் நல்ல தமிழ்ச் சொற்கள் கொட்டிக் கொண்டேயிருந்தன! முப்பது கட்டுரைகளுக்கு முடிமணியாக ஆங்கிலத்தில் 'சிவகாமியின் சபதம்' குறித்து ஆய்வுக் கட்டுரை ஒன்றைத் தன் பங்களிப்பாகச் செய்திருந்தார் கோவை, கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி, ஆங்கிலத் துறைப் பேராசிரியர் ஆர். பூங்கோதை!

பல்கலைக் கழக மாணவர்கள், முனைவர்கள் மட்டுமே கலந்து கொண்ட கருத்தரங்க அமர்வில் இவை ஏதுமற்ற ஒரு டிடிபி. ஆபரேட்டர் (வயது 26) ஆ. அறிவழகன் 'வாசகனோடு வாசகனாய் கல்கி!' என்னும் தலைப்பில் அருமையான கட்டுரை ஒன்றை வாசித்தார்!

இரண்டாம் நாள் மாலை நிகழ்ச்சியில் தமிழ் வளர்ச்சித் துறை இயக்குனர் ம. ராசேந்திரன் தலைமை உரையாற்றினார்.

"வரலாற்று நாவல்கள் எழுதி வரலாற்றில் காணாமல் போனவர்கள் மத்தியில் தானே ஒரு வரலாறாய் மாற்றம் பெற்றவர் கல்கி" எனக் குறிப்பிட்டார் அவர்.

'விசாரணைக் கமிஷன்' போட்ட எழுத்தாளர் சா. கந்தசாமி பேச வந்த தலைப்பு 'கல்கி'யில் இன்றைய பார்வை.

"கல்கியின் படைப்புகள் இரண்டு விதமானது. ஒன்று சமூகம் சார்ந்தது. இன்னொன்று சரித்திரம் சார்ந்தது. வாழ்க்கைக்கு அர்த்தம் உண்டு என்று எழுத்துக்கள் மூலமாக நிரூபித்தவர் அவர். எளியநடை, சுவாரஸ்யம் அவரது தனிச் சிறப்பு. தமிழகத்தில்



"அவன் சரியான கடன்காரனா, எப்படி?"

"கபடி விளையாடும்போது சடுகுடுன்னு சொல்றதுக்குப் பதிலா கடன் குடு கடன் குடுங்கிறாரே!"

– வெ. ராஜாராமன்

தான் வாழ்ந்த காலத்தில் காலத்தோடு தன்னையும் தன் படைப்புகளையும் இணைத்துக் கொண்டவர் கல்கி. தமிழ் மக்களைத் தொடர்ந்து படிக்கவும், இலக்கியத்தின் மீது நாட்டம் கொள்ளச் செய்ததிலும் அவரது பங்கு மகத்தானது" என்றார்.

'கல்கி'யில் சமூக சிந்தனைகள் குறித்து அலசி ஆராய்ந்து பேசினார் மாலன்.

"கல்கி, சமூக சீர்திருத்தத்தை வாழ்க்கையின், எழுத்தின் நோக்கமாகக் கொண்டிருந்தார் என்றால் அது தற்செயல் அல்ல. தேசபக்தி, அரசியல் ஈடுபாடு, சமூக சீர்திருத்தம் எனப் பல விஷயங்களில் பாரதியை முன்னோடியாகக் கொண்டவர் கல்கி. சிறுகதைகளை சமூக சீர்திருத்தத்துக்கான செய்தியைப் பதிவு செய்து வெளிவரும் ஒரு சாதனமாகக் கருதியவர். தனது 'விஷ மந்திரம்' சிறுகதையில் தீண்டாமையை இடித்துரைத்தார். உடன்கட்டை ஏறுதலுக்கு எதிர்ப்பு, குடிப்பழக்கத்து எதிர்ப்பு, மூட நம்பிக்கை மற்றும் பால்ய விவாக எதிர்ப்பு, விதவைக்கு ஆதரவு, பெண்களுக்கும் குடும்பச் சொத்தில் பங்கு உண்டு என்பன போன்ற சமூக சீர்திருத்தங்களே அவர்தம் படைப்புகளில் நிறைந்து உள்ளன" என்றார் மாலன்.

இறுதியாய்ப் பேச வந்தவர் பிரேமா நந்தகுமார்.

'கல்கி'யில் பெண்மை குறித்து பெருமையுடன் பேசியவர், கல்கியின் கதாபாத்திரங்களின் பேச்சு வழக்கை உணர்வு பூர்வமாகத் தம் உரையில் தத்ரூபமாகக் கண்முன்னே அபிநயித்துக் காட்டியபோது அவையோர் அனைவரும் வியந்து போயினர்.

வானொலி அறிவிப்பாளர் சாந்தாவின் முத்தாய்ப்பான தொகுப்புரையுடன் விழா இனிது நிறைந்தது.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

**வைகோவின் புத்தக வெளியீட்டு விழாவில் கலந்து கொள்வதற்காகச் சென்னை வந்திருந்தார் மத்திய நிதியமைச்சர் யஷ்வந்த் சின்ஹா. தி.நகரில் உள்ள பா.ஜ.க. அலுவலகத்தில் வழக்கமான பத்திரிகையாளர் சந்திப்பு முடிந்தவுடன், பிரத்தியேகமாக நமக்குப் பேட்டியளித்தார். பேட்டியிலிருந்து:**

# கள்ள நோட்டு பற்றிக் கவலை

**கல்கி:** கடந்த ஒரு வருட காலத்தில் இந்தியப் பொருளாதாரம் முன்னேறி இருக்கிறதா?

**சின்ஹா:** கண்டிப்பாக, குறிப்பிடும்படியான முன்னேற்றம் அடைந்திருக்கிறது. 1997-98 முதலே தொழில் துறையில் ஒருவித தேக்க நிலைமை. 98-99ம் வருட ஆரம்பத்திலும் அதே சூழ்நிலைதான். பாஜ.க. ஆட்சியின்போது, நடத்தப்பட்ட அணு ஆயுத சோதனை காரணமாக, அமெரிக்கா பொருளாதாரத் தடைகளை விதித்தது. 'இந்தியாவின் கதி அதோ கதிதான்' என்கிற மாதிரியாகப் பலரும் விமர்சித்தார்கள். ஆனால் அப்படி ஏதும் நிகழவில்லை. பொருளாதாரம் சீர்படத் தொடங்கியது. நான் பதவி ஏற்ற மூன்றாவது மாதம், பொருளாதார முன்னேற்றத்துக்கான ஆரம்ப அறிகுறிகள் தெரிவதாகக் குறிப்பிட்டேன்.

கடந்த வருடத்துடன் இந்த நிதியாண்டின் முதல் காலாண்டுப் புள்ளி விவரங்களை ஒப்பிட்டால் இது புரியும். கலால் மற்றும் சுங்கவரி வசூலில் நல்ல முன்னேற்றம். வருமான வரி கட்டுவோரின் எண்ணிக்கை கணிசமாக அதிகரித்துள்ளது. இடையே வெங்காயம் போன்ற ஒரு சில விலையுயர்ந்து, பிரச்னை எழுப்பினாலும், போன வருடம் உணவு தானிய உற்பத்தி, முந்தைய ஆண்டுகளை விஞ்சி சாதனை புரிந்துள்ளது. பணவீக்கம் கடந்த இருபது வருடங்களில், இத்தனை குறைவாக (1.8%) இருந்ததே இல்லை என்று சொல்லுமளவுக்குக் கட்டுப்பட்டுள்ளது.

**கல்கி:** கார்கிலில், பாகிஸ்தான் ஊடுருவல்காரர்களை எதிர்த்து, விரட்டியடிக்கும் பணியில் நம் ராணுவத்து ஏற்பட்ட மொத்த செலவு எவ்வளவு?

**சின்ஹா:** அதை, பாதுகாப்பு அமைச்சகம் கணக்கிட்டுக் கொண்டிருக்கிறது. இறுதி விவரம் இல்லாத சூழ்நிலையில், இத்தனை கோடி ரூபாய் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியவில்லை. விரைவில் அந்த விவரம் வெளியாகும்.

**கல்கி:** கார்கில் பிரச்னையால் அரசுக்கு ஏற்பட்ட திடீர்ச் செலவை ஈடுகட்ட, கார்கில் வரி என்ற பெயரிலேயே ஒரு புது வரி விதிக்கப்பட இருப்பதாக செய்திகள் வருகின்றனவே! அது உண்மையா?

**சின்ஹா:** கார்கில் பிரச்னையினால் திடீரென்று செலவு ஏற்பட்டது வாஸ்தவம்தான். ஆனால், அது ராணுவத்துக்காக ஒதுக்கப்பட்ட பட்ஜெட்டை வைத்துக் கொண்டே சமாளிக்கும் சூழ்நிலையில்தான் இருக்கிறது. எனவே புதிய வரி விதிக்கும் எண்ணம் ஏதும் இப்போதைக்கு இல்லை.

**கல்கி:** அப்படியெனில், சிறிது காலம் கழித்து வரி விதிக்கப்படலாம் என்று கொள்ள வேண்டுமா?

**சின்ஹா:** இப்போதுள்ள சூழ்நிலையில், ராணுவ பட்ஜெட்டை அதிகரிக்க வேண்டியுள்ளது. ஆனாலும் அரசு செலவினங்களைக் கண்டிப்புடன் குறைத்து, புதிய வரிகள் எதுவும் விதிக்காமலேயே சமாளித்து விட முடியும். ஆனாலும், அப்படி முடியாதபடி ஒரு சூழ்நிலை ஏற்படும் பட்சத்தில், வரி விதிக்க வேண்டி வரலாம். இப்போதே, வரியே இல்லை என்கிற உத்தரவாதம் தர முடியாது. அதே நேரம், கண்டிப்பாக வரி உண்டு என்றும் நான் சொல்லவில்லை.

**கல்கி:** பொதுத்துறை நிறுவனங்களில் உள்ள பல நூறு கோடி முதலீடுகளை

விற்பது சம்பந்தமான காபந்து அரசின் முடிவுக்கு ஆட்சேபணை எழுந்துள்ளதே?

**சின்ஹா:** இது இந்த வருடம் நான் பாராளுமன்றத்தில் சமர்ப்பித்த பட்ஜெட்டில் கூறப்பட்ட ஒன்றுதான். இதற்கு முந்தைய வருடங்கள் போல விவாதம் எதுவுமே இல்லாமல், அப்படியே பாராளுமன்றம் எனது பட்ஜெட்டை ஏற்றுக் கொண்டதை நாடே அறியும். பட்ஜெட்டில் குறிப்பிடப்பட்டு, பாராளுமன்றத்தால், ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு விஷயம் குறித்து, இப்போது வீண் சர்ச்சை கிளப்புவது அவசியமில்லாத ஒன்று.

**கல்கி:** தற்போதைய அன்னியச் செலாவணி கையிருப்பு எந்த நிலைமையில் உள்ளது?

**சின்ஹா:** தற்போதைய கையிருப்பு முப்பத்து மூன்று பில்லியன் டாலர். இந்த அளவுக்கு, சமீப காலத்தில் அன்னியச் செலாவணி கையிருப்பு இருந்ததே

# வேண்டாம்!

இல்லை. நாம் ரொம்ப சேஃப்! ஏற்றுமதிகள் அதிகரித்துக் கொண்டிருப்பது பாசிடிவான அறிகுறி!

**கல்கி:** ஐந்நூறு ரூபாய் நோட்டு பற்றிய புரளி, இங்கே மிக அதிகமாக உள்ளது. வங்கிகளில் கூட ஐந்நூறு ரூபாய் நோட்டுகளை வாங்க மறுக்கிறார்கள். ஐந்நூறு ரூபாய் நோட்டையே செல்லாது என்று அரசாங்கம் அறிவிக்கப் போகிறது என்றுகூட வதந்திகள் வந்தனவே?

**சின்ஹா:** அரசு வெளியிட்டுள்ள ஐந்நூறு ரூபாய் நோட்டில் பல்வேறு சிறப்பு அம்சங்கள் உள்ளன. இவற்றைக் கள்ள நோட்டு அடிப்பவர்களால் பின்பற்றவே முடியாது. எனவே, கள்ள நோட்டு உண்மையில் புழக்கத்தில் இருந்தால்கூட அதை எளிதில் கண்டுபிடித்து விட முடியும்! வங்கிகளில்கூட வதந்திகளை நம்பி, ஐந்நூறு ரூபாய் நோட்டுகளை வாங்க மறுக்கிறார்கள் என்பதைக் கேட்கிறபோது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது! விஷமிகளின் ஏமாற்றுச் செயல்களுக்கு யாரும் ஏமாந்து போகாதீர்கள்!

**கல்கி:** உங்கள் சொந்த மாநில அரசியல் பற்றிய ஒரு கேள்வி. வரலாறு காணாத கால்நடைத் தீவன ஊழல், தான் முதல்வர் பதவியிலிருந்து விலக வேண்டிய கட்டாயமான சூழ்நிலையில், தம் மனைவியை முதலமைச்சராக்கும் சர்வாதிகாரம்– இத்தனையையும் மீறி, லாலு பிரசாத் யாதவ் எப்படி பீகாரில் செல்வாக்குடன் இருக்கிறார்?

**சின்ஹா:** இதைப் பத்திரிகை, மீடியா ஏற்படுத்திய மாயை என்றுதான் சொல்ல வேண்டும். காலப் போக்கில் லாலு பிரசாத் யாதவின் செல்வாக்கு குறைந்து கொண்டேதான் வந்திருக்கிறது. 91ம் ஆண்டில் லாலு கட்சியின் எம்.பி.கள் முப்பத்து ஐந்து பேர் வென்றார்கள். 98ம் ஆண்டில் பதினேழு பேர்தான் வென்றார்கள். ஆனால் பி.ஜே.பி அப்படியில்லை. அன்று மூன்று எம்.பி.க்கள்தான். போன தேர்தலில் இருபது எம்.பி.கள்! பி.ஜே.பி - சமதாக் கூட்டணி மொத்தம் முப்பது இடங்களைக் கைப்பற்றியது. எனவே, பீகாரில் லாலு யாதவின் செல்வாக்கு சரிந்து கொண்டே வருகிறது. வரும் தேர்தலில் இன்னமும் சரியும் என்பதில் சந்தேகமில்லை.

**கல்கி:** அடுத்த பட்ஜெட்டை, பாராளுமன்றத்தில் நீங்கள்தான் சமர்ப்பிப்பீர்களா?

**சின்ஹா:** இந்தக் கேள்விக்கு, நான் எப்படி பதில் சொல்ல முடியும்? (சிரிக்கிறார்)

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **ஸ்ரீஹரி**

# மைக்

எச்சரிக்கை : இது தேர்தல் நேரம்



மைக் இல்லாத தேர்தல்
ஊமைப்படம்.
மைக்,
பாமரக் குடிமகனுக்கு
குருகுல வாசல்

ஒலியை வாங்கி,
மக்கள் காதுகளையே
வாக்கு வங்கிகளாக
மாற்றும்
ரசவாத வித்தைக்கோல்.

போற்றுதலையும் தூற்றுதலையும்
தாங்கும் திடமான ஜடம்
காற்றின் கடத்தலுக்காகத்
துணைநிற்கும்
கையாள்

வாதங்களால்
வளைந்து விடாத காலோடு
சத்தங்களின் பித்தத்தால்
வீங்கிய தலையோடு
இது, இன்னும் ஒரு
அரிச்சந்திரனைத்
தேடிக் கொண்டிருக்கிறது...

– நிர்மலா சுரேஷ்



கேட்காதே.
சொல்லி மாளாது
சோடாக்களின் சோகம்.

சோடாக்கள் நாங்கள்
பேசத் தொடங்கினால்
பேச்சாளர் பலர்
ஊமையாகி விடுவார்கள்.

அஜீரணம் போக்கும்
எங்களுக்கே
அடிக்கடி அஜீரணம்

எங்கள் தொண்டைகளை அடைப்பது
கோலிக் குண்டுகள் அல்ல!
துக்கம்.

கடைந்தெடுத்த மேடை விஷத்தை
கழுத்தில் அடைகாத்து
வைத்திருக்கிற
நீலகண்டர்கள் நாங்கள்

சொல்லிக் கொள்வது மாதிரி
செய்தி ஒன்று உண்டு
சோடாவுக்கும்.

"உடைக்கப்படும் சோடாக்கள்
சும்மா இருக்கலாம்
குடிக்கப்படும் சோடாக்கள்
சும்மா இருப்பதில்லை."

— பழனி பாரதி

# சோடா



''பாவம் இவன் காதல் கல்யாணத்திலே முடிஞ்சிடுச்சு.''



''ஓடிப்போயிடலாம்னு நாம தீர்மானிச்சதை அளவுக்கதிகமா செயல்படுத்திட்டோம் போல இருக்கு.''

''உங்க காதல் கடிதத்திலே 8 எழுத்துப் பிழை, 22 சந்திப்பிழை, 7 நிறுத்தக்குறி பிழை இருக்குது. ஒரு தப்புமில்லாத லவ் லெட்டரை என்னிக்கு உங்களாலே எழுத முடியுதோ அப்போதான் நம்ம கல்யாணம்.''



''என்னது? உன்னோடது 'ஹைஜீனிக்' காதலா?''

''ஆமா! கண்ட இடத்து சுண்டலை சாப்பிட்டா உடம்பு கெட்டுடும்னு என் காதலர் வீட்டிலேருந்தே சுண்டல் செய்து கொண்டு வந்துடறார்.''



— குல்லூ, மாதுரி

# லவ் ஜோல்!



''ஷாலு! காதல் வேற, கான்ட்ராக்ட் வேற! இந்த தடவை பில் பே பண்ண வேண்டிய முறை உன்னோடது! காசை எடுத்து வை! இல்ல மாவாட்டு!''

''டியர், கல்யாணத்துக்குப் பிறகும் காதலிக்கலாம்னு சொல்றாங்களே, நிஜமா?''

''ஷ்யூர்! இப்ப நான் அதைத் தானே பண்ணிக்கிட்டிருக்கேன்?''





• மேடையில் தலைவர்கள் : மழைக்குக் குடை!

## ராஜீவ் காங்கிரஸ் மாநாடு :

# மழை செய்த சதி!

• கடந்த ஒரு மாதமாகப் பல மாவட்டங்களுக்குச் சென்று பேரணியில் அணிந்து வர ஆண்களுக்கு ராஜீவ் படம் போட்ட பனியனும், பெண்களுக்கு மூவண்ணச் சேலையும் கொடுத்து வந்தார்கள் ராஜீவ் காங்கிரஸ் பிரமுகர்கள். ஆனால் பேரணி தினத்தன்று வந்து கெடுத்தது மழை!

• மழையில் பாதிக்கப்பட்ட தொண்டர்கள் கடற்கரைக்குச் செல்லும் பஸ்களில் ஏறி ஊர்வலத்தைத் தொடர்ந்தனர். பண்ருட்டி. வட்டாரம், சிறுவத்தூரைச் சேர்ந்த தொண்டர் நம்மிடம், "எனக்கு வாழப்பாடி ஐயா ரெண்டு கேஸ் கொடுத்திருக்காருங்க! கிராமத்திலிருந்து பத்து பேரைக் கூட்டியாந்திருக்கேங்க!" என்றார்.

• எந்த மாவட்டத்திலிருந்து அதிக எண்ணிக்கையில் வேன்களும் பஸ்களும் வருகின்றனவோ, அந்த மாவட்டத்துக்கு டாட்டா ஸுமோ பரிசு என்று வாழப்பாடி அறிவித்திருந்தார். அதனால் கணக்கெடுத்துக் கொண்டிருந்த கட்சிப் பிரமுகர்களிடம் தொண்டர்கள் சரியாக அட்டெண்டன்ஸ் கொடுத்தனர்.

• வானம் எந்நேரமும் திறந்து கொள்ளலாம் என்ற நிலையில் வாழப்பாடியார், "கூட்டம் ஒரு மணி நேரத்தில் முடிந்து விடும்" என்று அறிவித்தார். வெகு சீக்கிரமே கலைஞரைப் பேசக் கூப்பிட்டு விட்டார்! கலைஞரும் பத்தே நிமிடத்தில் பேச்சை முடித்தார். கலைஞர் பேச்சைத் துவங்கிய மூன்றாவது நிமிடத்தில் தொடங்கியிருந்த தூறல் நின்று விட்டது. அதற்கப்புறம் மழை இல்லை. ஆனால் கூட்டம் முடித்துக் கொள்ளப்பட்டது. வந்திருந்த மம்தா, மேனகா போன்ற வட இந்தியத் தலைவர்கள் உட்பட யாருமே பேசவில்லை. மெரீனா கடற்கரை வரலாற்றில் இதுவரை எந்தப் பொதுக் கூட்டமும் இவ்வளவு குறுகிய நேரத்தில் முடிந்ததில்லை!

— தில்லப்பா

# சிறுதொழில் தொடங்கலாம், வாங்க!



## கல்கியுடன்-SISI இணைந்து வழங்கும்
## சிறப்பு இணைப்புப் பகுதி

## வாங்க வாங்க!

"ஒருத்தருக்குக் கீழே எதுக்கு கைகட்டி சேவகம் செய்யணும்? நானே எனக்கு ராஜா!" என்று முடிவு செய்து விட்டீர்களா?

அல்லது, "இந்தக் காலத்திலே எங்கே நல்ல வேலை கிடைக்குது? வேலை இல்லாமல் இருப்பதை விட, சொந்தக் காலில் நிற்கப் பார்ப்போமே!" என்று தோன்று கிறதா?

அல்லது, "கையிலே கொஞ்சம் பணம் இருக்கு. சவாலான முறையாக இருந்தாலும், அதை இப்படிப் பெருக்கிக் காட்டலாமே!" என்று ஆசை உண்டாகிறதா?



"நம்மாலே நாலு பேருக்கு வேலை கிடைக்கும்படியான நிலை ஏற்பட்டால்... ஆஹா!" என்ற நல்லெண்ணம்?

எப்படியோ, சிறுதொழில் ஒன்றைத் தொடங்குவது என்று விருப்பப்பட்டீர்கள் என்றால், அதைச் செயலாற்றுவதற்கு முன் கொஞ்சம் பொறுங்கள்... இந்தத் துறையில் வெற்றி பெற வேண்டுமானால் அதற்குச் சில பிரத்தியேக குணாதிசயங்கள் நம்மிடம் இருக்க வேண்டும்.

1. யாருடைய கட்டுப்பாட்டிலும் இல்லாமல் சுதந்திரமாக முடிவெடுப்பதில் மன்னனாக இருக்க வேண்டும். 2. எந்த ஒரு பிரச்னைக்கும் ஒன்றுக்கும் மேற்பட்ட தீர்வுகளைக் கொடுக்கத் தெரிந்தவராக இருக்க வேண்டும். 3. எதையும் ஒரு ஒழுங்கு முறையோடு திட்டமிட்டுச் செய்பவராக இருக்க வேண்டும். 4. உங்கள் திறமை மீது அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவராக இருக்க வேண்டும். 5. கடந்த காலத்தில் உங்கள் திறமைகளைக் கணிசமானவர்கள் கவனித்துப் பாராட்டியிருக்க வேண்டும். 6. தகுந்தவர்களிடம் தவறாமல் ஆலோசனை கேட்பதும், அதே சமயம் சுயமான முடிவுகளை எடுக்கத் தெரிந்தவராகவும் இருக்க வேண்டும். 7. எதையும் தெரிந்து கொள்ளும் ஆர்வமும், நீண்ட நேரம் சளைக்காமல் உழைக்கக் கூடிய மனப் பக்குவமும் இருக்க வேண்டும்!

இவ்வளவு 'வேண்டும்'களில் சில நம்மிடம் இல்லையென்றாலும் சோர்வடைய வேண்டாம். முயற்சி செய்து அந்த குணநலன்களை விதைத்துக் கொள்ள முடியும் என்ற ஆழமான நம்பிக்கை இருந்தால் கூடப் போதும், சிறு தொழில் என்ற சொர்க்கவாசல் உங்களுக்காகத் திறந்திருக்கிறது!

## இதைத் தெரிஞ்சுக்குங்க!

சரி, சுய அலசலுக்குப் பிறகு சொந்தக் காலிலேயே நிற்பதென்று முடிவு கட்டி விட்டீர்களா? ரொம்ப சந்தோஷம். எந்தத் துறையைத் தேர்ந்தெடுப்பது என்பது அடுத்தக் கேள்வி. மிக மிக முக்கியமான கட்டம் இது. உங்கள் எதிர்காலத்தையே நிர்ணயிக்கக்கூடியது.

இந்தச் சமயத்தில் உங்களையே ஒரு மூன்றாவது நபராக எண்ணிப் பார்க்க வேண்டும். நீங்கள் எந்தத் துறையில் நுழைய ஆசைப்படுகிறீர்களோ, அதற்கு நீங்கள் ஏற்றவரா என்பதை யோசியுங்கள். உதாரணத்துக்கு, உங்கள் உயரம் சராசரியை விட மிகக் குறைவு என்றால் வீடியோ கவரேஜ் துறையைத் தேர்ந்தெடுப்

பது சரி வராது. அதே போல் நீங்கள் மிகவும் உணர்ச்சிவசப்படுபவராகவோ, மதுப் பழக்கம் கொண்டவராகவோ இருந் தாலும் கூட சொந்தமாக ஆட்டோ வாங்கி ஓட்டலாம் என்ற முடிவை எடுப் பது புத்திசாலித்தனமல்ல. அது விபத்துக்கு வழிவகுக்கக்கூடும்.

ஏற்கெனவே ஒரு அலுவலகத்தில் மாதம் 1500 ரூபாய் சம்பளத்துக்கு வேலை செய்கிறீர்கள் என்று வைத்துக் கொள் வோம். அதே அளவு, அல்லது அதை விடச் சிறிது அதிகமாகத்தான் நீங்கள் தேர்ந்தெடுக்கும் சிறுதொழிலில் பெற முடியும் என்றால், மாறுவதைப் பற்றி நீங்கள் மேலும் தீவிரமாக யோசிக்க வேண் டும். காரணம், நீங்களே ஒரு தொழிலைத் துவங்கும்போது அதற்காக நீங்கள் செல விடும் நேரமும் (சமயத்தில் 24 மணி நேரம் கூட!), உழைப்பும் மிக அதிகம். எனவே நீங்கள் ஈடுபட ஆசைப்படும் தொழிலில் இப்போது கிடைப்பதைப் போல சுமார் மூன்று பங்கு வருமானமாவது கிடைக்க வாய்ப்புண்டு என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்.

எந்த இடத்தில் உங்கள் தொழில் அல் லது சேவையை நடத்தப் போகிறீர்கள்? இது வெகு முக்கியம். இப்போதெல்லாம் வாடிக்கையாளர்கள் நம்மைத் தேடி வருவதில்லை. நாம்தான் அவர்களைத் தேடிச் செல்ல வேண்டும். அண்ணா நகரில் எக்கச்சக்க வாடகை என்பதற்காக எங்கோ வேறு பகுதியில் உள்ளடங்கி யிருக்கிற உங்கள் வீட்டுக்குள்ளே இன்டர் நெட் பிரவுஸிங் மையத்தைத் தொடங்கிப் பயனில்லை! அதிக முதலீடு செய்தாலும், லாபம் நிச்சயம் அதிக சதவீதம் இருக்கும் என்று தோன்றினால் அந் தப் பாதையில் செல்லத் தயங்க வேண்டாம்.

சில சமயம், சிலர் அசட்டுத்தனமாக நடந்து கொள்வார்கள். ஒரு நகலெடுக்கும் கருவி (ஜெராக்ஸ்) வாங்கினால், ஒரு ஃபேக்ஸ் கருவி இல வசமாகத் தரப்படும் என்ற விளம்பரத்தைப் பார்த்த வுடன் "நான் ஜெராக்ஸ் கருவியை வைத்துக் கொண்டு தொழிலைத் தொடங்குகிறேன். நீ ஃபாக்ஸ் மிஷினை வைத்துக் கொண்டு உன் பிழைப்பை நடத்து'' என்று இரண்டு நண்பர்கள் சேர்ந்து முடிவெடுக்கக்கூடும். இந்தக் கருவிகளின் (முக்கியமாக, இலவசமாக அளிக்கப்படும் கருவியின்) தரத்தைப் பற்றித் தீவிரமாக யோசித்து, இதில் அனு பவம் உள்ளவர்களைக் கலந்து ஆலோசிக் காமல் இப்படி வாங்கினால் நஷ்டமாகி விடும்!



இயந்திரங்களை வாங்குவதை விட முக்கியமான விஷயம், அவற்றைச் சரி யாகப் பயன்படுத்துவதும் பராமரிப்பதும். மீண்டும் நகலெடுக்கும் கருவியையே உதாரணத்துக்கு எடுத்துக் கொள்வோம். அதில் தடித்த 'பாண்ட்' தாள்களையே பயன்படுத்த வேண்டும் என்று அதைத் தயாரித்த நிறுவனம் குறிப்பிட்டிருக்க, பணத்தை மிச்சம் பிடிக்கிறேன் என்று விலையும், தரமும் குறைந்த தாள்களை அவற்றில் புகுத்தினால் அவை ரோலரில் மாட்டிக் கொள்ளும். அடிக்கடி திறந்து மூடி, சிக்கலைத் தாற்காலிகமாக சரிசெய்து கொண்டே இருந்தால், சீக்கிரமே அந்தக் கருவியின் முக்கிய பாகமான 'ட்ரம்' கெட்டுப் போய், அதைச் சரிசெய்ய நிறை யப் பணம் செலவழிக்க வேண்டி வரும்.

அதிகம் செலவு செய் தாலும் தரமான பொருள் களைத் தயாரித்தால் அதற் கான மதிப்பே தனிதான். காலப்போக்கில் லாபமும் இதில் நிச்சயம் அதிகரிக்கும்.

தனிப்பட்ட முறையில் சில விஷயங்களைச் செய் வதை விட, ஏதாவது நிறு வனத்தோடு ஓர் ஏற்பாடு (டை-அப்) வைத்துக் கொள் வதை யோசிக்கலாம். நீங்கள்



சொந்த ஆட்டோ ஓட்டுகிறீர்கள் என்றால் தினமும் நான்கு அல்லது ஐந்து மணி நேரங்களுக்கு (கூரியர் அல்லது ஏதாவது காப்பீட்டுக் கழகம் போன்ற) நிறுவனத்துக்காக ஓட்டி, அதற்காக மாதச் சம்பளம் போல ஒரு தொகையைப் பெற்று, பாக்கி நேரத்தில் உங்கள் விருப்பப்படி அதை ஓட்டலாம். இப்படிச் செய்தால், மாதா மாதம் கடன் தவணைகளைத் திருப்பிச் செலுத்துவதில் எந்தவித சிக்கலும் வராது.

ஒரு தொழிலைத் தொடங்கும்போது மிகவும் அகலக்கால் வைக்காமல் சிறிய அளவிலேயே தொடங்கி, அதை விரிவாக்கிக் கொண்டு செல்லுங்கள். தொடங்கிய கொஞ்ச நாட்களிலேயே காசு பண்ணும்படியான தொழிலாக இருந்தால் மேலும் நல்லது. முக்கியமான இன்னொரு விஷயம். தொழில் மூலமாகக் கிடைக்கும் பணத்தை உங்கள் தனிப்பட்ட செலவுகளுக்காக அப்படியே பயன்படுத்திக் கொண்டு விடாதீர்கள். அதில் பெரும் பகுதியை மீண்டும் தொழில் வளர்ச்சிக்கே பயன்படுத்துங்கள். முன்னேற்றத்தில் வேகம் கூடும்!

## கவனம் தேவை!

"சுயதொழில் என்று தீர்மானித்தாகி விட்டது என்றால் வேறு சில விஷயங்களிலும் கவனம் தேவை" என்று பட்டியலிடுகிறார் தமிழ் நாடு சிறு மற்றும் குறு தொழில்கள்* சங்கத்தின் பயிற்சித்திட்ட அலுவலர் ஜி. ஆறுமுகம் :



• ஆறுமுகம்

● மக்கள் தொடர்பு என்பது இதில் முக்கியமானது. நீங்கள் பெரும் புத்திசாலியாகவே இருக்கலாம். ஆனால் உங்கள் வாடிக்கையாளரை ஒருபோதும் முட்டாளாக நினைக்க வேண்டாம்.

● எதையுமே, யாரையுமே டக்கென்று நம்பிவிடக் கூடாது. ஆனால் அதே சமயம் உங்கள் நம்பிக்கையின்மையை வெளிப்படையாகக் காட்டிவிடக் கூடாது.

● உங்கள் தொழில் தொடர்பான சகலவித சட்டங்களையும் அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். சில பேர் தாங்கள் தயாரிக்கும் பொருளுக்கான விற்பனை வரியை வாடிக்கையாளர்களிடமிருந்து வசூலிக்காமல் விட்டு விட்டு, பிறகு அதிகாரிகள் நெருக்கும்போது கையைச் சுட்டுக் கட்டுவதுண்டு.

● அரசு என்னென்ன சலுகைகள் தருகின்றது என்பதை கவனித்துக் கொண்டு, அவற்றைத் தவறாமல் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதே சமயம் அவற்றுக்கான விதிமுறைகளை கவனமாக அறிந்து கொள்ள வேண்டும். உதாரணமாக, வங்கியில் அரசின் 'PMRY' திட்டத்தின் கீழ் 35 வயது வரை நிதியுதவி அளிப்பார்கள். 35 வயது முடிந்த, 36 ஆவது வயது நடந்து கொண்டிருக்கும் ஒருவர் இதற்கு விண்ணப்பித்தால் கிடைக்காது. அதே போல் குடும்பத்தின் வருட வருமானம் 24,000 ரூபாயைத் தாண்டக் கூடாது என்ற நிபந்தனையும் உண்டு. இதில், குடும்பம் என்பது மனைவி அல்லது கணவன் மட்டுமல்ல; அப்பாவும் அம்மாவும் கூடத்தான் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

● எதையுமே தனிப்பட்ட முறையில் விற்பதை விட நிறுவனங்களோடு ஓர் ஏற்பாடு செய்து கொண்டு விற்றால் அதிக லாபம் காணலாம். உதாரணமாக, இரு சக்கர வாகனங்களில் உண்டாகக்கூடிய துருவை எளிதில் நீக்கக்கூடிய ஒரு கருவியையோ, அல்லது ஸ்பார்க் ப்ளக்கை சுத்தம் செய்யும் ஒரு கருவியையோ நீங்கள் உருவாக்குகிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். பெட்ரோல் பங்க்குகளில் நின்று கொண்டு, அங்கு வரும் வாகன ஓட்டிகளை அணுகி உங்கள் தயாரிப்பை நீங்கள் விற்கலாம்தான். ஆனால் பெரும்பாலானவர்களுக்கு "இப்போது இந்தக் கருவியை வாங்கவோ, இதற்காகப் பத்திருபது ரூபாய் செலவு செய்வதோ என்ன அவசியம்?" என்று தோன்றலாம். இதற்கு மாறாக, ஏதாவது பிரபல இரு சக்கர வாகனத் தயாரிப்பாளரை அணுகி, அவர்களுக்குச் சற்றே குறைந்த விலையில் இவற்றை விற்று விட்டால், அவர்கள் அதை விற்பனையாகும் ஒவ்வொரு

---

• அரசு உத்தரவின்படி 'சிறுதொழில்' என்பது (தயாரிப்புக்கான கருவிகளுக்காக) 75 லட்ச ரூபாய்க்குள் முதலீடு செய்வது. (இது இப்போது மூன்று கோடியாக அதிகரித்துள்ளது). 'குறுதொழில்' என்பது மேற்படி முதலீடு ஐந்து லட்ச ரூபாயைத் தாண்டாதிருப்பது (இது இப்போது 25 லட்சமாக அதிகரித்துள்ளது). இந்தக் கட்டுரைகளில் 'சிறுதொழில்' என்பது குறுதொழிலையும் சேர்த்தே குறிக்கிறது.




வண்டியோடும் அளிக்கக்கூடும். பல ஆயிரங்கள் கொடுத்து வண்டியை வாங்கும் ஒருவருக்கு மேற்படிக் கருவிக்கான அற்பத் தொகை பெரிதாகத் தோன்றாது!

● டிக்கெட் இல்லாமல் ரயிலேறி வந்தவன், "திருட்டு ரயிலில்" வந்ததாகச் சொல்லுவான். இப்படி நாம் செய்யும் தப்புக்குப் பிறர் மீது பழிபோடுவது கூடாது. "தொழில்கள் எல்லாமே நலிஞ்சு போச்சு" என்பது சரியல்ல. தவறான செயல்பாடுகளால் சிறுதொழில் நடத்துபவர்கள்தான் நலிந்து போவதுண்டு. அவர்கள் 'ஸ்வாட் அனாலிஸிஸ்' என்ற உத்தியைப் பின்பற்றி, 'தன்னிலை அறியும் முயற்சியை' மேற்கொள்ள வேண்டும். பிறகு அதற்கேற்ற நடவடிக்கைகளைக் குறிப்பிட்ட கால இடைவெளியில் மேற்கொள்ள வேண்டும்.

● தொலைநோக்குப் பார்வை என்பது வெகு முக்கியம். இன்று ஆட்டோ வாங்கினீர்களானால் பதினைந்து வருடங்களுக்குப் பிறகு மேலும் சில ஆட்டோக்கள் வாங்குமளவுக்கு முன்னேறுவேன் என்று தீர்மானம் எடுத்துச் செயல்படுவது அவ்வளவு சரியல்ல. காரணம், இது வளர்ச்சிதானே தவிர, முன்னேற்றம் அல்ல! இன்று ஆட்டோ வாங்கினால் சில வருடங்களில் டாக்ஸி, அதற்குப் பிறகு சொந்தமாக ஒரு பஸ் என்பது போல் திட்டமிடுவது நல்லது.

● இப்போதைய சூழலில் தயாரிப்பு தொடர்பான தொழில்களின் நிலை அவ்வளவு திருப்திகரமாக இல்லை. தொழிலாளர்களை வைத்து வேலை வாங்குவது சில சமயம் வெகு கடினமாகப் போய்விடலாம். தவிர, நம்மிடமிருந்து பொருள்களை வாங்கும் நிறுவனங்களுக்குத் தீவிர பொருளாதாரச் சிக்கல் ஏற்பட்டு, நமக்கு வரவேண்டிய பணம் முடங்கி விட்டால், அதுவும் கஷ்டம்தானே?

● இந்த நிலையில், சேவை தொடர்பான தொழில்களுக்கு கிராக்கி அதிகமாகியிருக்கிறது. உதாரணமாக, ஃபாஸ்ட்புட் நிறுவனங்கள், பார்லர்கள் போன்றவற்றை நடத்தினால் கைமேல் காசு பார்க்கலாம் என்ற நிலை இன்று.

● சிலவற்றை 'எக்ஸ்க்ளூஸிவ்' ப்ராடக்ட்ஸ் என்போம். உதாரணமாக, பாலிதீன் பைகள் அல்லது பேப்பர் தயாரிப்பாளர்களுக்குப் பெரிதாகக் கவலைப்பட ஒன்றுமில்லை. அவர்களது தயாரிப்பு வீண் போகாது. இன்றில்லாவிட்டால் நாளை. எப்படியும் விலை போய்விடும்!

## (ஏ)மாற்றங்கள்

சிறுதொழிலதிபராக இருக்கும் சம்பந்தன் தமிழ்நாடு சிறு மற்றும் குறு தொழில்கள் கூட்டமைப்பின் தலைவரும் கூட. மாறிவரும் சிறு தொழில் வட்ட சூழலைப் பற்றி இங்கே குறிப்பிடுகிறார் :


• சம்பந்தன்

முன்னொரு காலத்தில் தாதுப் பொருள்களிலிருந்து முதலில் இரும்பைப் பிரித்தெடுத்துப் பயன்படுத்தியவர், சேலத்தைச் சேர்ந்த கருமான் ஒருவர்தான் என்கிறது ஓர் அமெரிக்க நூல்.

அவ்வளவு பழங்காலம் கூட வேண்டாம். வியாபாரிகள் என்ற போர்வையில் இங்கு நுழைந்த பிரிட்டிஷ்காரர், நாளடைவில் நம்மை ஆளத் தொடங்கிய காலகட்டத்தில் இந்தியாவில் தொழில் முன்னேற்றமே இல்லாமல் பார்த்துக் கொண்டார்கள். அப்போதுதானே குண்டூசி முதற்கொண்டு எல்லா பொருள்களையும் இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்து அவர்கள் கஜானாவை நிரப்பிக் கொள்ளலாம்?

சுதந்திரமடைந்த பிறகு உருவான ஐந்தாண்டுத் திட்டங்கள், இந்தியாவின்



தொழில் துறையை வெகுவாக உயர்த்தியது உண்மை. எழுபதுகளில் மாருதி உற்பத்தி தொடங்கியபோது, ஆட்டோமொபைல் பாகங்களைத் தயாரிக்கும் சிறுதொழில்களின் பொற்காலம் தொடங்கியதென்றே சொல்லலாம். கார் உற்பத்தி தொடங்கிய பத்து வருடங்களுக்குள், அதில் குறைந்தது 95 சதவீதம் உள்ளூர் பாகங்களே பொருத்தப்பட வேண்டும் என்ற அரசு நிபந்தனை இருந்ததால் இந்தக் கொண்டாட்டம். அதுவும் இவற்றுக்கு உதிரி பாகங்கள் சப்ளை செய்யும் நிறுவனங்களில் பெரும்பாலானவை தமிழகத்தைச் சேர்ந்தவை. அம்பத்தூரிலும், கிண்டியிலும் இயங்கிய இதுபோன்ற சிறுதொழில் நிறுவனங்கள் ஜாம்ஜாமென்று நடக்கத் தொடங்கின!

இப்போது - 1992-ல் மன்மோகன்சிங் அறிமுகப்படுத்திய தாராளமயமாக்கல் கொள்கையைத் தொடர்ந்து தமிழ்நாட்டில் தயாராகும் ஹூண்டாய் மற்றும் ஃபோர்ட் நிறுவனங்களுக்கு, மாருதிக்கு விதிக்கப்பட்டது போன்ற எந்த நிபந்தனையும் இல்லை. எனவே பாகங்கள் அனைத்தையுமே அவை இறக்குமதி செய்து கொள்ளலாம் என்றாகிவிட்டது. ஆக அரசியல் முடிவுகளும் சிறுதொழில்கள் பாதிக்கப்படக் காரணமாகி விட்டன.

இப்படிச் சொல்வதால் சிறுதொழில் பக்கமே யாரும் தலைவைத்துப் படுக்க வேண்டாம் என்று அர்த்தமல்ல. வழக்கமான என்ஜினியரிங் பொருட்களுக்கு இப்போது மார்க்கெட் டல் என்பதால், அந்தப் பக்கமாக உங்கள் பார்வையை நிலைநாட்ட வேண்டாம். மற்றபடி தகவல் தொடர்பு தொழில்நுட்பத்துக்கு இப்போது நல்ல டிமாண்ட் இருக்கிறது. குறைந்தது ஐந்து வருடங்களுக்காவது இந்த டிமாண்ட் தொடரும் என்று தோன்றுகிறது. எனவே அந்தப் பிரிவில் காலடி வைக்கப் பாருங்கள்.

புதுப்புது உபயோகங்களுக்காக, தற்காலத் தேவைகளுக்கேற்பத் தயாராகும் பொருள்களுக்கு மார்க்கெட் உண்டு. பால் கவரை வெட்ட, காசோலைகளைப் பிரிக்க, ரிமோட் கண்ட்ரோலுக்கான உறை, சமையலை சீக்கிரம் முடிக்க உதவ, என்று பயன்படும் கருவிகளுக்கு டிமாண்ட் இருக்கிறது.

ஒரு முக்கியமான விஷயம்! பொருள்களைத் தயாரிக்க மிக நவீன தொழில்நுட்பத்தையே பயன்படுத்துங்கள். இப்போதைய தொழில்நுட்பமல்ல; இன்னும் மூன்று வருடம் கழித்து எந்தத் தொழில்நுட்பம் கோலோச்சும் என்று வல்லுனர்களால் நம்பப்படுகிறதோ அந்தத் தொழில்நுட்பத்தைப் பின்பற்றுங்கள். வெற்றி பெற அதிக வாய்ப்பு உண்டு!

## சிறுதொழில் தொடங்க யாரை அணுக வேண்டும்? எதற்காக அணுக வேண்டும்?

**நிறுவனத்தைப் பதிவுசெய்து கொள்ள அணுக வேண்டியவர் :**

நீங்கள் சென்னையில் நிறுவனம் தொடங்குவதானால், பிராந்திய இணை இயக்குனர், தொழில் மற்றும் வணிக இயக்ககம், சென்னை. தமிழகத்திலுள்ள பிற பகுதியில் என்றால் - அந்தந்த மாவட்டத்திலுள்ள மாவட்டத் தொழில் மையத்தின் பொது மேலாளர். பாண்டிச்சேரியில் தொழில் தொடங்குகிறீர்களென்றால் தொழில் இயக்குனர், தொழிற்பேட்டை, தட்டான்சாவடி, பாண்டிச்சேரி - 9.

**தொழில்நுட்ப ஆலோசனை**

நீங்கள் பேனா தயாரிக்க முடிவெடுத்

திருக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். கீழ்க்கண்ட நிறுவனங்களை அணுகினால் தமிழகம் மற்றும் பிற பகுதிகளில் எவ்வளவு பேர் பேனா தயாரிக்கிறார்கள்? அப்படித் தயாரிப்பவற்றில் ஏற்றுமதியாகும் பேனாக்களின் எண்ணிக்கை எவ்வளவு என்பது போன்ற பல விவரங்களைப் பெற முடியும். சில குறிப்பிட்ட தொழில்களைத் தொடங்க வெளிநாடுகளிலிருந்து இயந்திரங்களை இறக்குமதி செய்ய வேண்டி வரலாம். நீங்கள் கருவியை வாங்கவிருக்கும் வெளிநாட்டு நிறுவனம் நம்பகமானதுதானா, பின்னாளில் கருவியில் பழுது ஏற்பட்டால் உடனடியாக அதைச் சரிசெய்து தருவார்களா போன்ற விவரங்களைக் கூடப் பெறலாம்! இன்டர்நெட் வசதியும் இருப்பதால் குறிப்பிட்ட தொழில் தொடர்பான சமீபத்திய தகவல்களைக் கூட இந்த நிறுவனங்களின் மூலம் பெற முடியும்.

1. சிறுதொழில் சேவை மையம் (SISI), கிண்டி, சென்னை மற்றும் அதன் எக்ஸ்டென்ஷன் கௌண்டர்கள்.

2. மாவட்ட தொழில் மையங்கள் (டி.ஐ.ஸி.)

3. தமிழ்நாடு சிறு மற்றும் குறு தொழில்கள் கூட்டமைப்பு, கிண்டி, சென்னை. (டான்ஸ்டியா)

**மார்க்கெட்டிங் மேனேஜ்மெண்ட், தொழில்நுட்ப முனைவோர் முன்னேற்றம், சந்தை ஆய்வு போன்றவற்றில் உரிய பயிற்சி பெற :**

சென்னையிலுள்ள சிறுதொழில் சேவை மையத்தையோ, தமிழ்நாடு சிறு மற்றும் குறுதொழில்கள் கூட்டமைப்பையோ அணுகவும்.

**தொழிற்பேட்டைகளில் நிறுவனம் தொடங்க இடம் பெறுவதற்கு:**

சென்னையில் கத்திப்பாரா சந்திப்பில் இருக்கும் தமிழ்நாடு சிறுதொழில் வளர்ச்சிக் கழகத்தை அணுகலாம். சென்னையல்லாத பிற மாவட்டங்களில் உள்ளவர்களென்றால், அந்த மாவட்டத்திலுள்ள மேற்படி நிறுவனத்தின் (ஸிட்கோ) கிளையை அணுகலாம். எலெக்ட்ரானிக்ஸ் தொழிலென்றால் அதற்குரிய தொழிற்பேட்டையில் இடம்பெற சேப்பாக்கம், சென்னை - 5ல் உள்ள தொழில் மற்றும் வணிகத் துறை இயக்குனரை அணுகலாம்.

**தொழில் நடத்தத் தேவைப்படும் கருவிகளைத் தவணை முறையிலோ, குறிப்பிட்ட காலத்துக்குப் பயன்படுத்தவோ பெறுவதற்கு:**

தேசிய சிறுதொழில் கழகம் (என்.எஸ்.ஐ.ஸி.) 615, அண்ணாசாலை, சென்னை - 6.

**சிறுதொழிலுக்கான மூலப் பொருட்கள் பெறுவதில் உதவ :**

சிட்கோ மற்றும் என்.எஸ்.ஐ.ஸி. நிறுவனங்கள் - மாவட்ட தொழில் கழகங்களின் மூலமாக.



## நிதி உதவி பெறுவதற்கு :

1. தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள்

2. தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம், 27, ஒயிட்ஸ் சாலை, சென்னை-14 மற்றும் அதன் கிளை அலுவலகங்கள்.

3. தொழில் மற்றும் வணிக இயக்குனர், சேப்பாக்கம், சென்னை - 5.

4. சிறுதொழில் வளர்ச்சி பாங்க் ஆஃப் இந்தியா (ஸிட்பி), நந்தனம், சென்னை - 35.

5. பாண்டிச்சேரி தொழில் வளர்ச்சி மற்றும் முதலீட்டுக் கழகம் (பிப்டிக்), 38, ரொமெயின் ரோலண்ட் தெரு, பாண்டிச்சேரி - 1.



"அந்தப் புது கொசுவர்த்தியை வாங்கினால் கூடவே ஒரு பையனையும் அனுப்புவாராம் தயாரிப்பாளர்."

"எதுக்கு?"

"கொசுவர்த்தியையும் மீறி கொசு நுழைஞ்சா அதை அடிக்கத்தான்."

– குல்லு

---

**சிறுதொழில் தொடர்பான அரசுப் பிரசுரங்களைப் பெற :**

பதிப்பகப் பிரிவு, இந்திய அரசு, தகவல் ஒலிபரப்பு அமைச்சகம், எல்.எல்.ஏ. பில்டிங், அண்ணா சாலை, சென்னை – 2.

**தொழில் உற்பத்திக்கான லைசென்ஸ் பெற :**

அருகிலுள்ள மாவட்டத் தொழில் மையத்தை அணுகித் தகவல் பெறவும். உங்கள் தயாரிப்பை பேடன்ட் செய்து கொள்வதற்கான டெக்னிகல் தகவல்கள் பெறவும், ராயல்டி சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கும், புதிய கண்டுபிடிப்புகள் தொடர்பாகவும் தகவல்கள் பெற வேண்டுமானால்...

தேசிய ஆராய்ச்சி வளர்ச்சிக் கழகம், 20–22, ஜம்ருத்புர் சமூக மையம், கைலாஷ் காலனி விரிவாக்கம், புது டெல்லி – 110 048.

**ஐ.எஸ்.ஐ. மதிப்பீடு மற்றும் இது தொடர்பான தகவல்கள் பெற :**

இந்திய தர நிர்ணய பீரோ, 'மாடர்ன் பேக்கரி'க்கு எதிரில், தரமணி, சென்னை–113.

**காதி மற்றும் கிராமத் தொழில்கள் தொடர்பான உதவி மற்றும் ஆலோசனைகளைப் பெற:**

காதி மற்றும் கிராமத் தொழில்கள் கமிஷன், 236, ஔவை சண்முகம் சாலை, கோபாலபுரம், சென்னை – 86.

மாநில காதி மற்றும் கிராமத் தொழில்கள் போர்டு, குறளகம், சென்னை – 108. அந்தந்த மாவட்டங்களிலுள்ள காதி மற்றும் கிராமத் தொழில்கள் துறை உதவி இயக்குனர்.

**பாக்கிங் (Packing) தொழில் தொடர்பான பயிற்சிகளைப் பெற :**

இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் பாக்கேஜிங், ப்ளாட் 169, தொழிற்பேட்டை, பழைய மகாபலிபுரம் சாலை, சென்னை.

**தயாரிப்புகளைப் பரிசோதிப்பது மற்றும் இது தொடர்பான தகவல்களைப் பெற :**

1. நேஷனல் டெஸ்ட் ஹவுஸ், சி.எஸ்.ஐ.ஆர். காம்ப்ளெக்ஸ், தரமணி, சென்னை – 113.

2. ரீஜனல் டெஸ்டிங் மையம், 65/1, ஜி.எஸ்.டி. சாலை, கிண்டி, சென்னை – 32. (இதே போன்ற வசதி மதுரை மற்றும் பாண்டிச்சேரியிலும் உண்டு).

3. கெமிக்கல் டெஸ்டிங் லாபரட்டரி, தொழில் – வணிக இயக்ககம், தொழிற்பேட்டை, கிண்டி, சென்னை – 32.

4. மாவட்ட தொழிற்கழகங்களையும் அணுகலாம்.

**பொருள்களை மார்க்கெட் செய்ய :** என்.எஸ்.ஐ.ஸி., சிட்கோ, ஸிஸி

**பேடன்ட் பதிவு செய்து கொள்ள:**

துணை கட்டுப்பாட்டு அதிகாரி, (பேடன்ட் மற்றும் டிசைன்) 61, வ்லாஜா தெரு, சென்னை – 2.

**டிரேட் மார்க் பதிவுசெய்து கொள்ள :**

துணை பதிவாளர், டிரேட் மார்க் ரெஜிஸ்டரி, சாஸ்திரிபவன், சென்னை – 6.

**கட்டாய லைசென்ஸ் வாங்க வேண்டிய தயாரிப்புகளுக்கு லைசென்ஸ் பெற :**

சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்

டையில் இயங்கும் தொழில்துறை மூல மாக நீங்கள் அணுக வேண்டியது பொது இயக்குனர், தொழில்நுட்ப வளர்ச்சி, உத்யோக் பவன், புதுடெல்லி – 11.

**பங்குதாரர்களாகத் தொழிலைத் தொடங்கினால், அதற்கான ஒப்பந்தங் களைப் பதிவுசெய்து கொள்ள :**

பொது ஆய்வாளர், பதிவுத் துறை, 26, ராஜாஜி சாலை, சென்னை – 1.

**லிமிடெட் கம்பெனியாக தொழில் தொடங்குகிறீர்கள் என்றால்அதைப் பதிவுசெய்து கொள்ள :**

பதிவாளர், கம்பெனி லா போர்டு, சாஸ்திரி பவன், சென்னை – 6. (பாண்டிச் சேரியிலும் அலுவலகம் உண்டு).

**மாசுக் கட்டுப்பாடுகளிலிருந்து ஒப்புதல் பெற :**

தமிழ்நாடு மாசுக் கட்டுப்பாடு போர்டு, சென்னை – 32.

சில குறிப்பிட்ட பொருள்களைத் தயாரிக்க வேண்டுமென்றால் சில அரசுத் துறைகளின் முன் அனுமதி பெற வேண் டும்.

மருந்துப் பொருள்களைத் தயாரிக் கிறீர்களென்றால் மாநில மருந்துக் கட் டுப்பாட்டு நிர்வாக அலுவலகத்திலும், பேக் செய்யப்பட்ட உணவு வகைகளைத் தயாரிக்க விவசாய அமைச்சகத்தின் மார்க்கெட்டிங் மற்றும் ஆய்வு இயக்க கத்திலிருந்தும் அனுமதி பெறவேண்டும்.

அச்சு இயந்திரம் மற்றும் பட்டாசு போன்ற வெடிக்கக்கூடிய பொருள்களைத் தயாரிப்பதாக இருந்தால் மாநிலக் காவல் துறையின் அனுமதி தேவை. பெட்ரோல், மண்ணெண்ணெய், பென்ஸீன் போன்ற எளிதில் தீப்பற்றக்கூடிய பொருள் களென்றால் 'இன்ஸ்பெக்டர் ஆஃப் எக்ஸ்ப்ளோஸிவ்ஸி'டமிருந்து ஒப்புதல் தேவை.

பேக்கரி நடத்துவதாக இருந்தால் சுகாதாரத் துறையின் உள்ளூர் அதிகாரி யிடமிருந்து முன் அனுமதி பெற வேண் டும்.

இப்படிக் குறிப்பிட்ட துறைகளிட மிருந்து ஒப்புதல் பெற்றால்தான் தயாரிப்பு நிறுவனத்தின் பெயர் பதிவு செய்யப்படும்!

## ஒரு லட்சம், உங்களுக்கே!

சிறிய அளவில் தொழில் துவங்க விருக்கும் வேலை இல்லாத இளைஞர்கள் கீழ்க்கண்ட திட்டத்தின் கீழ் வங்கிகளின் உதவியை நாடலாம்.

PMRY (Prime Minister Rojkar Yojna) என்ற நிதியுதவித் திட்டம் கடந்த சில வரு டங்களாகவே இருந்து வருகிறது. பத்து லட்சம் பேருக்காவது வேலை வாய்ப்பை உண்டாக்கித் தரவேண்டும் என்கிற நோக் கத்தில் இந்திய அரசு உருவாக்கிய திட்டம் இது.



• சிறு தொழில் தொடங்க பயிற்சி வகுப்புகள் உண்டு...

இந்தத் திட்டத்தின் கவர்ச்சியான அம்சம் என்னவென்றால், வங்கிக் கடன் மூலம் வாங்கிய சொத்துக்களை மட்டுமே வங்கியில் அடமானம் வைத்தால் போது மானது. மற்றபடி வேறு ஏதாவது சொத்து அடமானம் வைக்கப்பட வேண்டும் என்றோ, யாராவது உத்தரவாதம் கொடுக்க வேண்டுமென்பதோ கிடையாது.

பதினெட்டிலிருந்து முப்பத்தைந்து வயது வரை உள்ளவர்கள் மட்டுமே இதில் பயனடையும் தகுதி பெற்றவர்கள். பள்ளி இறுதிப் படிப்பை எட்டியிருக்க வேண்டும் (பாஸோ, பெயிலோ). எல்லாவிதத்திலும் அவரும், அவரது குடும்பத்தினரும் ஈட்டிக் கொண்டிருக்கும் வருட வருமானம் 24,000

ரூபாயைத் தாண்டக் கூடாது. குறிப்பிட்ட பகுதியில் கடந்த மூன்று வருடங்களாக வாவது வசித்து வந்திருக்க வேண்டும். இன்னொரு முக்கிய விஷயம், எந்த வங்கியிலும் கடன் பாக்கி வைத்திருக்கக் கூடாது!

ஒருவருக்கு அதிகபட்சம் ஒரு லட்சம் ரூபாய் வரை நிதியுதவி அளிப்பார்கள். ஆனால் கடன் தொகையில் ஐந்து சதவீதம் உங்கள் கைக்காசாக இருக்க வேண்டியது அவசியம். கடன் கொடுத்த முதல் ஆறு 'மாதங்களுக்குப் பிறகே தவணைகளில் கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டியது தொடங்கும். (தாமதமாகவே பலன் கொடுக்கக்கூடிய தொழில்கள் என்றால் இது பதினெட்டு மாதங்களாகக் கூட அதிகரிக்கப்படலாம்.) கடன் தொகையை மூன்றிலிருந்து ஏழு வருடங்களுக்குள் அடைக்குமாறு நிர்ணயிப்பார்கள்.

உங்கள் விலாசத்தை உறுதிசெய்து கொள்ள உங்கள் ரேஷன் கார்டு அல்லது பாஸ்போர்ட்டை வங்கியில் சரிபார்ப்பார்கள்.

மிகக் குறைந்த வட்டிக்கு இந்த திட்டத்தின் கீழ் நிதியுதவி அளிக்கப்படுகிறது.




**எவற்றைப் பெற வங்கிகள் நிதியுதவி செய்யும்?**

யந்திரங்கள், நிலம், தொழிற்சாலைக்கான கட்டடம்/ஷெட், மூலப்பொருள்கள், ஃபர்னிச்சர் போன்றவற்றைப் பெற.

## திட்ட அறிக்கை (PROJECT REPORT) வெகு முக்கியம்!

சில பேர் வெகு உற்சாகத்துடன் தொழிலைத் தொடங்குவார்கள். ஆனால் ஆரம்பக் கட்டத்திலேயே ஏதாவது சிக்கல் ஏற்பட்டுப் பரிதாபமாகத் திணறுவார்கள். எதிர்பார்த்த அளவுக்கு மூலப் பொருள்கள் கிடைக்காமல் போகலாம். அல்லது தயாரிப்புக்குத் தேவைப்படும் தொழில் நுட்பத்தைப் பற்றிப் பெரும் குழப்பம் ஏற்படலாம். அல்லது பொருள்கள் விற்பனையானாலும் பணம் கைக்கு வராமல் போகலாம்.

இப்படிப்பட்ட சூழல்களைத் தவிர்க்கப் பெரிதும் உதவுவது திட்ட அறிக்கை. இதை நீங்களே தயார் செய்ய வேண்டும். அப்படித் தயார் செய்யப் பலவித கேள்விகளை உங்களையே கேட்டுக் கொண்டு அதற்கான விடைகளை திட்ட அறிக்கையில் சுருக்கமாகவும் பளிச்சென்றும் எழுத வேண்டும்.

**அப்படி நீங்களே கேட்டுக் கொள்ள வேண்டிய கேள்விகளில் சில :**

1. எது போன்ற தொழிலில் நீங்கள் இருக்கிறீர்கள்?
2. உங்கள் வாடிக்கையாளர்கள் எந்தப் பிரிவைச் சேர்ந்தவராக (வயது, இனம், பொருளாதார நிலை ஆகிய அடிப்படைகளில்) இருப்பர் என எண்ணுகிறீர்கள்?
3. மக்கள் எதற்காக உங்கள் தயாரிப்பையோ பொருளையோ நாட வேண்டும்?
4. தொடக்கத்தில் எந்த அளவு வியாபாரம் நடக்குமென்று கணக்கிடுகிறீர்கள்?
5. இதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும்?
6. இதற்கு எவ்வளவு தொகை தேவைப்படும்?

7. உங்கள் பொருளுக்கு அல்லது சேவைக்காக என்ன விலை/கட்டணம் நிர்ணயிப்பதாக இருக்கிறீர்கள்?

8. உங்கள் பொருள் அல்லது சேவையைப் பற்றி மக்களுக்கு எப்படித் தெரிய வரும்?

9. உங்களுக்குத் தேவைப்படும் மூலப் பொருள், இயந்திரங்கள், பிற பொருள்கள் ஆகியவை எவை?

10. எந்தவகைத் தொழில்நுட்பத்தை நீங்கள் ஏற்றுக் கொள்வதாக இருக்கிறீர்கள்?

11. உங்கள் தொழிற்கூடம் எங்கே அமையப் போகிறது?

12. உங்கள் முதலீடு எவ்வளவு?

13. இந்த முதலீட்டை எப்படிப் பெறப் போகிறீர்கள்? சொந்த சேமிப்பா, உறவினர் நண்பர்களிடமிருந்து கடனா, வங்கிகளிலிருந்து நிதியுதவியா?

14. எவ்வளவு லாபத்தை, எந்தக் கால கட்டத்திற்குள் எதிர்பார்க்கிறீர்கள்?

இவற்றிற்கெல்லாம் பதில்களை நடைமுறைப் பார்வையோடு எழுதினாலே தெளிவு பிறக்கும். வங்கிகள் போன்ற நிறுவனங்களை நிதியுதவிக்காக அணுகும் போது இந்த திட்ட அறிக்கையைக் கட்டாயம் காட்ட வேண்டியிருக்கும். இதில் உள்ள தகவல்கள் உங்களுக்குக் கடன் தரலாமா கூடாதா என்ற முடிவை எடுக்க வங்கிகளுக்கு மிக முக்கியமானவை.

நிதியுதவிக்காக வங்கிகளை அணுகும் போது, நீங்கள் தொடங்கும் தொழில் குறித்த அத்தனை முக்கிய விவரங்களும் உங்களுக்குத் தெரியும் என்ற உணர்வை நீங்கள் அவர்களிடம் உருவாக்க வேண்டும். அப்போதுதான் 'இவர் விஷயம் தெரிந்தவர். தொழிலில் வெற்றி பெற்று, நம் கடனை விரைவில் திருப்பித் தருவார்' என்ற நம்பிக்கை உண்டாகும்.

தவறான தகவல்களைத் தரவோ, முக்கிய பலவீனத் தகவல்களை மறைக்கவோ முயற்சிக்க வேண்டாம். இதுகுறித்துத் தெரியவந்தால், மொத்தமாகவே உங்கள் மீது நம்பிக்கையின்மை ஏற்படக் கூடும்.



''தரமான தயாரிப்பு. அதனாலே ஆர்டர் மலையா குவிஞ்சிடுச்சு.''

## இந்தா, பிடி சலுகை!

சிறு தொழில்களை அரசு தொடக்கத்திலிருந்தே தனது செல்லக் குழந்தைகளாகக் கருதி, பல சலுகைகளைக் கொடுத்து வந்திருக்கிறது. எல்லாம் காரணத்தோடுதான்!

காயசண்டிகையின் பசியைப் போல "எங்கே வேலை? எங்கே வேலை?" என்று கேட்கும் இளைஞர்கள் அனைவருக்கும் போதிய வேலை வாய்ப்புத் தர அரசிடம் எந்த அமுதசுரபியும் இல்லை. எனவே சுயவேலை வாய்ப்புகளையும் சிறு தொழில்களையும் தொடங்க அவர்களுக்குப் போதிய சலுகைகளை அளிக்க வேண்டியது அவசியமாகி விட்டது. தவிர, நமது அரசியல் அமைப்பு சிலரிடமே செல்வம் குவிவதை எதிர்க்கிறது. எனவே, பலரையும் செல்வந்தர்களாக்கக்கூடிய சிறு தொழில்களுக்கு அரசு முன்னுரிமை அளிக்கிறது. அதுவும் ஒவ்வொரு சிறு தொழில் முனைவோரும், தம் வியாபாரம் பெருகும்போது மேலும் பலரை வேலைக்கு அமர்த்திக் கொள்வதால் வேலையில்லாத் திண்டாட்டம் மேலும் குறைய வாய்ப்புண்டு!

சரி, அப்படி என்னென்ன சலுகைகளையும் வசதிகளையும் அரசு சிறு தொழில்களுக்கு அளிக்கிறது?

- முப்பது லட்ச ரூபாய் விற்பனை வரை சிறுதொழில் தயாரிப்புகளுக்கு எக்ஸைஸ் வரி கிடையாது. முப்பதிலிருந்து எழுபத்தைந்து லட்சம் வரையில் கூட இதில் சலுகை உண்டு!
- 836 விதப் பொருள்களை சிறு தொழில் பிரிவினர் மட்டுமே தயாரிக்க



• மேத்யூ ஓமன்

லாம் என்பது அரசு உத்தரவு.

● சிறு தொழில் நிறுவனங்களிடமிருந்து பொருள்களை வாங்குவதற்கு அரசுத் துறை முன்னுரிமை கொடுக்கும்.

● சிறு தொழில் முனைவோருக்காகப் பயிற்சியளிக்கும் மையங்களுக்கான அடிப்படை வசதிகளை அரசு ஏற்படுத்திக் கொடுக்கும்.

● தயாரிப்பு தரத்துடன் இருக்க வேண்டும். சுற்றுச் சூழலை மாசுபடுத்தாத வகையில் இருக்க வேண்டும் என்பதற்கெல்லாம் அடிக்கடி சிறப்பு வகுப்புகளை அரசு நிறுவனங்கள் நடத்தும்.

● தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் தங்களது மொத்தக் கடனுதவியில் குறிப்பிட்ட சதவிகிதம் சிறுதொழில் முனைவோர்களுக்கு அளிக்க வேண்டும் என்பது கட்டாயம். கடன் தொகை இரண்டு லட்சத்தைத் தாண்டாதவரை வட்டி விதமும் குறைவானதாகவே இருக்கும்!

இவை சில சாம்பிள்தான். இவற்றையெல்லாம் அறிந்து மகிழ்ந்து சிறு தொழில் நடத்த முன்வருவோர்கள், இந்தச் சலுகைகளின் மறுபக்கத்தையும் அறிந்து கொள்ள வேண்டும்!

நிறையப் பொருள்கள் சிறுதொழில் பிரிவினருக்கு மட்டுமே தயாரிக்க அனுமதி என்று கூறினோம் இல்லையா? தெற்காசிய (சார்க்) நாடுகளுக்கிடையே கையெழுத்தாகியுள்ள ஒப்பந்தப்படி அடுத்த வருடத்தின் இடையிலிருந்து இந்தப் பொருள்களைக் கூட ஒரு நாட்டினர் இன்னொரு நாட்டினருக்கு விற்கலாம். இது நமக்கு லாபமளிக்கலாம் என்பதோடு நஷ்டத்தையும் ஏற்படுத்தலாம். இப்போது தேங்காய் தொடர்பான பல சிறு தொழில்கள் கேரளாவில் முன்னணியில் விளங்குகின்றன. ஆனால் மேற்படி ஒப்பந்தம் அமலுக்கு வந்தவுடன் எக்கச்சக்கமாகத் தென்னை மரங்களைக் கொண்டுள்ள ஸ்ரீலங்கா, தேங்காய் தொடர்பான தயாரிப்புகளைக் குறைவான விலையில் நம் நாட்டுக்கு விற்கத் தொடங்கினால் இங்குள்ள சிறு தொழில்கள் பாதிக்கப்படக் கூடும்!

அதே போலப் பெரிய நிறுவனங்களை விட சுமார் பத்து சதவிகிதம் வரை அதிக விலை என்றாலும் சிறு தொழில் நிறுவனங்களிடமிருந்துதான் அரசுத் துறை தனக்குத் தேவைப்பட்ட பொருளை வாங்க வேண்டும் என்பது நடைமுறையாக இருந்து வந்தது. ஆனால் அரசுத் துறைகள் எல்லாம் இப்போது வாரியங்களாகவும் கழகங்களாகவும் மாறிக் கொண்டு வருகின்றன. சேவை மட்டுமல்ல; லாபம் ஈட்டுவதும் அவற்றின் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவதால் அதிக விலை

## கம்ப்யூட்டருக்கே வெற்றி!

### எஸ்.ஐ.எஸ்.ஐ.அமைப்பின் இயக்குனர் கருணாகரனிடம் பெற்ற சில விளக்கங்கள்:

● உங்கள் அமைப்பு நடத்தும் பயிற்சி வகுப்புகளிலேயே மிகவும் வெற்றிகரமானது என்று எதைக் கருதுகிறீர்கள்?

சந்தேகமில்லாமல் கம்ப்யூட்டர் பயிற்சிகளைத்தான். குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் சாப்ட்வேர் பிரிவு.

● இதுவரை இல்லாதவிதமாக சமீப காலத்தில் ஏஜென்ஸிகள் மூலம் இது போன்ற பயிற்சி வகுப்புகளை நடத்த வேண்டிய அவசியம் என்ன?

கம்ப்யூட்டர் பயிற்சிக்கு அதிக அளவில் முதலீடு தேவைப்படும். அவ்வப்போது சிஸ்டத்தை நவீனப்படுத்த வேண்டியிருக்கும். உடனடி முடிவுகள் எடுக்க வேண்டியிருக்கும். அரசு ஒழுங்குமுறையோடு நடக்க வேண்டும் என்பதற்காகப் பின்பற்றி வரும் நடைமுறைகளை, ஒரே நாளில் மாற்றியமைத்து விட முடியாதே. அதனால்தான் ஏஜென்ஸிகள் மூலமாக சிலவகைப் பயிற்சி வகுப்புகளை நடத்துகிறோம்.

● ஏதாவது புதிய மாறுதல்களை அறி

கொடுத்து சிறு தொழில் தயாரிப்புகளை வாங்கினால் தங்கள் லாபம் குறையுமே என்று அவை முரண்டு பிடிக்கத் தொடங்கியுள்ளன.

தவிர, சிறுதொழில் பிரிவிலிருந்துதான் அரசுத் துறைகள் வாங்க வேண்டும் என்று அரசு பட்டியலிட்டிருந்த பொருள்களின் எண்ணிக்கை சமீபத்தில் குறைக்கப்பட்டுள்ளது.

'சிறு தொழில்' என்ற பிரிவில் அடங்க வேண்டுமானால் எவ்வளவு முதலீடு செய்திருக்க வேண்டும் என்ற தொகை, சமீபத்தில் வெகுவாக அதிகரிக்கப்பட்டது குறித்துக் குறிப்பிட்டிருந்தோம். இது ஒருவிதத்தில் வரவேற்கத்தக்கதுதான் என்றாலும் இதன் மூலம் 'சிறுதொழில்' பிரிவில் புதிதாக வந்தவர்கள் (இதுவரை இந்தப் பிரிவில் அடங்காத அளவுக்கு அதிக முதலீடு செய்தவர்கள்) லாபம் பெறவே வாய்ப்பு அதிகம்.

ஆக, சலுகைகள் தொடருகின்றன - ஆனால் தடைக்கற்களும் உருவாகிக் கொண்டிருக்கின்றன.

## SISI-சூழலுக்கேற்ற மாற்றங்கள்

"அரசின் பொருளாதாரக் கொள்கை மாற்றத்தால் பல பன்னாட்டு நிறுவனங்கள் நம் நாட்டை முற்றுகையிடத் தொடங்கி விட்டன. இவற்றில் பெரும்பாலானவை கம்ப்யூட்டர் வன்பொருள் (ஹார்ட்வேர்) எலக்ட்ரானிக்ஸ், தொலைத்தொடர்பு மற்றும் ரெஃப்ரிஜிரேஷன் தொடர்பானவை. இதன் காரணமாக இந்தத் துறைகளில் பயிற்சி பெற்ற திறமைசாலிகளின் தேவை வேகமாக அதிகரித்து

முகப்படுத்தவிருக்கிறீர்களா?

ஐடியா சாஃப்ட்வேர் என்ற புதுவகை ஒன்று அறிமுகமாகி உள்ளது. ஒரு ஆட்டோமொபைல் பாகத்தை தேவைக்கேற்ப திருப்திகரமாக வடிவமைக்க 20-30 நாட்கள் ஆகக் கூடும். ஆனால் 'ஆன்வோர்ட்ஸ் டெக்னாலஜி' என்ற புதியவகை தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி ஐடியா சாஃப்ட்வேரில் இதை வெகு சீக்கிரம் உருவாக்க முடியும். இதற்கான பயிற்சி வகுப்புகள் சமீபத்தில் தொடங்கப்பட்டுள்ளன.

● உங்கள் பயிற்சிகளின் முக்கிய நோக்கம் எது? மாணவர்களுக்கு இதன் மூலம் வேலை வாய்ப்பை அளிப்பதா? அல்லது சொந்த நிறுவனத்தைத் தொடங்க வைப்பதா?

நீங்கள் இரண்டாவதாகக் குறிப்பிட்டதுதான். ஆனால் அது அவ்வளவு சுலபமான விஷயமில்லையே. தேவைப்படும் நிதியிலிருந்து பிற விஷயங்கள் எல்லாம் கூடி வரும் வரை, இதே துறையில் சில காலம் வேலை பார்த்தும் பல விஷயங்களை அவர்கள் தெரிந்து கொள்ளலாமே.



• கருணாகரன்

● சிறு தொழில்களைப் பொறுத்தவரை எந்தப் பிரிவுகளுக்கு வளமான எதிர்காலம் இருப்பதாக நினைக்கிறீர்கள்?

தகவல் தொழில் நுட்பத்துக்குதான். அடுத்து கன்ஸ்யூமர் இண்டஸ்ட்ரீ. ஃபாஸ்ட் புட்டிலிருந்து, ரெடிமேட் கம்பங்கூழ்வரை வளமான எதிர்காலம் உள்ள துறை இது.

● வேலை வாய்ப்புகளைப் பொறுத்தவரை ஏதாவது புதிய நம்பிக்கை நட்சத்திரப் பகுதிகள் உருவாகியுள்ளனவா?

இப்போது சுமார் 2.7 லட்சம் சிறு தொழில் நிறுவனங்கள் உள்ளன. அவற்றில் ஐந்து சதவீதமாவது ஐ.எஸ்.ஓ. 9000 தர நிர்ணயத்தைப் பெற வேண்டிய கட்டாயம் ஏற்படும். இது போன்ற விவரங்களில் பயிற்சியளிக்க, பதினோரு வல்லுனர்களை நியமித்திருக்கிறோம். இதேபோல் ஒவ்வொரு நிறுவனமும் சுற்றுப்புறச் சூழல் ஆலோசகர் ஒருவரை நியமிக்க வேண்டிய நிலை வரலாம். ஐ.எஸ்.ஓ. 14000 என்ற தர நிர்ணயத்தைப் பெற இவர் களின் பங்கு மிக முக்கியமானதாக இருக்கும். இதற்கான பயிற்சிகளையும் அளிக்கவிருக் கிறோம். இவை வளமான வேலை வாய்ப்பு களைப் பெற்றுத் தரக் கூடியவை.



• கம்ப்யூட்டர் பயிற்சி வகுப்புகள்

வருகிறது.

'ஸிஸி' எனப்படும் சிறுதொழில் சேவை மையம், டெல்லியில் இயங்கும் இந்திய அரசின் சிறுதொழில் வளர்ச்சி நிறுவனத்தின் ஓர் அங்கம். பல்வேறு சிறு தொழில் பயிற்சிகளை நடத்தி வந்துள்ள 'ஸிஸி', மேலே குறிப்பிட்டுள்ள மாற்றங்களை உணர்ந்து கொண்டு சில ஏஜென்ஸிகளின் மூலமாக, பல்வேறு புதிய பயிற்சி வகுப்புகளைக் கடந்த ஒன்றரை வருடங்களாக நடத்தி வருகிறது. இது மாறிவரும் சூழலுக்கேற்ப 'ஸிஸி' தன்னை வளர்த்துக் கொள்வதற்கான அடையாளம்'' என்றார் இந்த நிறுவனத்தின் உதவி இயக்குனர் மேத்யூ ஓமன்.

**ஏஜென்ஸிக்கள் மூலமாக 'ஸிஸி' நடத்தி வரும் பயிற்சி வகுப்புகளின் விவரங்கள் இதோ:**

இன்ஸ்டிட்யூட் ஆஃப் எலெக்ட்ரானிக்ஸ் அண்ட் கம்ப்யூட்டர்ஸ் (IEC) எனும், கம்ப்யூட்டர் பயிற்சியில் பெயர் பெற்றுள்ள இந்த நிறுவனம் கீழ்க்கண்ட டிப்ளமா பயிற்சிகளை, ஸிஸி நிறுவனத்தின் சார்பில், அதன் கிண்டி வளாகத்தில் நடத்துகிறது.'

## மென்பொருள் பயிற்சி வகுப்புகள்

**1. கம்ப்யூட்டர் டெக்னாலஜி - டிப்ளமா.**

ஆறு மாதங்கள் (பகுதி நேரம்) அல்லது மூன்று மாதங்கள் (முழு நேரம்)

தகுதி : 18 வயது, எஸ்.எஸ்.எல்.சி. படிப்பு. கட்டணம் ரூபாய் 7500/-

**க்ளையன்ட் சர்வர் டெக்னாலஜி - டிப்ளமா**

ஆறு மாதங்கள் (பகுதி நேரம்) அல்லது மூன்று மாதங்கள் (முழு நேரம்)

தகுதி : 18 வயது. மற்றும் கம்ப்யூட்டர் டெக்னாலஜி டிப்ளமா (DCT) பெற்றிருக்க வேண்டும். கட்டணம் 9000/- ரூபாய்.,

**வின்டோஸ் மற்றும் இன்டர்நெட் ப்ரோக்ராமிங் - டிப்ளமா**

பயிற்சிக் காலம் - ஆறு மாதங்கள் (பகுதி நேரம்) சேரத் தகுதி - 18 வயது மற்றும் DCT. கட்டணம் ரூபாய் 9000/-

**கம்ப்யூட்டர் அப்ளிகேஷன் - போஸ்ட்கிராஜுவேட் டிப்ளமா**

பயிற்சிக் காலம் 12 மாதங்கள் (பகுதி) அல்லது ஆறு மாதங்கள் (முழு நேரம்). சேரத் தகுதி - 18 வயது, எஸ்.எஸ்.எல்.சி. படிப்பு. கட்டணம் 15,000/- ரூபாய்.

**சாஃப்ட்வேர் என்ஜினியரிங் - ஹானர்ஸ் டிப்ளமா**

பயிற்சிக் காலம் 18 மாதங்கள் (பகுதி) அல்லது 9 மாதங்கள் (முழு நேரம்) சேரத் தகுதி - 18 வயது, ப்ளஸ் டூ முடித்திருக்க வேண்டும். கட்டணம் 22,500/- ரூபாய்.

**ஆட்டோகேட் - டிப்ளமா**

பயிற்சிக்காலம் 3 மாதங்கள். சேரத் தகுதி - 18 வயது மற்றும் போதிய தொழில்நுட்ப அறிவு. கட்டணம் 6000/- ரூபாய்.

**டெஸ்க் டாப் பப்ளிஷிங் - டிப்ளமா**

பயிற்சிக் காலம் - 2 மாதங்கள், சேரத் தகுதி - 18 வயது, எஸ்.எஸ்.எல்.சி. படிப்பு.

கட்டணம் 3600/- ரூபாய்.

**வன்பொருள் பயிற்சிகள்**

1. கம்ப்யூட்டர் ஹார்டுவேர் மற்றும் நெட்வொர்க்கிங் - அட்வான்ஸ்ட் டிப்ளமா.

பயிற்சிக் காலம் - 4 மாதங்கள் (பகுதி) அல்லது இரண்டு மாதங்கள் (முழு நேரம்). சேரத் தகுதி - 18 வருடங்கள் மற்றும் ப்ளஸ் டூ கல்வி. கட்டணம் ரூபாய் - 7500/-.

**நெட்வொர்க்கிங் மற்றும் தொலைத் தொடர்பு - மாஸ்டர்ஸ் டிப்ளமா**

பயிற்சிக் காலம் 4 மாதங்கள் (பகுதி) அல்லது 2 மாதங்கள் (முழு நேரம்) சேரத் தகுதி - 18 வயது மற்றும் கம்ப்யூட்டர் வன்பொருள் பற்றிய அறிவு. கட்டணம் 12,500/- ரூபாய்.

**கம்ப்யூட்டர் வன்பொருள் மற்றும் மென்பொருள் - பி.ஜி. டிப்ளமா**

பயிற்சிக் காலம் 10 மாதங்கள் (பகுதி) அல்லது 6 மாதங்கள் (முழு நேரம்) சேரத் தகுதி - 18 வயது, ப்ளஸ் டூ கல்வி. கட்டணம் 14,000/- ரூபாய்.



• சலீம்

"**ஸி**ஸியுடன் இணைந்து நாங்கள் நடத்துவது மேற்படி கணிப்பொறி வகுப்புகள் மட்டு மல்ல; தரமுள்ள சில எலக்ட்ரானிக்ஸ் மற்றும் ரெஃப்ரிஜ்ரேஷன் கோர்ஸ் களும்தான்'' என்கிறார் ஐ.இ.சி. நிறுவனத்தின் நிர்வாக இயக்குனரான சலீம். 'ஸிஸி'யின் இணைப்புடன் நடக்கும் பிற பயிற்சிகளைப் போலவே, இந்தக் கோர்ஸ்களை (விவரங்கள் கீழே) வெற்றிகரமாக முடித்தவர்களுக்கும் அரசின் சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன.

**கன்ஸ்யூமர் எலக்ட்ரானிக்ஸ் மற்றும் டெலிகாம் டெக்னாலஜி - டிப்ளமா :**



• பி.ஜி.டி.பி.எம். பயிற்சியில் சிறந்த மாணவராகத் தேர்வான ராஜ்குமார், SISI உதவி இயக்குநருடன்

ஏழு மாதங்கள் (வேகமான கோர்ஸ் என்றால் நான்கு மாதங்கள்தானாம்) நடைபெறும் இந்தப் பயிற்சியில் சேருவதற்குக் குறைந்தபட்ச கல்வித் தகுதி எஸ்.எஸ்.எல்.சி. அடிப்படை எலக்ட்ரானிக்ஸ் விஷயங்களைக் கற்றுத் தருவதுடன் டேப்ரெக்கார்டர், விசிபி, வி.சி.ஆர்., சி.டி. ப்ளேயர் ஆகியவற்றைப் பழுதுபார்க்கவும் சர்வீஸ் செய்யவும் கற்றுத் தருகிறார்கள். கூடவே தொலைத் தொடர்பின் அடிப்படைகள், தொலைபேசி மற்றும் கார்ட்லெஸ் போன்களை சர்வீஸ் செய்வது குறித்தும் கற்றுத் தருகிறார்கள்.

**கன்ஸ்யூமர் எலக்ட்ரானிக்ஸ் - டிப்ளமா**

இதற்கு முன் குறிப்பிட்ட பயிற்சியில் தொலைத் தொடர்பு தொழில்நுட்பத்தைத் தவிர மற்றவை எல்லாமே இந்தப் பயிற்சியில் கற்றுத் தரப்படுகின்றன. இதற்கான பயிற்சிக் காலம் ஆறு மாதங்கள். வேகப் பயிற்சி என்றால் நான்கு மாதங்கள்.

**ரெஃப்ரிஜ்ரேஷன் மற்றும் ஏர்கண்டிஷனிங் - டிப்ளமா**

வழக்கமான பயிற்சி என்றால் மூன்று மாதங்கள். வேகப் பயிற்சி என்றால் ஆறே வாரங்கள். எஸ்.எஸ்.எல்.சி. படித்தவர்கள் இதில் சேரலாம். ரெஃப்ரிஜ்ரேடர், ஏ.சி. கருவி, வாட்டர் கூலர், ஐஸ்க்ரீம் பதனப்பெட்டி இவற்றின் பாகங்கள் குறித்தும், இவற்றில் குறை ஏற்பட்டால் சரிபார்ப்பது குறித்தும் கற்றுத் தரப்படுகிறது.



• அழகுக் கலை: கலந்துரையாடல் வகுப்பு

கட்டணம் 10,000/- ரூபாய்

**ஃப்ரண்ட் ஆபீஸ் மேனேஜ்மெண்ட் மற்றும் ஹவுஸ் கீபிங் - டிப்ளமா**

நான்கு மாதங்கள் நடைபெறும் இந்தப் பயிற்சியில் பதினாறு வயதைத் தாண்டியவர்கள் கலந்து கொள்ளலாம். கட்டணம் ரூபாய் 10,000/-

ஃப்ரெண்ட் டெஸ்க் லே அவுட், தகவல் தொடர்பு, பேச்சுக்கலை, அகௌண்டன்ஸி, தொலைபேசியைப் பயன்படுத்தும் கலை, தகவல்களை சேகரித்துப் பாதுகாத்தல், ஃபேக்ஸ், ஈமெய்ல், விமான நிறுவனங்கள் தொடர்பான விவரங்கள், ஃபைல்களை உரிய முறையில் பாதுகாத்தல் போன்ற விவரங்கள்.

கேட்டரிங், ஃபேஷன் டிசைனிங் போன்ற சில பயிற்சிகளை அளிக்கும் பொறுப்பை 'நீனாஸ் பாலிடெக்னிக்' என்ற அமைப்பிற்கு விட்டிருக்கிறது 'ஸிஸி'. இதன் கேட்டரிங் பிரிவின் முதல்வரான ரீஹானா, பதினாறு வருடங்களாகத் தங்கள் நிறுவனத்துக்கு சமையல் தொழில்நுட்பத்துடன் தொடர்பு இருப்பதாகக் கூறினார். தங்களிடம் பயிற்சி எடுத்துக் கொண்டு சென்ற பலரும் தனியாக ஃபாஸ்ட் புட் நிறுவனங்களைத் தொடங்கியுள்ளதாகவும், பெரும் தொழிற்சாலைகளில் உள்ள காண்டீன்களில் பொறுப்பான பதவி வகித்து வருவதாகவும் கூறினார். கிண்டியில் உள்ள 'ஸிஸி' வளாகத்தில் இவர்கள் நடத்தும் பயிற்சிகளைப் பற்றிய விவரங்கள்:

**கேட்டரிங் டெக்னாலஜி - டிப்ளமா**

நான்கு மாதப் பயிற்சி. காலை மாலை இருவேளை வகுப்புகளும் உண்டு. பத்தாம் வகுப்பு படித்திருந்தால் போதும். சைவ மற்றும் அசைவ உணவு, தந்தூரி அயிட்டங்கள், சைனீஸ் மற்றும் பஞ்சாபி உணவு வகைகளைச் சமைக்கவும், அவற்றை பிரிட்டிஷ், அமெரிக்கன், பிரெஞ்சு மற்றும் இந்தியன் ஸ்டைல்களில் பரிமாறவும் கற்றுத் தரப்படும்.

எல்லா பேக்கரி அயிட்டங்களையும் தயாரிக்கும் விதம், ஹோட்டல் நிர்வாகம், சத்துணவு மற்றும் பத்திய உணவு இவற்றுடன் சுயமாக ஹோட்டல் துவங்கினால் அதற்குத் தேவைப்படும் வழிமுறைகள் ஆகியவையும் விளக்கப்படுகின்றன.

**ஃபேஷன் டிசைனிங் - டிப்ளமா**

பல்வேறு உடைகளை நவீனமாக டிசைன் செய்வது எப்படி என்பது பற்றிய தொழில் நுட்பங்களை விளக்கும் இந்தப் பயிற்சியில் ஆண் பெண் ஆகிய இரு தரப்பினரும் சேரலாம். ஆறு மாதம் நடக்கும் இந்தப் பயிற்சிக்கான கட்டணம் 8000/- ரூபாய்.

**இன்டீரியர் டெகரேஷன் - டிப்ளமா**

அறைகளின் உட்புறங்களை விதவிதமாக அலங்காரம் செய்யும் கலையைக் கற்றுத் தரும் இந்தப் பயிற்சிக்கான கட்டணம் 8000/- ரூபாய். பயிற்சிக்காலம் ஆறு மாதங்கள்.

'கம்ப்யூட்டராலயா' என்ற நிறுவனமும் ஸிஸியுடன் இணைந்து கணிப்பொறி வகுப்புகளை நடத்துகிறது. காலை ஏழு மணியிலிருந்து இரவு ஒன்பது மணிவரை உள்ள காலத்தில் உங்களுக்கு விருப்பப்பட்ட நேரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். சென்னையில் கிண்டி, அடையார், நங்கநல்லூர், புரசைவாக்கம், பாடி ஆகிய இடங்களிலும், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், காரைக்குடி, கும்பகோணம் ஆகிய இடங்களிலும்

இவர்கள், ஸிஸியின் தொடர்போடு பயிற்சி வகுப்புகள் நடத்துகிறார்கள். ஸிஸியின் பிற பயிற்சி வகுப்புகளைப் போலவே எஸ்.ஸி, எஸ்.டி, மகளிர் ஆகிய பிரிவினர்களுக்குக் கட்டணச் சலுகை உண்டு. இதன் நிர்வாக இயக்குனரான கிருஷ்ணமூர்த்தி தாங்கள் நடத்தும் கீழ்க்கண்ட கோர்ஸ்களைப் பற்றி விவரித்தார். (காண்க அட்டவணை)

மேலே குறிப்பிட்ட இரண்டு கோர்ஸ களுக்குமான பயிற்சிக் காலம் தலா நான்கு மாதங்கள். குறைந்தது ப்ளஸ் டூ படித் திருக்க வேண்டும்.

பென்டஃபோர் நிறுவனத்தின் பென்டஸஸ்ட் பிரிவும் ஸிஸியுடன் இணைந்து "IBM AS/400" பயிற்சி வகுப்பு களை கிண்டி வளாகத்தில் நடத்துகின்றன.

| கோர்ஸ் | பயிற்சிக்காலம் (மாதங்களில்) வேகமான பயிற்சி | வழக்கமான பயிற்சி | கட்டணம் (தவணைகளிலும் செலுத்தலாம்) வேகமான ரூ | வழக்கமான ரூ |
|---|---|---|---|---|
| 1. கம்ப்யூட்டர் அப்ளிகேஷன்ஸ்—ஹானர்ஸ் டிப்ளமா | 9 | 18 | 7700 | 8000 |
| 2) க்ளையண்ட் சர்வர் டெக்னாலஜி—டிப்ளமா | 3 | 6 | 9200 | 9500 |
| 3) வின்டோஸ் & இன்டர்நெட் டிப்ளமா | 3 | 6 | 9200 | 9500 |
| 4) சாப்ட்வேர் & ஹார்ட்வேர்—பி.ஜி./டிப்ளமா | 5 | 10 | 14400 | 14800 |
| 5) ஆடோகேட்—REL 14- டிப்ளமா | 6 | 3 | 6200 | 6200 |

## 'ஸிஸி,' மேனேஜ்மெண்ட் தொடர்பான கீழ்க்கண்ட பயிற்சிகளையும் அளிக்கிறது:

**பிஸினஸ் மேனேஜ்மென்ட் – பி.ஜி.டிப்ளமா/டிப்ளமா**

ஆறு மாதங்கள் பகுதி நேரமாக (தினமும் இரண்டு மணி நேரம்) நடத்தப் படும் இந்தப் பயிற்சியில் சேர நீங்கள் பட்டதாரியாகவோ டிப்ளமா பெற்றவரா கவோ இருக்க வேண்டும். கட்டணம் - 9800 ரூபாய்.

**டிராவல் மற்றும் டூரிஸம் மேனேஜ் மென்ட் – பி.ஜி. டிப்ளமா/டிப்ளமா**

கட்டணம் 5500 ரூபாய்

**இன்டீரியர் டிசைனிங் – பி.ஜி. டிப்ளமா/டிப்ளமா**

கட்டணம் 8000 ரூபாய்

நான்கு வாரங்கள் (முழுநேரம்) அல்லது 6–8 வாரங்கள் (பகுதி) நடைபெறும் இந்தப் பயிற்சியில் பி.ஈ., பி.டெக் மற்றும் கம்ப்யூட்டர் சயன்ஸை முக்கியப் பாட மாக எடுத்துள்ள பி.எஸ்ஸி மற்றும் எம்.எஸ்ஸி படித்தவர்கள் பயிலுவது பொருத்தமாக இருக்கும். இந்த மையத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றுள்ள தேவ் குமார் குறிப்பிட்ட நேரம்தான் பயிற்சியில் கற்றுக் கொடுக்கும்போது உண்டு என் றாலும் மற்றபடி மாணவர்களாகவே பயிற்சி எடுத்துக் கொள்ள இங்குள்ள கம்ப்யூட்டர்களை எவ்வளவு நேரத்துக்கு வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றார்.

## கம்ப்யூட்டர் சாம்பிராணி தெரியுமா?

சிறு தொழில் பிரிவில் வெற்றி



**''நீங்க எந்த கான் நடிகரோட ரசிகர் னாலும், அதுக்கேற்ற குளிர்பானம் எங்கிட்டே இருக்கு.''**

**''எப்படி?''**

**''ஷாருக்கான்னா பெப்ஸி, அமீர் கான்னா கோகோ கோலா. சல்மான் கான்னா தம்ஸ் அப்.''**

---

பெற்றவர்கள் சிலரது அனுபவங்களைப் பார்ப்போமா?

சாலிக்கிராமத்தில் உள்ள ஸ்ரீகுரு பேக்கிங்ஸ் நிறுவனத்தின் உரிமையாள ரான நாராயணன், கடந்த 25 வருடங் களாக இந்தத் துறையில் இருக்கிறார். இந்தியன் வங்கியின் நிதியுதவி கிடைக் கப்பெற்ற இவர், சமீபகாலமாக 'பேக்கிங்' பிரிவில் கடும் போட்டி நிலவுவதாகக் கருதுகிறார். தொழிலகங்களை வாடிக்கை யாளராகப் பிடித்து விட்டால் சமாளித்து வெற்றி பெறுவது கடினமல்ல என்பது இவரது கருத்து.

தில்லை கங்கா நகரில் ஹை-பாஷன் லெதர்ஸ் என்ற நிறுவனத்தை பன்னிரண் டாவது வருடமாக வெற்றிகரமாக நடத்தி வருகிறார் ரவி. இவர்கள் தயாரிக்கும் தோல் பர்ஸுகள் மற்றும் தோல் பைகள் முழுவதும் ஏற்றுமதிக்காகத்தான். ஏ.சி. டெக் கல்லூரியில் தோல் தொழில் நுட்பப் படிப்பை முடித்த இவர் ''ஒரு விதத்தில் எங்கள் தொழில் வைர வியாபாரம் போலத் தான். வைரத்தின் தரத்தை சுலபத்தில் கண்டு பிடிக்க முடியாது. அதே போல் தோலின் தரத்தையும் சாதாரண மனி தனால் இனம் பிரிக்க முடியாது. தோல் தொழிற்சாலைகள் அவற்றின் கழிவுகளால் (சுற்றுப்புறச் சூழலுக்கு) கேடு விளைவிப்ப தாகக் கருதி உச்ச நீதி மன்றம் விதித்த தடை சமீபத்தில்தான் நீக்கப்பட்டிருக் கிறது. இடைப்பட்ட கால கட்டத்தில் பிறநாட்டுத் தோல் பொருள்களை வாங்கத் தொடங்கிவிட்ட எங்கள் வெளிநாட்டு வாடிக்கையாளர்களை இனி எங்கள் பக்கம் திருப்ப வேண்டும்'' எனும் இவர், இந்தியன் வங்கி முன்பு துவங்கிய NEDA என்ற திட்டத்தின் கீழ் பயன் பெற்றவர் களில் ஒருவர். ''ஐந்தாறு வருடங்கள் இந்தத் துறையில் இருந்து இதன் பிரச் னைகளைப் புரிந்து கொண்டு செயல் பட்டால் தாராளமாக முன்னேறலாம்'' என்கிறார்.

ஈக்காடுதாங்கலில் உள்ள சுகம் பெர்ஃப்யூமரி ப்ராடக்ட்ஸ் எனும் நிறு வனத்தை நடத்தி வருபவர் கனகசபை. தம் பிள்ளைகளும் சொந்தக் காலில் நிற்க வேண்டும் என்று இதைத் துவக்கினாராம். தொடக்கத்தில் இவரும் கார்பனை அடிப்படையாகக் கொண்டு, சாம்பிராணி யைத்தான் தயாரித்து வந்தார். பிறகு இதற்கு ஒரு மாற்றைக் கண்டுபிடித்து இன்ஸ்டன்ட் சாம்பிராணி (இதை 'கம்ப்யூட்டர் சாம்பிராணி' என்றும் மக்கள் குறிப்பிடுகிறார்களாம்) என்ற ஒன்றைத் தயாரிக்க, அதற்கு மக்களி டையே பெரும் வரவேற்பாம்.

''பல்வேறு வண்ணங்களில் இவற்றைக் கொண்டு வந்ததும், கார்பன் கலவாததால் சுற்றுப்புற சூழலுக்கு எதிரியாக இல் லாததும் எங்கள் தயாரிப்பு வெற்றி பெறப் பெரிதும் உதவியது'' எனும் இவரது நவீன சாம்பிராணிகள் அந்தமானுக்கும், ஸ்ரீலங் காவுக்கும்கூட ஏற்றுமதி செய்யப்படு கின்றன!

கிண்டியில் உள்ள டெக்லான் பாலி மர்ஸ் நிறுவனரான பாலசுப்ரமணியன், ஆட்டோமொபைல் நிறுவனங்களுக்காகக் கடந்த பத்து வருடங்களாக என்ஜினியரிங் ப்ளாஸ்டிக்ஸைத் தயாரித்து வருகிறார். வாஷர், க்ளட்ச் இதுபோல. கடந்த சில வருடங்களாக ஜீப், மினி லாரி போன்ற LCV (கனரகமல்லாத வணிக வண்டிகள்) வண்டிகளின் விற்பனை சரசரவெனக் குறைந்ததால் விற்பனை குறைந்துள்ளது. பெரு நிறுவனங்களே நிதிநெருக்கடியில் இருப்பதால், அவர்களுக்குத் தங்கள் பாகங்களை விற்பனை செய்யும் சிறு தொழில் நிறுவனங்களும் கொஞ்சம் திணறுகின்றன. ''ஆனால் ஒன்று! எந்தத்

துறையிலுமே வீழ்ச்சி என்பது தொடர்ச்சியாக இருக்காது. மீண்டும் முன்னேற்றம் வரும். கொஞ்ச காலமாகவே பெரிய ப்ராஜக்ட் எதுவும் வரக் காணோம். தெர்மல் ப்ளாண்ட் போன்ற பெரும் திட்டங்களை அரசு கொண்டு வந்தால் பல சிறு தொழில் நிறுவனங்களுக்கு அது பேருதவியாக இருக்கும்" என்கிறார்.



• அழகுக் கலைப் பயிற்சி

## மகளிர் மட்டும்!

ஆணுக்குப் பெண் சமம்தான். எனினும் மகளிர் தொழில் முனைவோருக்கு ஏற்றது என்று சில தொழில்களைப் பரிந்துரை செய்கிறது அரசின் தொழில் முன்னேற்ற மையம். அவை:

1. உணவு சம்பந்தமான பொருட்கள் தயாரிப்பு (ஊறுகாய், ஜாம், மிளகாய்ப் பொடி, இட்லி பொடி, மசாலா பொடி மற்றும் குளிர்பானங்கள்)
2. தையல் மற்றும் எம்பிராய்டரி.
3. கைவினைப் பொருட்கள்.
4. அழகு ஆடை வடிவமைப்பு.
5. அழகுக் கலை.
6. ஆயத்த ஆடைகள். (ரெடிமேட் உடைகள்)
7. பிரிண்டிங் மற்றும் பைண்டிங்
8. ஸ்கிரீன் பிரிண்டிங்
9. டேட்டா பிராஸசிங்
10. பிளாஸ்டிக் ரீபிராஸசிங்
11. சாப்ட்வேர் டெவலப்மெண்ட்
12. டெஸ்க் டாப் பப்ளிஷிங்
13. துணிச் சாயம் மற்றும் பிரிண்டிங்
14. வீட்டு உபயோக மின் சாதனங்கள் பழுது பார்த்தல்.
15. கயிற்றுப் பொருள்கள்.
16. எலக்ட்ரிகல் மற்றும் எலக்ட்ரானிக் சாதனங்கள் பழுது பார்த்தல்.
17. பொம்மை தயாரிப்பு
18. காளான் உற்பத்தி.
19. இயந்திரங்களின் மூலம் கோரைப்பாய் தயாரிப்பு.
20. மாவாட்டும் இயந்திரத்தை அசம்பிள் செய்தல்.
21. பேக்கரி பொருட்கள்.
22. டி.வி., ரேடியோ பழுது பார்த்தல்
23. தோல் பொருள்கள் தயாரிப்பு.
24. ஸ்டெபிலைசர் தயாரிப்பு.
25. பாலிதீன் பைகள் தயாரிப்பு.
26. அகர்பத்தி
27. பாக்கிங் செய்தல்
28. பிளாஸ்டிக் கோன் மற்றும் பேப்பர் கோன்
29. பிளாஸ்டிக் இன்ஜெக்ஷன் மோல்டிங்
30. அட்டைப் பெட்டி
31 செயற்கைப் பூக்கள்
32. பிரிண்டிங் சர்க்யூட் போர்டு வடிவமைத்தல் மற்றும் தயாரித்தல்.

ஃபாஸ்ட் ஃபுட் தயாரிப்புப் பயிற்சி பெறும் பெண்கள்



33. உள் அலங்காரம்

34. ரெக்ஸின் மற்றும் ஒயர் பைகள் தயாரித்தல்

35. தேன் தயாரித்தல்

36. ஆடைகள் அச்சு

37.கிரானைட் மார்பிள் கற்கள் அறுத்தல் மற்றும் பாலீஷ் செய்தல்.

38. நார் பொருள்கள் தயாரித்தல்.

39. பரிசுப் பொருட்கள் தயாரித்தல்.

40. சிறு ரசாயனப் பொருட்கள் தயாரித்தல்– சலவைத் தூள், க்ளீனிங் பவுடர், திரவ நீலம் மற்றும் பினாயில் போன்றவை.



• சக்தி தேவன்

திட்டம்) பிளாட் எண், 556, மதியகம், கே.கே. நகர், மதுரை – 625 020.

இந்திய அரசின் சிறு தொழில் முன்னேற்ற மையம், கிண்டியில் உள்ள தனது வளாகத்தில் பெண்களுக்குப் பெரிதும் பயனளிக்கக் கூடிய கீழ்க் கண்ட பயிற்சி வகுப்புகளை நடத்துகிறது. இவை முடிந்ததும், வெற்றி பெற்ற மாணவிகளுக்கு அரசுச் சான்றிதழ் வழங்கப்படுகிறது.

இந்தத் தொழிற் பயிற்சிகள் குறித்த விவரங்களை அந்தந்த மாவட்ட தொழில் மையப் பொது மேலாளர் அல்லது மண்டல இணை இயக்குனர், சென்னை – மாவட்டத் தொழில் மையத்திலிருந்து அறிந்து கொள்ளலாம்.

தமிழ்நாடு மகளிர் நல மேம்பாட்டு நிறுவனம் சென்னை, கோவை, திருச்சி மற்றும் மதுரை ஆகிய இடங்களில் இளம் பெண்களுக்கு தொழில் முனைவோர் பயிற்சிகளை அவ்வப்போது அளித்து வருகிறது.

**இந்த அமைப்பின் முகவரிகள்:**

**சென்னை–**

100, அண்ணா சாலை, கிண்டி,
சென்னை – 32

**கோவை:**

திட்ட அலுவலர்,
திட்ட செயலாக்க அலுவலகம் (மகளிர் திட்டம்) 319, ஸ்டேட் வங்கி காலனி,
கோவை – 636 004.

**திருச்சி:**

திட்ட அலுவலர், திட்ட செயலாக்க அலுவலகம் (மகளிர் திட்டம்) 18–3, சாமட் ஸ்கூல் தெரு, காஜா தெரு,
திருச்சி – 620 020.

**மதுரை:** திட்ட அலுவலர்,
திட்ட செயலாக்க அலுவலகம் (மகளிர்

## 1. காஸ்மெடாலஜி (ஒப்பனைத்துறை) – சர்டிபிகேட் கோர்ஸ்

● ஆறு வாரப் பயிற்சி. பதினெட்டு வயதுக்கு மேற்பட்டவர்கள் சேரலாம். திங்களிலிருந்து வெள்ளிவரை தினமும் இரண்டு மணி நேரம். பயிற்சிக்கான கட்டணம் 4,500 ரூபாய். எஸ்.ஸி., எஸ்.டி. பிரிவினருக்கு ஓரளவு கட்டணச் சலுகை உண்டு.

● தியரியாக மட்டுமில்லாமல் அழகு நிலையங்களை வெற்றிகரமாக நடத்திக் கொண்டிருப்பவர்களின் நேரடி விரிவுரைகளும், ப்ராக்டிகல் செஷன்களும் நடைபெறுகின்றன!

● முக அழகு, ப்ளீச்சிங், த்ரெட்டிங், தலைமுடியை டை செய்வது, ஹென்னா சிகிச்சை, உடலை வாக்ஸ் செய்வது, மசாஜ் செய்வது, மெஹந்தி இடுவது, பெடிக்யூர், மானிக்யூர் என்று அனைத்தையும் கற்றுத் தருகிறார்கள்.

● நாம் சென்றிருந்தபோது மந்தைவெளியில் உள்ள சக்தி அழகு மையத்தின் உரிமையாளர் சக்திதேவன் வகுப்பு நடத்திக் கொண்டிருந்தார். கட்டாரில் பணிபுரியும் கணவரோடு விடுமுறைக்காக இங்கு வந்திருந்த பத்மாவதி "இந்தக் கோர்ஸை முடிச்சுட்டு கட்டாருக்குப் போய் அழகு நிலையம் தொடங்கி வீட்டின் வருமானத்தை உயர்த்தப் போகிறேன்" என்றார். திருப்பூரிலிருந்து

வந்திருந்த திலகவதி, ஏற்கெனவே திருப்பூரில் நாலைந்து அழகு நிலையங்கள் வெற்றிகரமாக இயங்குவதைக் குறிப்பிட்டு, தானும் அப்படித் துவங்குவதற்காகத்தான் இந்தக் கோர்ஸில் சேர்ந்ததாகக் குறிப்பிட்டார். கவிதா முத்துவேல் என்ற விருது நகர்க்காரர், குழந்தை சற்றே வளர்ந்துவிட, சிறிது ஓய்வு நேரம் கிடைப்பதாகவும் அதை இப்படி மனதுக்குப் பிடித்தவகையில் செலவு செய்ய உத்தேசித்திருப்பதாகவும் கூறினார்!

## 2. எக்ஸிக்யூடிவ் செகரட்டரிஷிப் — டிப்ளமா.

சுருக்கெழுத்து, வியாபாரம் தொடர்பான கடிதங்களை எழுதுதல், வங்கி மற்றும் இன்ஷூரன்ஸ் தொடர்பான அடிப்படை விஷயங்கள், எம்.எஸ். ஆபீஸ்-கம்ப்யூட்டர் பயிற்சி, அக்கௌண்டன்ஸி போன்ற பல விஷயங்களைக் கற்றுத் தரும் இந்தப் பயிற்சியின் காலம் மூன்று மாதங்கள். பத்தாவது வகுப்பையும், பதினாறாவது வயதையும் தாண்டியிருக்க வேண்டும். தினமும் மூன்று மணி நேரங்கள். கட்டணம் 4500 ரூபாய்.

## விற்கும் கலை!

கிட்டத்தட்ட மன்மதக் கலை போலத்தான் நீங்கள் தயாரிக்கும் பொருள்களை விற்கும் கலையும்- அதாவது "சொல்லித் தெரிவதில்லை."

● மார்க்கெட்டிங் கலை என்பது சமயத்துக்குத் தகுந்தாற்போல் மாறுபடும் ஒன்றுதான். என்றாலும் சில அடிப்படை விஷயங்களை நினைவில் கொள்வது நல்லது.

● மக்களின் தேவைகளைப் பற்றி ஆய்வு செய்யுங்கள். அதில் எந்தத் தேவை முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ பூர்த்தி செய்யப்படாமல் இருக்கிறது என்பதைக் கண்டுபிடியுங்கள். அந்த திசையை நோக்கி உங்கள் பயணத்தைத் தொடங்குங்கள். அதாவது அந்தக் குறையைத் தீர்க்கும் வகையில் உங்கள் தயாரிப்பு அல்லது சேவை இருக்கட்டும்.

● உங்கள் வாடிக்கையாளர்கள் யார் யார் என்பது குறித்தும், அவர்கள் உங்கள் தயாரிப்புகள் குறித்து என்ன கருதுகிறார்கள் என்பதிலும் தெளிவு இருக்கட்டும். அவர்களின் தேவைக்கேற்ப உங்கள் தயாரிப்பை மாற்றியமைக்கவும் நீங்கள் தயங்கக் கூடாது.

● கிடைத்த வாடிக்கையாளர்களை ஒரு போதும் இழக்கக் கூடாது. புதியதொரு வாடிக்கையாளரைப் பிடிப்பதைவிட, ஏற்கெனவே நம் கைவசம் இருக்கும் வாடிக்கையாளரைத் தக்க வைத்துக் கொள்வது சுலபம்தான். எனவே வாடிக்கையாளரிடமிருந்து ஏதாவது புகார் வந்தால் அதை ஒரு போதும் அலட்சியப் படுத்த வேண்டாம்.

● உங்களுக்குக் கீழே நாலுபேர் வேலை செய்கிறார்கள் என்றால், மக்கள் தொடர்பு குறித்து அவர்களுக்குப் போதிய பயிற்சியை அளியுங்கள். ஏனென்றால், உங்கள் வாடிக்கையாளர்களோடு நேரடியாகப் பழகும் சந்தர்ப்பங்கள் அவர்களுக்கும் நிறைய இருக்கலாம்.

● பொருள்களை விற்க வாடிக்கையாளர்களின் இடங்களில் காத்திருக்க நேர்ந்தால் அதை அவமானமாகக் கருத வேண்டாம். "இவர்கள் எல்லாம் வரிசையில் வந்து என் தயாரிப்புகளை வாங்கும் காலம் வரும்" என்று பாஸிடிவான முறையில் சூளுரைத்துக் கொள்ளுங்கள். (மனத்துக்குள் மட்டும்!)

"உங்கள் தயாரிப்பு புதுமை

"மூடியும், தயாரிக்கணும்னு தோணாமப் போயிடுச்சே?"





• சமையல் கலைக்கு நோடிப் பயிற்சி

யானதாகவும், தரமானதாகவும் இருந்தால் அவற்றை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யலாமே'' என்று சொன்னால் 'முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப் படுவதாவது!' என்று ஒதுங்க வேண்டாம்.

வெளிநாடுகளில் நடத்தப்படும் கண் காட்சிகளில் நமது இந்தியத் தயாரிப்புகள் பார்வைக்கு வைக்கப்படுவது உண்டு! அவற்றில் தரம்மிக்க சிறுதொழில் தயாரிப்பு களும் பார்வைக்கு வைக்கப்படும். இந்தப் பொருள்களை எடுத்துச் செல்லவும், இதற்குத் தகுந்த விளம்பரம் கொடுக்கவும், இவற்றை இன்சூரன்ஸ் செய்வதற்குமான பொறுப்பை சிறுதொழில் முன்னேற்ற அமைப்பு ('ஸிடோ') ஏற்றுக் கொள்கிறது- அதாவது இவை தொடர்பாகச் சிறு தொழில் தயாரிப்பாளர் எந்த செலவும் செய்ய வேண்டாம். மேற்படி கண்காட்சி களில் பல்வேறு வியாபாரிகள் கேட்ட பல்வேறு கேள்விகள், அவர்கள் இந்தத் தயாரிப்பு குறித்துக் காட்டிய உற்சாகம் ஆகியவை தயாரிப்பாளருக்குத் தெரிவிக் கப்படுகிறது. ஏற்றுமதி செய்வதற்கான வழி முறைகளுக்கு வணிக அமைச்சகம் உதவு கிறது!

## சில சுயவேலை வாய்ப்புகள் — விவரங்கள்

### ஏஜென்ஸி

ஜாம்ஸ், ஸாஸ், ஜாம், சோப்புத் தூள், சானிடரி நாப்கின் போன்ற, ஒவ்வொரு வீட்டிலும் தேவைப்படும் பொருள்களை பல பிரபல நிறுவனங்கள் தயாரிக்கின்றன இல்லையா? அவற்றை அந்த நிறுவனங் களிடமிருந்தே நேரடியாக ஏஜென்ஸி முறையில் வாங்கி, உங்கள் ஆட்கள் மூல மாக அந்தப் பொருள்களை மக்களுக்கு விற்கலாம்.

இதற்கு முதலில் அந்த நிறுவனங்களின் நம்பிக்கையைப் பெற வேண்டும். புதிதாக ஏஜென்ஸி எடுப்பவர்கள் என்றால் தயாரிப்பு நிறுவனங்கள் சிபாரிசுக் கடிதம் தேவை என்று கேட்பதுண்டு. அந்த நிறு வனத்திலேயே உங்களது உறவினரோ, நண்பரோ இருந்து அவர்கள் உத்தரவாதம் அளித்தாலும் உங்களுக்கு ஏஜென்ஸி கொடுக்கப்படலாம்.

முதலில் பதினைந்து நாட்களுக்குத் தேவைப்படும் பொருள்களை விற்பனைக் காகக் கொடுப்பார்கள். இதற்கே சுமார் பதினைந்தாயிரம் ரூபாய் டெபாஸிட் கட்ட வேண்டியிருக்கும். தயாரிப்பு நிறு வனத்திற்கு ஆழ்ந்த நம்பிக்கை ஏற்படும் விதத்தில் நம் அறிமுகம் இருந்தால் இந்த டெபாஸிட் தொகை கணிசமாகக் குறைக் கப்படலாம்.

தங்கள் தயாரிப்புகளை நிறுவனம் கொடுக்கும்போதே, உங்களிடமிருந்து எத்தனை நாட்களுக்குள் விற்பதற்காகத் தங்கள் பொருள்களைக் கொடுக்கிறதோ, அத்தனை நாட்களுக்குப் பின் தேதியிட்ட காசோலையை நிறுவனத்தின் பெயருக்கு அப்போதே கொடுக்க வேண்டியிருக்கும்.

ஏஜென்ஸி எடுக்க முதலில் தயாரிப்பு நிறுவனத்தின் மார்க்கெட்டிங் மேனே ஜரை அணுக வேண்டும்.

இப்படி வாங்கும் பொருள்களை வீடு வீடாகச் சென்று விற்பனை செய்ய நம்பக மான நபர்களை நியமிக்க வேண்டும்.

## இந்தத் துறையில் வெற்றிபெற சில யோசனைகள்:

மிகவும் நம்பகமானவர்களைத் தவிர யாருக்கும் கடனாகப் பொருள்களை அளிக்கக் கூடாது. தயாரிப்பு நிறுவனங் களுக்கு நீங்கள் தரும் காசோலை எக்கார ணம் கொண்டும் கணக்கில் பணமில்லை என்று திருப்பி அனுப்பப்படக்கூடாது. ஆரம்பக் காலத்தில் மிகக் குறைந்த விற்பனையே ஆகிறது என்றாலும் சோர் வடையக் கூடாது. விடாமுயற்சி, தொட் டாற்சுருங்கியாக இல்லாத்தன்மை இதெல் லாம் இத்துறைக்குத் தேவை.

ஃப்ளாட்களை அணுகுவதில் ஒரு சௌகரியமுண்டு. அந்தக் குடியிருப்பின் செயலாளர் அல்லது தலைவரை சந்தித்து நீங்கள் விற்கும் பொருளைப் பற்றி திருப்திகரமாகக் கூற முடிந்தால், அவரே அந்த ஃப்ளாட்களில் வசிக்கும் பலரிடமும் நமக்கு சிபாரிசு செய்யக்கூடும்.

தயாரிப்பு நிறுவனங்கள் தரும் சுமார் 20% கமிஷனில் ஓரளவையாவது வாடிக்கையாளர்களுக்குத் தருவதுதான் நியாயம், புத்திசாலித்தனம்.

## ப்ளாஸ்டிக் குப்பிகள் தயாரிப்பு

மருந்துகள், டால்கம் பவுடர்கள், பூச்சிக் கொல்லிகள் போன்ற பலவற்றை அடைத்து விற்கும் ப்ளாஸ்டிக் குப்பிகளுக்கு தொடர்ந்து டிமாண்ட் இருந்து வருகிறது.

இவற்றை உருவாக்க கையால் இயக்கப்படும் இயந்திரமும் உண்டு. தானியங்கி இயந்திரம் என்றால் அதன் விலை சுமார் இரண்டு லட்சம் ரூபாய். ஜூன் மாதத்திலிருந்து ஜனவரி வரை டிமாண்ட் அதிகம் இருக்கும் (அறுவடைக் காலத்தில் பூச்சி மருந்துகள் அதிகம் பயன்படுத்தப்படுமே!)

இந்தத் தொழிலில் அவ்வப்போது தேவைப்படும் பணம் (வொர்க்கிங் கேபிடல்) அதிகம். காரணம் வாடிக்கையாளர்களுக்கு முப்பதிலிருந்து தொண்ணூறு நாட்கள் வரை கிரெடிட் கொடுக்க வேண்டியிருக்கும். அதாவது, பொருளை வாங்கிக் கொண்டு அவ்வளவு நாட்களுக்குப் பிறகுதான் பணம் கொடுப்பார்கள்.

இப்படித் தயாரிக்கும் ப்ளாஸ்டிக் குப்பிகளுக்கு நீங்களே ஸ்க்ரீன் பிரிண்டிங்கும் செய்யலாம். குப்பியில் அடைக்கப்பட்ட மருந்தின் பெயர், அதைத் தயாரிக்கும் நிறுவனத்தின் பெயர் போன்ற விவரங்களைக் குப்பியின் மேல் பொறிப்பதைத்தான் ஸ்க்ரீன் பிரிண்டிங் என்று இங்கு குறிப்பிடுகிறார்கள். கையால் இயக்கப்படும் இந்த யந்திரத்தின் விலை 30,000/- ரூபாய்.

**உடற்பயிற்சி நிலையம் (ஜிம்)**

உடற்பயிற்சி சைக்கிள், வைப்ரேட்டர் பெல்ட், ட்விஸ்டர், இண்டோர் வாக்கர், எடை காட்டும் கருவி, ரோயிங் கருவி, நீராவிக் குளியல் தொட்டி - இவற்றையெல்லாம் வாங்க சுமார் 70,000/- ரூபாய் ஆகக்கூடும். இவற்றில் இரண்டு மூன்றை மட்டும் வாங்கி மினி ஜிம் என்று அமைப்பவர்களும் உண்டு.

வைப்ரேட்டர் பெல்ட் மற்றும் நீராவிக் குளியல் தொட்டி ஆகியவை மின்சாரத்தில் இயங்குவதால் அதற்கு மின் இணைப்பு தேவை.

ஏற்கெனவே இதுபோன்ற நிலையத்தை நடத்தி வரும் அனுபவஸ்தரிடமிருந்து ஆலோசனைகளைக் கேட்டுக் கொள்வது நல்லது. வீட்டுக் குடியிருப்புகள் நிரம்பிய பகுதியில் தொடங்குவதுதான் சிறந்தது. பெண்களும் கணிசமான எண்ணிக்கையில் வரவேண்டுமானால் கொஞ்சம் அமைதியான இடத்தில் நிறுவ வேண்டும். புடைவையோடு வரும் பெண்கள் உடற்பயிற்சி செய்யும் போது தாங்கள் அணிந்து கொள்ளும் உடையை 'ஜிம்'மிலேயே விட்டு விட்டுச் செல்ல வசதியளிப்பது நல்லது.

இந்தத் தொழிலில் சில பிரச்னைகளும் எழக்கூடும். பொருத்தப்படும் கருவிகளில் சில ஓரளவு சப்தம் எழுப்பக்கூடியவை. எனவே மாடியில் ஜிம் என்றால் கீழே வசிப்பவர்கள் இதை இடையூறாக எடுத்துக் கொள்ளக்கூடும். மற்றபடி எந்தக்

---

**''புது ஐட்டம். ஃப்ளாட்கள் அத்தனைக்கும் ஒரே ஊதுவத்தி ஏத்தினா போதுமாம்.''**





ஆகியவை மிச்சம்தானே. அது மட்டுமல்ல; வேலை சரியாக செய்யப்படவில்லை என்றால் உங்களிடம் புகார் கூறி, குறைகளைச் சரிசெய்து கொள்வது அவர்களுக்கு எளிதான விஷயம்.

நீங்கள் அனுப்பும் பணியாட்களிடம் ஒரு செக் லிஸ்ட் கொடுத்து அனுப்பலாம். ''தரை சுத்தம், பூ ஜாடிகள் சுத்தம், ஒட்டடை நீக்கம், வெனிஷியன் ப்ளைண்டுகளில் உள்ள தூசு நீக்கம், புகைப்பட ப்ரேம்களை சுத்தம் செய்தல், பாத்ரூமில் உள்ள குழாய்களைச் சரிபார்த்தல், அங்குள்ள பக்கெட் மற்றும் குவளைகளை சுத்தமாக்குதல், மின்சாரக் கம்பிகளின் பாதுகாப்பு நிலை'' என்று இந்தப் பட்டியல் நீளலாம்.

கருவியையும் தரையோடு பொருத்த வேண்டிய அவசியம் இல்லை என்பதால் தரை பாதிக்கப்படாது. சில சமயம் கருவியில் கோளாறு ஏற்பட்டால் அதை சரி செய்பவர் சில நாட்கள் கழித்துக் கூட வரலாம். அப்போது வாடிக்கையாளரின் அதிருப்தியை எதிர்கொள்ள வேண்டியிருக்கும்.

முடிந்தால் மெல்லிய இசையை ஒலிக்கவிடலாம். அதன் இனிய விளைவே தனி.

## அலுவலகப் பராமரிப்பு

அலுவலகங்கள் மற்றும் கெஸ்ட் ஹவுஸ்களை, சுத்தமாகப் பராமரிப்பதற்காக அந்த நிர்வாகத்துடன் குறைந்தது ஒரு வருட காலத்துக்கு - ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். பராமரிப்பு என்றால் கட்டடத்தை சுத்தம் செய்வது, குழாய் மற்றும் மின் இணைப்புகளில் பழுது ஏற்பட்டால் சரிசெய்வது, மலர் அலங்காரம் செய்வது ஆகியவையும் அடக்கம். இவற்றிற்காகவெல்லாம் நீங்கள் சிலரை நியமித்துக் கொள்ள வேண்டியிருக்கும்.

நிரந்தரப் பணியாட்களை விட இதுபோன்ற அமைப்புகள் மூலம் இந்த வேலைகளைச் செய்து கொள்வது அலுவலகங்களுக்கு லாபமான விஷயம். வைப்பு நிதி, ஓய்வூதியம்

## க்ளீனிங் திரவம் தயாரிப்பு

தரை, டாய்லெட் போன்றவற்றை சுத்தம் செய்யும் திரவத்தைத் தயாரிக்கலாம். பினாயில் மாதிரி என்று வைத்துக் கொள்ளுங்களேன். இதைத் தயாரிக்க மருந்துப் பொருள்களுக்கான ட்ரக் லைசென்ஸ் தேவையில்லை. விற்பனை வரி அலுவலகத்தில் பெயரைப் பதிவு செய்து கொள்ள வேண்டும்.

பெரும்பாலான மூலப் பொருள்கள் சென்னை கோவிந்தப்ப நாயக்கன் தெருவில் கிடைக்கும். அகமதாபாத்திலிருந்து கூட சில மூலப் பொருள்கள்



குறைவான விலைக்குக் கிடைக்கும். இந்தத் தொழிலைத் துவங்கிய ஒருவர், வீட்டில் யாவரும் செய்யக்கூடிய க்ளீனிங் திரவம் ஒன்றைத் தயாரிக்கும் முறையை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்.

ஒரு லிட்டர் தண்ணீருடன் (ஃசாப்ட் வாட்டர்) இருநூறு கிராம் காஸ்டிக் சோடாவைக் கலந்து கொள்ள வேண்டும். அதில் ஒரு கிலோ கிராம்ஷெர்ரியைக் (சோப்பின் ஒரு வகை) கரைக்கவும். பிறகு 250 கிராம் யூரியாவைச் சேர்க்க வேண்டும். அதன் பிறகு பத்து லிட்டர் தண்ணீர் கலக்கவும். பிறகு சுமார் 25 மில்லி லிட்டர் வாசனைப் பொருளைக் கலக்கலாம். இப்போது சுமார் பன்னிரண்டு லிட்டர் க்ளீனிங் திரவம் கிடைக்கும்.

## க்ரெஷ்

குழந்தைகளை கவனித்துக் கொள்ளும் 'க்ரஷ்'களுக்கு இப்போது டிமாண்ட் அதிகம். பெண்கள் வேலைக்குப் போவதும், கூட்டுக் குடும்பம் என்ற அமைப்பு நலிந்து வருவதும் முக்கியக் காரணங்கள்.

க்ரெஷ் தொடங்க இடவசதி இருந்தால் போதும். மற்றபடி வேறு எந்த முதலீடும் தேவையில்லை. உங்கள் பகுதியில் நீங்கள் நல்ல பெயர் எடுத்திருந்தால் அதுவே ஒரு முதலீடுதான். வாய் வார்த்தையாகவே விளம்பரம் கிடைக்கும். க்ரெஷ் தொடங்க அரசின் அனுமதி வேண்டாம்.

காலை ஒன்பதிலிருந்து மாலை ஆறு மணி வரை செயல்படலாம். என்றாலும் நேரத்தைப் பொறுத்தவரை மிகவும் கண்டிப்புடன் இருக்க முடியாமல் போகலாம். ஏனென்றால் பெற்றோரின் வேலை நேரத்தைப் பொறுத்த விஷயமிது.

முதலில் காற்றோட்டம் மிக்க இடவசதி இருக்கிறதா, என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள். சொந்த வீடாக இருந்தால் நல்லது. பஸ் ஸ்டாண்டுக்கு அருகில் உள்ள கட்டடம் என்றால் பெற்றோருக்கு சௌகரியம். பொறுமையும் நிதானமும் மட்டுமல்ல. குழந்தைகளுக்கு சுத்தமான காய்ச்சி வடிகட்டிய தண்ணீரும் தேவை. ஜுரம், ஜலதோஷம் ஆகியவற்றிற்குத் தேவையான சில எளிய மருந்துகளைக் கைவசம் வைத்திருப்பது நல்லது.

சில பொம்மைகளையும் வாங்கிப் போட வேண்டி வரலாம்.



''அவங்க தயாரிப்புகள் விக்கலேன்னாலும் சரி, ஒருபோதும் அதை வேஸ்ட் செய்ய மாட்டாங்க."

## அச்சு மை தயாரிப்பு

புத்தகங்கள், போஸ்டர்கள் இவற்றிற்குத் தேவைப்படும் அச்சு மைக்கு நல்ல டிமாண்ட் இருக்கிறது. அதிகம் விற்பனை யாவது கறுப்பு மைதான். அடுத்தது சிவப்பு, நீலம், மஜந்தா ஆகியவை.

அச்சு மை தயாரிக்கத் தேவையான ட்ரிபிள் ரோல் இயந்திரத்தை வாங்க சுமார் இரண்டு லட்சம் ரூபாய் தேவைப் படும். சிறிய அச்சகங்களுக்கு நேரடியாகவும் விற்கலாம். டீலர்கள் மூலமாகவும் விற்பனை செய்யலாம்.

## பைண்டிங் தொழில்

சாதாரண புத்தக பைண்டிங் மட்டுமல்ல; ஆஃப்/புல் தோல், ஆஃப்/ஃபுல் துணி, லெட்டர் ஹெட் போன்ற பலவகை பைண்டிங்குகளைக் கற்றுத் தர ஆறு மாதங்களுக்கான பயிற்சி மையம் இருக்கிறது. வருடம் முழுவதும் ஓரளவு சீரான டிமாண்ட் உள்ள தொழில் இது. துணியோ தோலோ- வாங்க வேண்டும் என்றால் வாடிக்கையாளரிடமிருந்தே அதற்கான முன் பணத்தைப் பெற்றுக் கொள்ள

முடியும். கத்தரிக்கோல், சுத்தியல், குத்தூசி, ஊசி, ட்வெய்ன் நூல் ஆகிய உபகரணங்களோடு காப்பர் சல்பேட் கரைசல், மைதா ஆகியவை கலந்த பசையும் தேவைப்படும்.



## மாசுக் கட்டுப்பாடு

குறிப்பிட்ட சில தொழில்கள் தங்கள் பல்வேறு கழிவுகளால் சுற்றுப்புறச் சூழலை மாசுபடுத்த அதிக வாய்ப்பு உண்டு. இந்த விஷயத்தில் சிறு தொழிலதிபர்களுக்குப் போதிய விழிப்புணர்ச்சியை உண்டாக்க, கீழ்க்கண்ட இடங்களில் (குறிப்பிட்ட தொழிற்சாலைகள் அந்தப் பகுதியில் அதிகமுண்டு என்பதால்) கழிவுகளைக் குறைப்பதற்கான மாசுக் கட்டுப்பாடு அலுவலகங்கள் நிறுவப்பட்டுள்ளது.

| தொழில்: | இடம்: |
|---|---|
| 1. உள்ளாடைகள் | கான்பூர் |
| 2. பேப்பர் மற்றும் பேப்பர் கூழ் | முஸாபர் நகர் |
| 3. எலக்ட்ரோ ப்ளேடிங் | லூதியானா |
| 4. பருத்தி மற்றும் சாயமேற்றுதல் | லூதியானா |
| 5. உள்ளாடை நெசவு | திருப்பூர் |
| 6. நெசவு | ஈரோடு |
| 7. மெட்டல் பினிஷிங் | சென்னை, மும்பை |
| 8. தோல் பதனிடுதல் | சென்னை, வாணியம்பாடி |
| 9. கைத்தறி | சூரத். |



## ஆல் தி பெஸ்ட்

பணம் பண்ணுவதை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு இந்தத் துறைகளில் நுழைய வேண்டாம். இந்த மனப்பக்குவம் இருந்தால் நீங்கள் செய்யும் தொழிலை உற்சாகமாக, ஆனந்தத்தோடு நடத்த முடியும். பணமும் தானாக வரும்.

சுயவேலை வாய்ப்பை – ஏன் உங்களால் பிறருக்கும் வேலை வாய்ப்பை வழங்கும் இந்தப் பாதையில் நாம் குறிப்பிட்ட மற்றும் குறிப்பிடாத பல இடர்ப்பாடுகள் உண்டு. ஆனால் அவற்றை பிரச்னைகளாகக் கருதாமல் சவாலாகக் கருதிச் செயல்பட்டாலே அவை கரைந்து விடும்.

'எதற்கு ரிஸ்க் எடுக்க வேண்டும்? அரசு அலுவலகங்களிலோ பெரும் நிறுவனங்களிலோ ஒரு வேலையில் இருந்தால் போதும். பாதுகாப்புக்குப் பாதுகாப்பு, பதவி உயர்வும் அவ்வப்போது கிடைத்து விரைவில் உயரே போய் விடலாம்' என்ற எண்ணத்தை வளர்த்துக் கொண்டுள்ள இளைஞர்களுக்கு ஒரு சின்ன எச்சரிக்கை. வருங்காலத்தில் இந்த நிலையில் பெரும் மாற்றங்கள் நேரும். அதற்கான அறிகுறிகள் இப்போதே தெரிய ஆரம்பித்து விட்டன.

ஆக, புலியின் வாலாக இருப்பதை விட, பூனையின் தலையாக இருப்பதே மேல் என்று முடிவெடுத்து செயல்பட உள்ளவர்களுக்கு, வாழ்த்துக்கள்.

**— ஜி.எஸ்.எஸ்.**

அட்டை வண்ணப்படம், படங்கள்:
**ஸ்ரீஹரி**

# ‘ஆழ்நிலை தியானம்’
## (தபால் வழி போதனா முறை)

என்றென்றும் இனிது வாழ எண்ணிய சித்துப் பெற இடறின்றி செல்வம் பெற இறப்பினையும் வென்று தீர இது ஒன்றே ஏற்ற வழி என்று சித்தர்கள் செய்து வைத்த சிறப்பு பயிற்சி இது. எளிதான இந்த பயிற்சியை எவரும், எவ்வயதினரும், பெண் ஆண் இருபாலரும் இடறின்றி செய்திடலாம்.

மூச்சுவழி பயிற்சியும், ராஜயோக வழிமுறையும், பக்தியோக தியான வழியும், எவரும் செய்ய ஏற்ற கர்மயோக, ஞானயோக வழிகளும் எளிதான வழிமுறையில் ஏற்றி வைத்த பயிற்சிகள். இந்த எளிதான பயிற்சிக்குள் – என்றென்றும் நோயின்றி வாழுகின்ற ஆரோக்கிய நிறைவும் – ஆயுள் பெருக்கும் – நிச்சயமாக 100 ஆண்டுக்கும் மேலாக வாழுகின்ற அபூர்வ நிலையும் – எவராலும் புகழப்படும் – எழுச்சி மிக்க அறிவாற்றலும் – நாளைய நாட்களை அப்படியே அளவையிட்டு கூறுகின்ற ஞான திருஷ்டியும், செல்வமேன்மை – சீரான உடற்கட்டு, நாடி வந்தாருக்கு நலம் செய்யும் அருளாற்றல் அத்தனையும் அட்டியின்றி அடைகின்ற அரிய வழிகள் அனைத்தும் போதிக்கும் அற்புத பயிற்சி இது.

எவர் ஒருவர் இவ்வுலகில் எந்தக் கவலையும் இன்றி நோய் நொடி துன்பமின்றி வாழுகின்ற விதி அமைப்பு இருக்கின்றதோ அவர் கண்ணில்தான் இந்த விளம்பரம் படும். ஆண்டவன் கட்டளைப்படி இதனை கண்டு உபதேசம் பெறும் வாய்ப்பினை பெற்றுவிடில் – நிச்சயமாக நிலையான நிகரற்ற வாழ்வதனை பெற்றிடுவது உறுதி. தவிர இந்த வழி பயிற்சிகளுக்கு – தடையாக இருக்கும் – மதுபானம் செய்தல், புகை பிடித்தல், பொடி, புகையிலை போடுதல் ஆகிய அருள் நிலையை கெடுக்கும் பழக்கமில்லாதவராக இருக்க வேண்டும். தினசரி பூஜை- தியானம் செய்யும் பழக்கம் உள்ளவராக இருக்க வேண்டும். இவ்வித அமைப்பு தன்மை உடையவராயின் – இப் பயிற்சியால் உலகில் அடைய முடியாதது எதுவுமில்லை. என்ற அளவிற்கு இந்த பயிற்சிகளால் – சித்துக்களை அடையலாம். அவ்வித விதி அமைப்பு இருப்பவர்கள் தான் இந்த உபதேசம் பெறுகின்ற வாய்ப்பை அடைவார்.

ஜாதக நகலுடன் 15.9.99 தேதிக்குள் மனுச் செய்து கொள்ளுங்கள். அத் தேதி தவறிடில் பின் வேண்டாம். ஏனெனில் கடவுள் அனுமதியில்லை என்று பொருள். உபதேசம் பெற்று உயரும் விதி அமைப்பு இருப்பின் தவறாமல் உரிய தேதிக்குள் மனுச் செய்யும் வாய்ப்பு ஏற்பட்டே தீரும். பெண்ணினத்தாரும் இதன் வழியாக பெரும் நலமீட்டி பெருமையுற் வாழலாம். ஆகவே அவர்களும் மனுச் செய்து கொள்ளலாம். சிறு வயதினர் செய்வரேல், சீரான தொழில், சிறப்பான விவாகம், சற்புத்திரர்களை பெற்றெடுத்தல், பெற்ற பிள்ளைகளால் பெருமையுறுதல் ஆகிய அரிய நலங்கள் யாவும் அட்டியின்றி நடந்தேறும். பெரியவர்கள் செய்து தொழில் வழி மேன்மை துயரற்ற வாழ்வு, தூண்டிய விளக்காக பெரும் சம்பாத்திய சாதனை என்று அனைத்து நலங்களும் அடைந்து தீருவர்.




பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்,

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா,**

யோகி, இராஜயோகப் பயிற்சியாளர்,

பிளாட் எண். 204, அண்ணாநகர்,

மதுரை - 625 020.

தொலைபேசி: 533412, 650576

பெண்ணே....
உணரத் தெரியும்
என்று என்
உணர்வுகள் சொன்னேன்.
சிரிக்கத் தெரியும்
என்று என்
சந்தோஷங்கள்
சொன்னேன்.
யோசிக்கத் தெரியும்
என்று என்
சோகங்கள் சொன்னேன்.
ரசிக்கத் தெரியும்
என்று என்
கவிதைகள் சொன்னேன்.
நேசிக்கத் தெரியும்
என்று என்
காதலையும் சொன்னேன்.
இன்றுதான் தெரிந்தது –
உனக்கு என்னை
மயக்க மட்டும்தான்
தெரியும் என்பது!

– சையத் அமுதன்

★

காற்றின் காலில்
சலங்கை
பறவைகளின் ஒலி

– ஹரணி.

★

வந்து விடாதே மழையே
வயிற்றில் பசியுடன்...
சாலை ஓவியன்

மெதுவாய் வீசுகாற்றே
செடியில் பூத்திருக்கு
முதல் பூ

– இரா. அ. தென்றல் நிலவன்

★

உழைப்பில் வாங்கினால்தான்...
செருப்பு கூட
உன்னைச் சுமப்பதில்
பெருமை கொள்ளும்!

– மன்னை சுபா சங்கர்

★

நாளையும் கேட்பான்
நம்பிக்கையோடு...
பிச்சைக்காரன்.

– வீ. சிவானந்தம்.

★

ஒரே கவிதையை
எத்தனை முறை வாசித்தும்
அலுக்கவே இல்லை ரயிலுக்கு
சிக்புக் சிக்புக்.

– சி.பி. செந்தில்குமார்.

சேரிக்குள் செண்ட் மணம்
வந்து கொண்டிருக்கிறார்
வேட்பாளர்.

யாருடைய காதலோ
சோகம் வழிந்தது.
சுண்டல் பொட்டலத்துக் கவிதை

கனவோரம் வந்து
கத்தத்தான் செய்கிறது
காணாமல் போன பூனை

– ரா. சுந்தரமூர்த்தி.

★

எப்போதும் சண்டையிருக்கும்
அழுகையும் விம்மலும்
ஏச்சும் பேச்சும்
இப்படி ஏதாவது
இருந்து கொண்டேயிருக்கும்.
ஆனாலும்,
ஒற்றுமையாய் இருக்கும்
குடும்பம் –
கவலைப்படுவதில் மட்டும்.

– அ. மாரீஸ்வரன்.

★

எல்லாம் சரிதான்
தவறெனச் சொல்லும்வரை
எல்லாம் தவறுதான்
சரியென ஏற்காத வரை
சரியெனப் படுவதில் தவறும்
தவறெனப் படுவதில் சரியும்
இருக்கிறதென்பதைப் போல்தான்
நமக்கான
வாழ்க்கை பற்றிய
விமர்சனங்களும்.

– திருவை குமரன்.



# கவிச்சக்கரவர்த்தி என்று சொல்லிக்கொள்ள வெட்கமாக இல்லையா?

**'கவிச்சக்கரவர்த்தி'யாகத் தன்னை அறிவித்துக் கொண்டிருக்கும் வி.ஜி. சந்தோஷத்தைச் சந்தித்தோம்.**

"உங்களுக்குக் கவிதை எழுத வேண்டும் என்ற ஆர்வம் எப்படி ஏற்பட்டது?"

"1993ம் வருடம், பாண்டிச்சேரியில் கம்பன் விழாவில் கலந்து கொண்டு விட்டு காரில் வரும்போதுதான் கவிதை உணர்வு எனக்குள் எழுந்தது. அப்போது 'வி.ஜி.பி உலகத் தமிழ்ச் சங்கம்' என்ற அமைப்பை ஏற்படுத்தி நான் தலைவராக இருந்தேன். அந்த அமைப்பின் தலைவராக இருக்க, என்னை அதற்குத் தகுதியுடையவனாக மாற்றிக் கொள்ள வேண்டும் என்கிற உணர்வும் சேர்ந்து கொண்டு என்னைக் கவிஞனாக மாற்றி விட்டன."

"உங்களுக்குக் கவிச் சக்கரவர்த்தி என்று பட்டம் கொடுத்தது யார்?"

"1993 - 94ம் ஆண்டில் மட்டும் சுமார் 5200 கவிதைகளுக்கு மேல் எழுதினேன். அவற்றையெல்லாம் படித்துப் பார்த்து, வெங்கடசுப்பிரமணியம், சிட்டிபாபு, மோகன் உள்ளிட்ட ஆறு பல்கலைக்கழகத் துணை வேந்தர்களைக் கொண்ட குழுதான் எனக்குக் கவிச்சக்கரவர்த்தி என்ற பட்டத்தைக் கொடுத்தது."

"கம்பனுக்குப் பிறகு கவிச் சக்கரவர்த்தி என்று யாரையும் தமிழகத்தில் குறிப்பிட்டது கிடையாது. அப்படியிருக்க 'கவிச் சக்கரவர்த்தி' என்று பெயருக்கு முன்னால் போட்டுக் கொள்ள நீங்கள் கொஞ்சமும் வெட்கப்படவில்லையா?"

"நான் எதற்காக வெட்கப்பட வேண்டும்? நன்கு படித்த கல்வியாளர்கள் கொடுத்த பட்டம் அது. நடிகர்களுக்கும், இலக்கியவாதிகளுக்கும் எவ்வளவோ பட்டங்கள் கொடுக்கப்படுகின்றன. சம்பந்தப்பட்டவர்கள் அதைப் போட்டுக் கொள்கிறார்களே! நீங்கள் எம்.ஏ, ஐ.ஏ.எஸ் என்று படித்துப் பட்டம் பெறுகிறீர்கள். அதைப் பெயருடன் போட்டுக் கொள்வதில்லையா! அது போலத்தான் இதுவும். எனக்குக் கிடைத்தப் பட்டத்தை நான்தானே போட்டுக் கொள்ள முடியும்?"

"அந்தப் பட்டத்துக்கு நீங்கள் தகுதி

ON THIS DAY THE NINTH OCTOBER 1994,
THE TITLE OF

"Kavi Chakravarthi"

HAS BEEN CONFERRED ON

Chevalier Dr. V.G. Santhosam



IN RECOGNITION AND APPRECIATION OF HIS SPONTANEOUS COMPOSING OF 5623 TAMIL POEMS ON VARIOUS TOPICS LIKE COUNTRY, CULTURE, PHILOSOPHY, NATURE, ENVIRONMENT, NATIONAL INTEGRATION, COMMUNAL HARMONY ETC. WITHIN A SHORT PERIOD OF 12 MONTHS ( COMMENCING FROM 2ND OCTOBER 93 TO 2ND OCTOBER 1994) BY HIS ADMIRERS IN A PUBLIC FUNCTION IN THE BENIGN PRESENCE OF THE FOLLOWING VICE CHANCELLORS.

Dr. B.P. Rajan
Vice Chancellor
Dr. M.G.R. University

Dr. C. Balasubramaniam
Former Vice Chancellor
Tanjore Tamil University

Dr. S.V. Chittibabu
Former Vice Chancellor
Annamalai University

Dr. S. Muthukumaran
Former Vice Chancellor
Trichy Bharathidasan University

Dr. K. Venkatasubramanian
Former Vice Chancellor
Pondicherry Central University

Dr. P.C. Mohan
Former Vice Chancellor
Annamalai University

• ஆறு துணை வேந்தர்கள் கையெழுத்திட்டு அளித்த பட்டம்!

யானவர் என்று கருதுகிறீர்களா?"

"நான் அகந்தையுடன் சொல்லவில்லை. கம்பர் 12000 பாடல்கள்தான் எழுதியிருக்கிறார். நான் இதுவரை 33000 பாடல்கள் எழுதியிருக்கிறேன். நூறு கவிஞர்களைக் கூட்டி வந்து என் எதிரில் உட்கார வையுங்கள். அவர்கள் என்னை எப்படி வேண்டுமானாலும் சோதனை செய்யட்டும்! என் திறமையை நான் நிரூபித்துக் காட்டுகிறேன்."

"நீங்கள் 'கவிச்சக்கரவர்த்தி' என்று போட்டுக் கொள்வதைப் பிற கவிஞர்கள் ஆட்சேபிக்கவில்லையா?"

"யார் ஆட்சேபிக்க முடியும்? வேண்டுமானால் எனக்குப் பின்புறம் நின்று கேலி பேசலாம். நான் கவிதைகளை எழுதத் துவங்கியபோது, பலர் கிண்டலடித்தார்கள். அதையெல்லாம் தாண்டித்தான் நான் வந்திருக்கிறேன். வர்த்தகத்தில் அடி மட்டத்திலிருந்து உயர்ந்திருக்கும் எனக்கு மற்றவர்களின் கேலியும், கிண்டலும் உரமாய் இருந்து வளர்ச்சிக்கு உதவியிருக்கின்றன."

"33000 கவிதைகள் எழுதியிருப்பதாகச் சொல்லுகிறீர்கள். பேர் சொல்லும்படி ஒரு கவிதைகூட அமையவில்லையே?"

"உங்களுக்குத் தெரியவில்லை என்றால் நான் என்ன செய்ய முடியும்? நாற்பதுக்கும் மேற்பட்ட என் கவிதைத் தொகுப்புகள் வந்திருக்கின்றன. 'அல்லாவின் அருட்காவியம்' 'இயேசு அருட்காவியம்' என்று கவிதை நடையில் இரு புத்தகங்கள் எழுதியிருக்கிறேன்" என்ற வி.ஜி. சந்தோஷம் 'இப்போது உங்கள் எதிரில் ஒரு கவிதை எழுதட்டுமா?' என்றார். எழுதியும் தந்தார். இதோ அவர் எழுதியது:

**அமைதி நிலவ வேண்டும்!**
**ஆனந்தமாக வாழ வேண்டும்!**
**எழில் வளத்தோடு இன்பமாய்**
**இருக்க வேண்டும்!**
**உறங்கும்போது அமைதி வேண்டும்!**
**உண்ணும்போது உளமகிழ்வு**
**வேண்டும்!**

**இருளகன்று ஒளி பிறக்க வேண்டும்!**
**ஞானஒளியோடு என்றும் வாழ**
**வேண்டும்!**
**நாட்டைக் காக்க வேண்டும்!**
**நல்லுணர்வும் வேண்டும்!**
**கார்கில் வெற்றிநடை**
**போட்டதுபோல்**
**காலமெலாம் வென்று காட்டிட**
**வேண்டும்!**

**உயிரும் உணர்வும் உள்ள வீரர்கள்**
**இங்கே!**
**ஒற்றுமையுணர்வு கொண்ட**
**எழுச்சிமிகு மக்கள் என்றும் உண்டு!**
**எல்லோருக்கும் ஆன்மீகத்தை அள்ளிக்**
**கொடுக்கும்**
**அருள் நிறைந்த நம்நாடு!**

**எழில் மிகு நம் தாய்த் திருநாட்டில்**
**அமைதியோடு வாழ வேண்டும்!**
**என்றும் ஆனந்தமாய் வாழ்ந்திட**
**வேண்டும்!**
**என்றும் எல்லோருக்கும் உதவிட**
**வேண்டும்!**

சந்திப்பு : **ஸ்ரீநிவாசன்**

○○ போன் அடித்தது. ஃபோனை வெறுப்புடன் பார்த்தாள்.

"ஹலோ!"

"ஹலோ! கற்பாட்ட பேச முடியுமா?"

"கற்பா இல்லை. என் பெயர் கற்பகம்."

"ஹாய் கற்பா! என்னை ஞாபகமிருக்கா? நான்தான் ஜோ பேசறேன். கிறிஸ்மஸ் பார்ட்டியில் பார்த்தோமே!" என்றான் ஜோ.

கற்பகத்திற்கு அந்தக் கிறிஸ்துமஸ் பார்ட்டியும் ஜோவும் ஞாபகத்திற்கு வந்தார்கள். அலுவலகத்தில் குடும்பத்தோடு கிறிஸ்துமஸ் பார்ட்டிக்கு அழைத்திருந்தார்கள். சத்யா, கற்பகத்தைக் கூட்டிக் கொண்டு போனான். அந்தக் கூட்டத்தையே ஜோதான் கலக்கிக் கொண்டிருந்தான். 'பில்லியர்ட்ஸ்' விளையாட்டை சிலர் விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஜோ சத்யாவை இழுத்துக் கொண்டு போய் விளையாட வைத்தான். சத்யாவிற்கோ விளையாடத் தெரியவில்லை. சினிமாவில் வில்லன்கள் மட்டுமே விளையாடிப் பார்த்த விளையாட்டு. சத்யா அடித்த பந்து குழியில் விழவில்லை. அதற்கு ஜோ ஆபாசமாக ஜோக் அடித்தான். கற்பகத்திற்கு ஜோவை சுத்தமாகப் பிடிக்கவில்லை.

கற்பகத்திடம் ஆபீஸ் செகரெட்டரி பேசிக் கொண்டிருந்தாள்.

"உங்க டிரஸ் ரொம்ப நல்லாயிருக்குது."

"தாங்க்யூ."

"எங்க வாங்கினீங்க?"

"அல்சமால்."

"அது எங்கே இருக்குது?"

அவள் கேட்டுக் கொண்டிருக்கும்போதே, ஜோ அவர்கள் பேச்சினுள் நுழைந்தான்.

"அதுவா 'ஸ்கொயர் ஒன்'ல இருக்குது" என்றான் ஜோ.

"இல்ல, மெட்ராஸ்ல இருக்குது" என்றாள் கடுப்பாக.

"உனக்கு இந்தியப் பழக்க வழக்கங்கள் தெரியுமா?" என்று ஜோ செக்ரட்ரியிடம் கேட்டான்.

செக்ரட்டரி தெரியாது என்றாள்.

"சத்யாக்கும் கற்பாக்கும் கல்யாணம் ஆகும்போது வயசென்ன தெரியுமா? சத்யாக்கு ஆறு. கற்பாக்கு மூணு வயசு."

"அப்படியா!"

"ஆமாம். அவங்க ரொம்ப சின்ன வயசிலேயே கல்யாணம்



# 3

# பணம், பொய், குற்றம்

பண்ணிடுவாங்க."

"நீங்க ஏதோ ஒரு தவறான புத்தகத்தைப் படிச்சிட்டு, இந்தியக் கலாசாரத்தைப் பற்றிப் பேசறீங்கன்னு நினைக்கிறேன்" என்று கற்பகம் சொல்லிக் கொண்டிருந்தது மூன்று ரவுண்ட் முடித்திருந்த ஜோவின் காதில் ஏறவேயில்லை. இவளுக்கு ஜோவை சுத்தமாகப் பிடிக்கவில்லை.

எனவே, ஜோ நன்றாகவே ஞாபகத்திலிருந்தான். இவன் எதற்கு இப்போது



ஃபோன் பண்ணுகிறான்?

"காலையில ஆபீஸ்லேர்ந்து பேச முடியவில்லை. பேசினால் என்னையும் சந்தேகப் படுவாங்க. ஆனால் ஒரு விஷயம். சத்யா இதைப் பண்ணியிருப்பான்னு நான் நம்பலை. இப்ப விஷயம் எந்த ஸ்டேஜ்ல இருக்குது?"

"ஒண்ணும் தெரியலை. காலையில சத்யா பேசியதோட சரி. பிறகு பேசவேயில்லை."

"சத்யா போலீஸ் கஸ்டடியில இருக்கான். அவன் என்ன பண்ண முடியும்? நீங்க வக்கிலைத் தொடர்பு கொண்டீங்களா?"

"எனக்கு எந்த வக்கிலைத் தெரியும்? நாடு விட்டு நாடு வந்திருக்கோம். என்ன தெரியுது?"

"ஓ.கே. எனக்கு ஒரு வக்கிலைத் தெரியும். அவரிடம் பேசி விட்டு, மீண்டும் நான் உங்களைத் தொடர்பு கொள்கிறேன்."

ஃபோனை வைத்து விட்டான். அடுத்த பத்தாவது நிமிடம் மீண்டும் பேசினான்.

"நாளை காலை எட்டரை மணிக்கு வரச் சொல்லியிருக்கிறார்."

**நா**ளை வக்கில் என்ன சொல்வாரோ? உடனே வெளியே கூட்டிட்டு வருவாரா? எதுவும் தெரியவில்லை. நல்ல வக்கிலாக இருக்க வேண்டும். எவ்வளவு பணம் செலவானாலும் பரவாயில்லை. தேவைப்பட்டால் பேங்க் லாக்கரிலிருக்கும் நகைகளை எடுத்துக் கொள்ளலாம். சே! என்ன இப்படி நினைக்கிறோம். உண்மை விரைவில் வெளியே வரும். சத்யா எப்படியும் வெளியே வந்து விடுவான். உடனே அவனுக்கு திருஷ்டி சுத்திப் போட வேண்டும். யாரோ கண் போட்டு விட்டார்கள். அவனுக்கு நல்ல சாப்பாடு பண்ணிப் போட வேண்டும். பாவம் என்ன சாப்பிட்டானோ? கற்பகம் ஏதேதோ யோசித்துக் கொண்டேயிருந்தாள். அழுகை வந்தது. கட்டுப்படுத்திக் கொண்டாள். அப்படியே தூங்கிப்

போனாள்.

மறுநாள் காலையில் சீக்கிரம் எழுந்து குளித்தாள். பசியில்லை. நேற்றும் ஒன்றும் சாப்பிடவில்லை. சீரியல் உணவு சாப்பிட்டாள். கொஞ்சம் தெம்பாகயிருந்தது. குழந்தையைக் கிளப்பினாள். 'சிமலாக்' பால் பவுடரை கரைத்து வைத்துக் கொண்டாள். குழந்தையைத் தூக்கிக் கொண்டாள்.

சொன்னபடி சரியாக எட்டே கால் மணிக்கு ஜோ வந்தான். இறங்கி குழந்தையுடன் கார் சீட்டை வாங்கி, காருக்குள் வைத்து பெல்ட்டை மாட்டினான். கற்பகம் முன்னால் ஏறிக் கொண்டாள். ஜோ பேசிக் கொண்டே ஓட்டினான்.

"இந்த மாதிரி அழகான குழந்தைகளைப் பார்க்கும்போது, கல்யாணம் பண்ணிக்க வேண்டும் போலிருக்கிறது" என்றான்.

"என்ன கல்யாணமா? இன்னும் உங்களுக்ுக் கல்யாணம் ஆகவில்லையா?" என்றாள் கற்பகம்.

"என்ன இப்படி கேட்கறீங்க? எனக்கு நாற்பது வயசுதான் ஆகுது."

"நாற்பது வயசா! எங்க ஊர்லன்னா இனி உங்களுக்குப் பொண்ணே கிடைக்காது."

"உங்க ஊருன்னாத்தான் எனக்கு ஆறு வயசிலேயே கல்யாணம் ஆகியிருக்குமே!" என்று சொல்லிச் சிரித்தான். இந்தத் தடவை கற்பகத்திற்குக் கோபம் வரவில்லை.

வக்கில் அலுவலகம் துப்புரவாகயிருந்தது. வரவேற்பறையில் சோபா செட் போட்டிருந்தார்கள். டெலிபோனில் பேசிக் கொண்டிருந்த செக்ரட்டரி, இவர்களை நிமிர்ந்து பார்த்து விசாரித்துவிட்டு, அவருடைய அறைக்கு அழைத்துச் சென்றாள். ஜோதான் முழு விவரங்களையும் சொன்னான். பொறுமையாகக் கேட்டுக் கொண்டார்.

"எனக்கு ஒரு ஆள் மேல சந்தேகமிருக்கு. ஆனால் என்னிடம் ஆதாரம் எதுவுமில்லை" என்று ஆரம்பித்தான் ஜோ.

"ஜோ, கொஞ்சம் கவனியுங்க. இந்த கேசைப் பொறுத்தமட்டில் சந்தர்ப்பச் சூழ்நிலை அடிப்படையிலானது. யார் பண்ணியிருப்பாங்க என்பது பற்றி நமக்குக் கவலையில்லை. சத்யா பண்ணவில்லை என்பதை நிரூபித்தால் போதுமானது. எத்தனை மணிக்கு உண்மையில சத்யா அலுவலகத்தை விட்டு வெளியே வந்தார்?"

"எட்டு மணிக்கு."

"ஒன்பது மணி வரை எங்கிருந்தார்?"

"வீட்லதானிருந்தார்."

"வேற யாராவது இருந்தாங்களா?"

"இல்லை. நான் மட்டும்தானிருந்தேன்" என்றாள் கற்பகம்.

"உங்க சாட்சியம் போதுமானதல்ல."

ஜோவிற்கு வக்கிலின் நோக்கம் புரிந்து விட்டது.

"சத்யா அந்த நேரத்தில் அலுவலகத்தில் இருக்கவில்லையென்று நிரூபித்தால் போதுமானது இல்லியா?"

"நீங்க சொல்வது சரி. இதை 'அலிபி' என்று சொல்லுவோம். சம்பவம் நடந்த போது வேறொரு இடத்தில் குற்றம் சாட்டப் பட்டுள்ளவர் இருந்தார் என்பதை ஆதார பூர்வமாக நிரூபித்தல். சத்யா வேறு இடத்திலிருந்தார் என்று நிரூபிக்க வேண்டும்."

கற்பகமும், ஜோவும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"இது ஒரு வழிமுறை. ரொம்ப பயப்பட வேண்டாம். யோசிப்போம். தேவையான விவரங்களை செக்ரட்டரியிடம் கொடுத்து விட்டுப் போங்க" என்றார் வக்கில்.

"நான் அவரைப் பார்க்கணுமே!" என்றாள் கற்பகம்.

"அதுக்கு வக்கிலே தேவையில்லை. நீங்களே போய்ப் பார்க்கலாம்" என்றார்.

சத்யாவைப் போய்ப் பார்த்தபோது மிகவும் சோர்ந்திருந்தான்.

கற்பகத்திற்குக் கண்கள் கலங்கின.

"சாப்பிட்டீங்களா? என்ன கொடுத்தாங்க?"

"ரொட்டி கொடுத்தே கொல்றான்."

"வீட்டிலேர்ந்து சாப்பாடு கொண்டு வரவா?"

"அதெல்லாம் விட மாட்டாங்க."

"டாக்டர் சர்டிபிகேட் கொடுத்தால், கொண்டு வரலாம்னு சொன்னாங்களே."

"இவர் உடம்புக்கு வத்தக் குழம்பும், அவியலும்தான் சாப்பிடணும்னு எந்த டாக்டரும் சர்டிபிகேட் தர மாட்டான்" என்று சிரித்தபடி சொல்லி நிலைமையை சகஜமாக்க முயன்றான்.

"பசி தாங்க மாட்டீங்களே!" என்று சொல்லி, கற்பகம் அழுகையை கட்டுப்படுத்துவது தெரிந்தது.

சத்யாவிற்கு கற்பகத்தைப் பார்க்கும் போது பாவமாகயிருந்தது. அவளுக்குத்

தைரியம் சொல்ல வேண்டுமென்று பேச ஆரம்பித்தான். அதற்குள் கற்பகம்,

"நீங்க தைரியமாயிருங்க. நான் காலையில வக்கீலைப் போய்ப் பார்த்தேன்" என்று சொன்னாள்.

"வக்கீலை நீயே போய்ப் பார்த்தியா?"

இல்லை. உங்க கூட வேலை பார்க்கும் ஜோதான் கூட்டிக் கொண்டு போனார்."

"அப்ப, இங்கேயும் ஜோதான் கூட்டிட்டு வந்திருக்கானா?"

"இல்லை. எதுக்கு எல்லாத்துக்கும் அடுத்தவங்களையே கஷ்டப்படுத்த வேண்டுமென்று, நானே விசாரிச்சு, டாக்சி பிடிச்சு வந்துட்டேன்."

"செலவுக்கு என்ன பண்றே?"

"பாங்க்லேர்ந்து ஐநூறு டாலர் எடுத்தேன். எதுக்கும் இருக்கட்டுமேன்னு, விசா கார்டுக்கு ஃபோன் பண்ணி லிமிட்டை ஐயாயிரம் டாலர் உயர்த்திக் கேட்டேன். நமக்கு நல்ல கிரடிட் ஹிஸ்டரி. உடனே குடுத்துட்டான்."

"நான் உள்ள இருக்கேன்னு சொன்னியா?"

"நான் என்ன அவ்வளவு முட்டாளா? உள்ள இருக்கற ஆளுக்கு எவனாவது கிரெடிட் லிமிட்டை ஏத்துவானா?" என்று கற்பகம் பேசிக் கொண்டே போனாள்.

சத்யா அவளை ஆச்சர்யமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"நீங்க தைரியமாயிருங்க. வக்கில் எல்லாம் பார்த்துப்பார்" என்று சொல்லி,

"கள்ளமில்லை நெஞ்சில்
கபடமில்லை
நாம் கண்ணீர் சிந்த ஒரு
நியாயமில்லை"

என்று சத்யா அடிக்கடி பாடும் பாடலை இவனுக்குச் சொல்லி விட்டுப் போனாள். அவள் போன திசையையே வெகு நேரம் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான்.

(தொடரும்)

"எனக்கு தேசிய விருது பற்றிய நியூஸ் தவணை முறையில்தான் வந்தது தெரியுமா?" என்று புதிர் போட்டார் பார்த்திபன். காரணம், விருதுச் செய்தி சென்னையில் பார்த்திபன் வீட்டுக்குத் தெரிவிக்கப்பட்ட சமயம், அவர் நாகர்கோவிலில் ஷூட்டிங்கில் இருந்தார்.

"தேசிய விருது என்றதும், சிறந்த நடிப்புக்காக எனக்குக் கிடைத்திருக்குமோ என்கிற நப்பாசை! அல்லது இளையராஜாவுக்குக் கொடுத்திருப்பார்களோ என்று நினைத்தேன்! கொஞ்ச நேரம் கழித்து, சிறந்த படத்துக்கான விருது என்று தகவல் சொன்னார்கள். வெடிகுண்டு பாதிப்பு பற்றிய பிரச்னையை வைத்து எடுத்திருப்பதால், தேசிய அளவில் சிறந்த படமாகத் தேர்ந்தெடுத்திருப்பார்கள் என்று நினைத்தேன். அப்புறம்தான், சிறந்த தமிழ்ப் படத்துக்கான விருது மட்டும் என்று தெரிந்தது. தேசிய விருது கிடைத்ததில் சந்தோஷம் என்றாலும், சிறந்த தமிழ்ப் படத்துக்கான விருது மட்டும்தான் என்பதில் கொஞ்சம் ஏமாற்றம்தான்!" என்றார் பார்த்திபன்.

பார்த்திபனுக்கு இன்னொரு மகிழ்ச்சி. ஹவுஸ் ஃபுல் படத்தின் தயாரிப்பாளர்கள் இவரது மூன்று குழந்தைகள்தாம்! எனவே சிறந்த தமிழ்ப் படத்துக்கான விருதை ஜனாதிபதியிடமிருந்து அவர்கள்தான் பெறுவார்கள்!

"அது எத்தனை மகிழ்ச்சி!" என்கிறார் துள்ளிக் குதிக்காத குறையாக.

"ஹவுஸ்ஃபுல் படம் ரெடியானதும் திரையுலகைச் சேர்ந்த சுமார் நூறு பேருக்குப் போட்டுக் காட்டினேன். தொண்ணூற்று ஒன்பது பேர் படம்பார்த்து விட்டு வெளியில் வந்தபோது உணர்ச்சிவசப்பட்டார்கள். மனசு கனத்துப் போயிருந்தது தெரிந்தது! அதுதான் என் படத்தின் லட்சியம் என்பது என் பாலிஸி. சினிமா என்பது வெறும் பொழுதுபோக்கு மட்டுமில்லை. படம் பார்த்து விட்டுப் போகிற ரசிகர்களின் மனத்தில் இலேசாகவாவது ஒரு பாதிப்பு ஏற்படுத்த வேண்டும் என்று நினைக்கிறேன்."

"புதிய பாதைக்கு விருது கிடைத்ததற்கும் இப்போது ஹவுஸ்ஃபுல்லுக்குக் கிடைத்



# 'சுமித் தமிழை' ஏற்காதீர்!

✉ தலையங்கம் அருமை! மூக்குடைபட்ட நவாஸ் இனிமேலாவது தீவிரவாதத்துக்கு முட்டுக்கட்டை போட வேண்டும்.
நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

✉ தமக்குத் தகுதி உண்டா, இல்லையா என்பதையே எண்ணாமல் அலையாய் அலைந்து சுயநலத் தொண்டாற்றிக் கொண்டிருக்கும் அம்மாவுக்கு அருகே அமைதியாகப் பொதுநல சேவையில் ஈடுபட்டிருக்கும் பிரியங்காவின் மீது மரியாதை ஏற்படுகின்றது. அரசியல் களங்கம் இந்தப் 'பூ'வின் மீது ஒட்டக் கூடாதென்பதே பலருடைய விருப்பம்!
தேவனாங்குறிச்சி, பா. வடிவேல்.

✉ சாபங்களை வரங்களாக மாற்றிக் கொள்ளும் சாமர்த்தியசாலிகளைப் பற்றிக் கேள்விப்பட்டதுண்டு. டி.ஆர். அவர்களின்



• 'ஹவுஸ்ஃபுல்'

தகற்கும் ஏதாவது வித்தியாசம் உணருகிறீர்களா?''

"1989 ஏப்ரல் பதிமூன்றாம் தேதி. புதிய பாதை ரிலீஸ் ஆன சமயம். நான் சபரி மலையில் நடந்து கொண்டிருக்கிறேன். மூணாவது நாள், படம் வெற்றி பெற்று தயாரிப்பாளர் வாங்கிக் கொடுத்த காருக்கு நான் சொந்தக்காரன். படத்தின் வெற்றி என்னை ரொம்பவே சந்தோஷப்படுத்தியது. வர்த்தகரீதியிலான வெற்றி. அதனால் எனக்குக் கிடைத்த பெயர், புகழ், வசதி காரணமாக, எனக்கு விருது கிடைத்தபோது, கூடுதல் சந்தோஷத்தை நான் உணரவில்லை. இனிமேல் இது போலத்தான் நாம் எடுக்கும் படங்கள் எல்லாம் வெற்றி பெறப் போகின்றன; விருதுகள் வரப்போகின்றன என்று என் மனதுக்குள்ளே ஒரு நினைப்பு வந்து விட்டது. ஆனால் அது நிகழவில்லை. ஒவ்வொரு முறை வெற்றி கை நழுவியபின், ஏன் தோற்றது என்று தெரிந்ததே தவிர, அதை வெற்றியாக்க முடியாமல் போய் விட்டது.

"திரைப்பட விழாக்களுக்கு நாம் மட்டும் வருகிறோம்; நம் படங்கள் வருவதில்லையே'' என்று ஒவ்வொரு வருடம் திரைப் பட விழாவுக்குப் போகிற போதும், என் நெஞ்சே என்னைச் சுடும். டெல்லியைச் சேர்ந்த தமிழ் அதிகாரியான சந்தானம் என்பவர், 'உங்களால் ஃபெஸ்டிவல் லெவலுக்குப் படங்கள் எடுக்க முடியும். ஆனால் எடுப்பதில்லையே! ஏன்?' என்பார். அது என் மனத்துக்குள் ஒரு வெறியை ஏற்படுத்தியது. அதற்கு ஏற்றாற்போல, போன வருடம் லட்டு மாதிரி வெடிகுண்டு சப்ஜெக்டும் கிடைத்தது. படம் பண்ணி முடித்தேன். விருதும் கிடைத்து விட்டது. புதிய பாதைக்குக் கிடைத்த விருதை விட, இப்போது கிடைத்திருப்பது என்னை அதிக சந்தோஷப்படுத்துகிறது. காரணம், காத்திருந்து காத்திருந்து பெற்றதல்லவா இது?''

"அடுத்து என்ன பண்ணுவதாக உத்தேசம்?''

''குழந்தைத் தொழிலாளர் பிரச்னை என்னை மிகவும் பாதிக்கிற விஷயம். அதுவும் ரோடில் போகிறபோது, சிக்னலில் காத்திருக்கும் தருணங்களில் சிறுவர்கள் பிச்சையெடுக்கிறார்களே... அது, யாரோ பெத்த குழந்தையை வாடகைக்கு வாங்கி வந்து, அதைக் காட்டிப் பிச்சை எடுக்கும் பெண்கள்... இதைப் பற்றிச் சொல்ல வேண்டும் என்று நினைக்கிறேன். எப்போது எப்படி என்று இப்போது ஐடியா இல்லை!''

சந்திப்பு : **பாரதி மௌலி**

---

பணம் பற்றிய கட்டுரை அத்தகைய மனிதரைப் பார்க்கும் வாய்ப்பை நல்கியது.

தூத்துக்குடி, கே. சுதர்ஷன்.

✉ கார்கில் கதைகள் சிறப்பாக இருந்தன. குறிப்பாக சிவ. முருகேசன் எழுதிய 'கார்கில்' சிறுகதை உள்ளத்தைத் தொடும்படியாக இருந்தது.

பெங்களூர் – 8, ப.சு. வைத்தியநாதன்.

✉ கார்கில் கதைகள் மூன்றும் நெகிழ, புகழ, மகிழவைத்தன.

கோவை, கீதாலக்ஷ்மி.

(தொடர்ச்சி, அடுத்தப் பக்கம்...)





**'ழ' என்கிற (முன்னாள்) சிறு பத்திரிகையின் இணையாசிரியரான கவிஞர் ராஜகோபாலனும், கவிஞர் ஞானக் கூத்தனும் விவாதிக்கிறார்கள் :**

**ராஜகோபாலன்:** முதலில் எது கவிதை? எந்த ஒரு பிரச்னைக்கும் தீர்வு கிடையாது! தீர்வு இருக்கறதா நெனச்சுக்கறோம். அப்படித் தீர்வுகளைச் சொல்லாம, ஒரு கவிஞர் கவிதைக்கான பொருளை அவருடைய குரலில் சொல்றார். அதுதான் கவிதை.

**ஞானக்கூத்தன் :** கரெக்ட். இந்தியா விடுதலை பெற்றால் போதும். நாடு சுபிட்சமாயிடும்னு நினைச்சோம். நடக்கலை. திராவிடக் கட்சிகள் ஆட்சிக்கு வந்தா பாலாறும் தேனாறும் ஓடும்னு நம்பினாங்க. அதுவும் நடக்கலை. ஆக, பிரச்னைக்குத் தீர்வே கிடையாது. பாரதியாருக்குப் பிறகும் பாரதிதாசனுக்குப் பிறகும் அவர்கள் பாடிய பிரச்னைகள் தொடர்கின்றன.

ஒரு மாற்றம் - இப்போது புத்தகங்களில் மட்டுமின்றி மேடைகளிலும் கவிதைகள் முழங்குகின்றன.

**ராஜகோபாலன்:** மேடைக்கு எதிரே உள்ளவங்க என்ன எதிர்பார்க்கறாங்களோ, அதைச் சொல்றதுதான் மேடைக் கவிதை. மேடைக் கவிதைகள் அச்சேறும்போது எடுபடலை. அப்துல் ரகுமானே ஒருமுறை சொல்லியிருக்கார். அவர் மேடையில் கவிதை வாசிச்சிட்டு வந்ததும் ஒரு ரசிகர், "நீங்க நல்லா பேசினீங்க சார்" என்று சொன்னாராம்.

**ஞானக்கூத்தன்:** அதே மாதிரி 'செவி வழி', 'வாய் மொழி' வழியா வந்த கவிதைகளும் எடுபடலை. ஆப்பிரிக்காவுல இருக்

---

**(...முன் பக்கத் தொடர்ச்சி)**

✉ தரைப்படையில் ஜமேதார் என்று எந்தப் பதவியும் கிடையாது. 1965-க்குப் பிறகு அது நாயக் சுபேதார் ஆகி விட்டது. அதேபோல் கர்கில் என்பதே சரியான உச்சரிப்பு.

தில்லைஸ்தானம், தி. சா. ராஜு.

✉ யான் கல்கியினைப் பல்லாண்டுகளாகப் படித்துப் பயன் அடைந்தவன். அப்போது – கல்கி அவர்கள் வாழ்ந்த காலத்தில் நல்ல தமிழில் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. இப்போது செல்வி சுமி எழுதும் கட்டுரைகளில் கருத்துக்கள் உள்ளன. எனினும், ஆங்கிலமும் வடமொழியும் கலந்தே எழுதுகின்றாள். 11.7.99 இதழில் காணப்படும் ஆங்கிலச் சொற்கள் : பேப்பர், பாலிடீஷியன்ஸ், கன்ட்ரி, ப்ராப்ளம், பைதவே, செகண்ட் லேங்வேஜ், பிரனவுன்ஸ், காலெட், ரீசண்ட், லைவ்ரிகார்டிங், ஹிடன்பியூட்டீஸ், சார்ஜ், கம்ப்ளெயிண்ட்.

தமிழ் வளர்த்த கல்கிக்கு விழாவெடுக்கும் வேளையில், கல்கியில் இப்படிப்பட்ட தமிழ் நடையை ஏற்பது முறையன்று. இனியேனும் அம்மையார் நல்ல தமிழ்நடையில் எழுத முயற்சிப்பாராக. இன்றியமையாத

**மேஜை வட்டமேஜை வட்டமேஜை வட்டமேஜை வட்டமேஜை வ**

கறவங்க அச்சு இயந்திரம் ஒரு ஐரோப்பிய சாதனம்னு நினைச்சாங்க. அதனால அதை அச்சுல ஏத்தாம வாய்மொழிலதான் சொல்லுவோம்னு கொஞ்ச காலம் பிடிவாதமா இருந்தாங்க. பின்னாளில் அச்சு ஏற்றும்போது அவை எடுபடலை.

**ராஜகோபாலன்:** மேடைக் கவிஞர்களைத் தெரிஞ்ச அளவிற்கு நல்ல கவிஞர்கள் தமிழ்ல அதிகம் தெரியாம போயிட்டாங்களே?

**ஞானக்கூத்தன்:** தமிழில் புதுக்கவிதை தோன்றி நாற்பது வருடங்கள்தான் ஆகின்றன. சி.சு. செல்லப்பா 'எழுத்து' பத்திரிகையை ஆரம்பிச்சார். அப்போதான் தமிழ்த் துறையைச் சார்ந்தவங்க, இடதுசாரி இயக்கங்களைச் சார்ந்தவங்கள்லாம் புதுக் கவிதை எழுத ஆரம்பிச்சாங்க. புதுக் கவிதைகள் பயன்பட்டன! ஆசிரியருக்கே கவிதை பிடிச்சாலும் பிரசுரம் பண்ண முடியாத சூழ்நிலை.

**ராஜகோபாலன்:** ரவீந்திரநாத் தாகூரோட முதல் கவிதையே கூட, சிகாகோவில் இருந்து வெளியான 'பொயட்ரி' என்கிற சிறு பத்திரிகைலதான் வெளியானது.

**ஞானக்கூத்தன்:** ஒரு காலத்துல சங்க இலக்கியம் இருந்தது. அப்புறம் பக்தி இலக்கியம் வந்தது. புராண இலக்கியம் வந்தது. கதைப் பாடல்கள் வந்தன. தேசிய கவிதை, மரபுக் கவிதை வந்தது. அதெல்லாம் இப்போ இல்லை. இப்போ புதுக்கவிதை வந்தாச்சு. பதம் பிரிக்கிற சிரமம் இல்லைன்றதாலே சுலபமா ரசிக்க ஆரம்பிச்சாங்க. அதனால் பத்திரிகையும் வர ஆரம்பிச்சது. நவீன சிந்தனைக்குப் பொருத்தமா நவீன ஓவியங்களோட! அகில

# கவிதையின் காலம் முடிந்து விட்டதா?

இந்திய அளவிலே உயர்ந்த கவிஞர்கள் இருக்காங்க இப்போ. கவிதையோட வீச்சை யாராலும் தடுத்து நிறுத்த முடியலை. 1959-ல் இருந்து நல்ல புதுக்கவிதைகள் தமிழ்ல வர ஆரம்பிச்சது.

நோயைப் பற்றிப் பாடக் கூடாது. அழுக்கைப் பற்றிப் பாடக் கூடாது. ஒழுக்கக் கேட்டைப் பாடக் கூடாதுன்னுல்லாம் சொல்வாங்க. அதையெல்லாம் புதுக்கவிதை உடைச்சு எறிஞ்சது. ஆனால் பத்திரிகைகளில் இந்தப் புதுக் கவிதைக்குத் தனியிடம் கிடைக்க நாளாயிற்று. அவற்றில் நாவல்களும், தொடர்கதைகளும்தான் பெரும்பாலும் இடம்பெற்றன. கால் பக்கம் காலி இடம் இருந்தால் அதை நிரப்புவதற்குக்

கடந்த நாற்பது ஆண்டுகளாக நவீன கவிதைகள் உருவாகியிருக்கின்றன. வேணுமென்றால் மரபுக் கவிதைகளின் காலம் சற்று இருளிலிருக்கிறது என்று சொல்லலாம். பொதுவா, கவிதைகளின் காலம் முடிந்து விட்டது என்று சொல்லமுடியாது. இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறது!

தொகுப்பு : **பாலு**
படம் : **சண்முகம்**

---

இடத்தில் பிற சொற்களைக் கலந்து எழுதினால் தவறில்லை.
திருக்கடவூர், அபிராமிதாசன்.

✉ இருதய அறுவைச் சிகிச்சை என்ற பணக்கார வைத்தியத்துக்கு, இலவசம் என்று வந்து விட்டதை நம்ப முடியவில்லை. தங்களின் நேரடி ரிப்போர்ட் நம்ப வைத்து விட்டது! எத்தனையெத்தனை ஏழைகள் பணமின்றி அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள வழியின்றி இருந்தும் இறந்தவர்களாகவே உள்ளனர்! அவர்கள் நெஞ்சில் பால்வார்த்தீர்கள்.
மதுரை – 9, இரா. கல்யாணசுந்தரம்.

✉ 'ஒரு மாணவியின் குமுறல்' என்கின்ற பெட்டிச் செய்தி கண்டேன். அது தமிழ்நாடு உயர்நிலைப் பள்ளி, மேனிலைப் பள்ளி தேர்வு வாரியத்தினால், மறு கூட்டலுக்கு விண்ணப்பிக்கின்ற அனைத்து மாணவருக்கும் ஏற்படும் நிலைதான். மறு கூட்டலின் போது பெரிய மாற்றம் கவனிக்கப்பட்டாலும், பெரும்பாலும் அதைத் தேர்வு வாரியம் வெளிக்காட்டுவதில்லை என்ற பேச்சு வேறு உலவுகிறது!
தக்கலை, லீலா இராம்.

நம் சினிமாக்கள் கவிதை போல இருக்கின்றனவோ, இல்லையோ! ரிலீஸுக்கு முன்னால் கிடைக்கிற சில ஸ்டில்கள் அப்படி இருக்கின்றன!



முகந்திருப்பிக் கொள்வதென்ன
வெட்கமா – என்னை
மூச்சு வாங்க வைப்பதென்ற
திட்டமா?



பூக்கின்ற பூவெல்லாம்
உனக்காகத்தான் – உன்
பூவுதட்டு சிரிப்பெல்லாம்
எனக்காகத்தான்.

• 'முதல்வன்'

ஒன்பது பேர் செல்லுகின்ற பேரணி – மக்கள் உள்ளத்திலே வெற்றிபெறும் கூட்டணி.

• 'ரோஜாவனம்'

நெஞ்சுக்குள்ளே உன் சிரிப்பை பூட்டி வைக்கிறேன் – உன் பூமுகத்தைப் படமெடுத்து மாட்டி வைக்கிறேன்.





படங்கள் உதவி : நிகில் முருகன்

# பூ முகத்தைப் படமெடுத்து மாட்டி வைக்கிறேன்!

# நீங்கள் கேட்டவை – தராசு

● ச. தங்கமணி, சத்திரப்பட்டி.

? பதிமூன்று பேர் மீது வழக்கு போட்டிருப்பதால் தொண்ணூறு லட்சம் பேர் உள்ள அ.தி.மு.க. ஊழல் கட்சியாகி விட முடியாது என்று நெடுஞ்செழியன் கூறுகிறாரே?

! 90 லட்சம் பேர் பாலாக இருந்தாலும் அந்த 13 பேரும் முக்கியத் தலைவர்கள் என்னும் போது பாலில் கலந்த விஷமல்லவா?

● அ. ஷண்முகசுந்தரம், பெங்களூர் – 72.

? சுவாமி இனி நிலக்கரி மற்றும் ஜெ.வுக்கு எதிரான வழக்குகளில் தீவிர ஆர்வம் காட்டுவாரா?

! புதிய வழக்குகளைக் கூடப் போடக்கூடும்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? தேவர் பேரவையிலிருந்து விலகி மலைச்சாமி 'அ.தி.மு.க.'வில் இணைந்துள்ளது பற்றி?

! மலையளவு மலைச்சாமியிடம் நமக்கிருந்த மதிப்பு கடுகளவாகச் சிறுத்துப் போயிற்று. ஒரு முன்னாள் நீதிபதி கூட சேர்ந்திருக்கிறார். ஆனால், அது நமக்கு வியப்புத் தரவில்லை.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? இந்திய வரலாற்றில் விலைவாசி மிகக் கடுமையாக உயர்ந்தது 13 மாத கால பா.ஜ.க. ஆட்சியில்தான் என்று புள்ளி விவரங்கள் கூறுவது பற்றி...?

! குறைந்ததும் பி.ஜே.பி. ஆட்சியில்தாங்க! அகவிலைப்படி குறைந்து, முதல் தேதியன்று வரவே குறைந்து போச்சுங்களே.

• 'காவிரி' போன்றவர்!

● பி.எம். வள்ளி, மதுரை – 16.

? மதுரை விமான நிலையத்துக்கு முத்துராமலிங்க தேவர் பெயர் சூட்ட வேண்டும் என மத்திய அரசுக்குக் கடிதம் எழுதியிருக்கிறாராமே சு. சுவாமி?

! பேருந்து போக்குவரத்துக் கழகப் பெயர்களுக்கு நேர்ந்த கதி நாளைக்கு விமான நிலையங்களின் பெயர்களுக்கும் நேராமல் இருந்தால் சரி.

● மல்லிகை மன்னன், மதுரை – 17.

? பார்த்திபனின் 'ஹவுஸ்ஃபுல்' திரைப் படத்திற்குச் சிறந்த தமிழ்ப் படத்துக்கான 'நேஷனல் அவார்ட்' கிடைத்திருப்பது குறித்து...?

! மகிழ்ச்சி. பார்த்திபன் எடுத்ததிலேயே அதுதான் நல்ல படம்.

● ஜெ. கண்ணன், சென்னை – 101.

? பொது இடங்களில் புகை பிடித்தால் ஐந்நூறு ரூபாய் அபராதம் என்று கேரள உயர்நீதி மன்றம் அறிவித்துள்ளதே?

! பாராட்டுதலுக்குரிய விஷயம்தான். ஆனாலும் பொடியை மூக்கில் வைத்து உறிஞ்சி விரலை உதறும்போது அந்தப் பொடி காற்றில் பறந்து வந்து பிறரின் கண்களில் விழுகிறதே... வெற்றிலை, பாக்கு, புகையிலையைப் போட்டுக் குதப்பிக் கொண்டு 'புளிச்'சென்று பொதுவிடங்களில் எச்சிலைத் துப்புகிறார்களே... இந்த ஆரோக்கியக் கேடுகளையும் தடைசெய்தால்தான் முழுமையாகப் பாராட்ட முடியும்.

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

## கார்கில்

? த.மா.கா., அ.தி.மு.க., கூட்டணியில் சேராதது எதைக் காட்டுகிறது சார்...?

! என்னயிருந்தாலும் தன்மான காங்கிரஸ் அல்லவா!

● ஆர். விஷாலி, அசூர் அஞ்சல்.

? கவிஞர் வைரமுத்துவுக்கு கலைஞர் கருணாநிதி 'கவிப் பேரரசு' பட்டம் வழங்கியிருப்பது கவியரசு கண்ணதாசனை மட்டம்


• அம்பேலாக அசத்தவர்!


• கடுகாய்ச் சிறுத்தவர்!


• மகிழ்ச்சியைத் தந்தவர்!


• பட்டங்களைக் கடந்தவர்!


• தலைமை ஏற்றவர்!

*தட்டுவது போல் உள்ளதே?*

! கண்ணதாசன் பட்டங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் என்று ஒருவேளை கலைஞர் கருதினாரோ என்னவோ!

● **இரா. கமலக்கண்ணன்,**
நாமகிரிப்பேட்டை.

*? த.மா.கா. சொந்தக் காலில் நிற்பது பலமா அல்லது பலவீனமா?*

! தார்மிகத்தில் பலம்; சாணக்கியத்தில் பலவீனம்!

● **க.நா. இராஜேஸ்வரன்,**
மொரட்டுப்பாளையம்.

*? பாகற்காய், நாவற்பழம், கத்திரிக்காய் போன்ற காய் பழங்களுக்குக் காப்புரிமை வாங்க அமெரிக்க நிறுவனமொன்று திட்டமிட்டுள்ளது பற்றி?*

! எச்சரிக்கையாய் இல்லாவிட்டால் இட்லி, தோசை, இடியாப்பம், இஞ்சிமொரப்பா, ஏன் ராமாயண- மகாபாரதத்துக்கும் கூட வாங்கி விடுவார்கள்! சர்வதேச அளவில் பேடன்ட் காப்பு அமைப்பு, விருப்பு - வெறுப்பின்றி ஆராய்ந்து செயல்படும் வகையில் அமைக்கப் படுவதும் அதில் முக்கிய நாடுகளுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்படுவதும் அவசியம்.

# வீரர்கள் வீரப்பனைப் பிடிக்கலாமே?

● **எம். கருணாகரன், சென்னை - 33.**

*? வாஜ்பாய் அரசு மெஜாரிடியை இழக்கும்படிச் செய்து தேர்தலுக்கு வழி வகுக்கக் காரணமாயிருந்த சு.சுவாமிக்கு ஜெயலலிதா ஒரு இடம் கூட ஒதுக்கித் தராததற்கு என்ன காரணம்?*

! ஆதரவு வாபசுக்குப் பிறகு நடக்கக்கூடியவை என சுவாமி வகுத்த திட்டங்கள் அம்பேல் ஆனதுதான்!

● **வ. வைகுண்டம், சென்னை - 61.**

*? சோனியா தலைமைப் பொறுப்பை ஏற்றதால் காங்கிரஸ் (இ) அதிக இடங்களை இத்தேர்தலில் கைப்பற்றுமா?*

! எங்கே! கர்நாடகா காங்கிரஸிலும் பிளவு! தென்மாநிலங்களில் காங்கிரஸுக்கு வாய்ப்பில்லை. மஹாராஷ்டிரா, பஞ்சாப் ஹோகயா! ஓரிரு மாநிலங்களை நம்பித்தான் சோனியா களத்தில் இறங்க முடியும்!

● **தி. சந்தானம், சென்னை - 35.** ❑

*? கார்கில் வெற்றியைத் தொடர்ந்து நமது சேனைகளை அனுப்பி வீரப்பனைப் பிடிக்கச் சொல்லலாமே? சூட்டோடு சூடாக வேலை நடக்கும். நல்ல தருணம் இல்லையா?*

! கார்கில் வெற்றிக்கு முன்பே கூட அதைச் செய்திருக்கலாம். ஆனால் அது கர்நாடக அரசு, தமிழக அரசு, மத்திய அரசு ஆகிய மூன்றும் சேர்ந்து எடுக்க வேண்டிய முடிவு. காவிரி பிரச்னை மாதிரி இதுவும் இழுத்தடிக்கும்.

● **எஸ். அப்துல் மஜீது, நாவினிப்பட்டி.**

*? பத்திரிகைகள் கூறும் கருத்துப்படிதான் பெரும்பாலான மக்கள் வோட்டுப் போடுவதாக நினைக்கிறீர்களா தராசு சார்?*

! அப்படியெல்லாம் ஒரு கர்வம் நமக்கு இல்லீங்க. ஆனா எது நாட்டுக்கு நல்லதுன்னு யோசிக்க சொல்றது பத்திரிகை தர்மமுங்க... பத்திரிகையே படிக்காதவங்களும், பல்வேறு பத்திரிகைகளில் பல்வேறு கருத்துக்களைப் படிக்கறவங்களும் இருக்கத்தானே செய்யறாங்க. கடைசியில் அவரவரும் யோசிச்சுத்தான் முடிவெடுக்க வேணும்.

● **வெ.ஆனந்தி,**
விழுப்புரம்.

*? கோபத்தை வெளிப்படுத்தாமல் மனத்தில் அடக்கி வைத்தால் ஆளை அழுக்கிவிடும் என்று கூறுகிறார்களே, இது உண்மையா...?*

! உண்மைதான். ஆனால், வெளிப்படுத்துவதில் யாரையும் புண்படுத்தாத ஆக்கபூர்வமான முறையை மேற்கொள்ளலாம். ஜப்பானிய ஃபேக்டரிகளில் முதலாளியின் முகத் தோற்றத்தை 'பஞ்சிங் பேக்' போல் அமைத்து குத்தி விட்டுப் போவார்களாம் தொழிலாளிகள்! ◉

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
தி. சந்தானம்,
6, ஐந்தாம் தெரு,
நந்தனம் விரிவு, சென்னை - 600 035.

# காதல் ஒரு கார்கில்

காதல் ஒரு வைகறை
காதல் ஒளிபரப்பும் எழு ஞாயிறு
காதல் கரைந்திடும் காகம்
கண் விழித்திட வைக்கும் கருமம்!
காதல் ஒரு கோலம்
வண்ணங்களின் வாண வேடிக்கை!
காதல் மணம் பரப்பும் மெல்லிய நல்காற்று!
காதல் ஒரு சிற்றாறு!
காலப்போக்கில் பாய்ந்து விரையும் காட்டாறு!
காதல் ஒரு கடல்
கரை சேரத் துடிக்கும் அலை!
காதல் ஒரு மணி மண்டபம்
காதல் எழுந்தார்க்கும் சிலை
காதல் ஒரு கார்கில்
கட்டவிழும் வீரத்தின் விளைநிலம்
காதல் ஒரு ஐ.நா.சபை
கட்டியக்காரர்கள் ஆதிக்கம் செய்ய முடியாத மாமன்றம்!
காதல் உணர்வுகளின் உறையுள்
காண முடியாது அங்கே வேற்றுமையின் விரக்தி.



— நாஞ்சில் மனோகரன்

# சர்க்கரை வியாதியா? இயலாமையா? நரம்பு தளர்ச்சியா?



## இனி கவலையே வேண்டாம்!

அடிக்கடி சிறுநீர் பிரிதல், பசி, தாகம், சோர்வு, எடை குறைதல், கால் குத்தல், மயக்கம், கண் பார்வை மங்குதல், நரம்பு தளர்ச்சி, புண் ஏற்பட்டால் ஆறாத நிலை போன்றன ஒருவருக்கு தெரிந்தால் சர்க்கரை வியாதி இருப்பதாக கொள்ளலாம். இவர்கள் தெய்வீக மூலிகைகளான வேப்பிலை, வில்வம், அருகம்புல், மாவிலை, நாவல், சிறுகுறிஞ்சான், ஆவாரம்பூ, நெல்லி போன்ற மூலிகைகளை பறித்து வந்து வெய்யிலில் உலர்த்தி பொடி செய்து தக்க அளவில் கலந்து வைத்துக் கொண்டு தினமும் காலை, மாலை உணவுக்கு அரை மணி நேரம் முன்பாக ஒரு ஸ்பூன் தூளை எடுத்து ஒரு டம்ளர் குடிதண்ணீரில் கலந்து சுமார் நான்கு மாதங்கள் உட்கொண்டு வந்தால் எவ்வித பக்க விளைவுகளும் இன்றி குணம் பெறலாம்.

**உணவு முறை** - இந் நோயாளிகள் மூன்று வேளை உணவில் இரு வேளை 3/4 வயிறு சாதாரண சைவ உணவு உட்கொள்ளலாம். உணவில் ராகி, கோதுமை, கம்பு, பார்லி, மக்காசோளம் போன்ற தானியங்களை அடிக்கடி உணவாக உட்கொள்ளவும். ஏதேனும் ஒரு வேளை உணவு இயற்கை உணவுகளான பப்பாளி, அன்னாசி, வெள்ளரி, தர்பூசணி, மா, கொய்யா, நாவல், கேரட், வெண்டை, வெள்ளிக்காய், பீர்க்காய், வெங்காயம், தக்காளி போன்றவைகளில் தினசரி உணவில் ஏதேனும் நான்கு வகைகளை உட்கொள்வது நல்லது. மேலும் காலை மாலை சுமார் 15 நிமிடம் நடத்தல், குனிந்து நிமிருதல், சைக்கிள் ஓட்டுதல், உட்கார்ந்து எழுதல், நீச்சல் போன்ற எளிய உடற்பயிற்சி செய்வதாலும் இந்நோயிலிருந்து விடுபடலாம். இது பற்றிய விரிவான ஆலோசனைக்கு நேரிலும் கடிதம் மூலமும் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி.

*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*


தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B.No:30, No:3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆: 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 5 to 8 — ✆: 6424285, 6427638


## 1999 வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மருந்தினைப் பெற முகாம் விவரம். (முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| | | | |
|---|---|---|---|
| 2-ந் தேதி | - வேலூர் (N.A.) | பிற்பகல் | 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (கங்கா), 16, ஆபீஸர்ஸ் லைன், ✆: 0416 : 223060 |
| 2-ந் தேதி | - காஞ்சிபுரம் | மாலை | 5 to 6 ராஜம் லாட்ஜ், (பஸ் நிலையம் அருகில்) 9, காமராஜர் தெரு, ✆: 04112 : 22519 |
| 1,3,5,10,11,16,21,27,28,29,30,31 தேதி | - சென்னை | காலை | 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ✆: 044 : 6424285, 6427638 |
| 4-ந் தேதி | - கடலூர் (S.A.Dt.) | காலை | 9 to 11 ஆற்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல், ✆: 04142 : 30707, 30717 |
| 4-ந் தேதி | - விழுப்புரம் | பிற்பகல் | 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ✆: 04146 : 22962 |
| 4-ந் தேதி | - திருவண்ணாமலை | மாலை | 5 to 6 ராதா லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்) ✆: 04175 : 22536 |
| 9-ந் தேதி | - பெங்களூர் | காலை | 11 to 12.30 ஹோட்டல் பிளாசா, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பே கவுடா ரோட், ✆: 2266374 |
| 9-ந் தேதி | - ஓசூர் | மாலை | 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ✆: 04344 : 22899 |
| 12-ந் தேதி | - சேலம் | காலை | 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ✆: 0427 : 449333 |
| 12-ந் தேதி | - ஈரோடு | மாலை | 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்போர்டு, பஸ் நிலையம் எதிரில், ✆: 0424 : 226611 / 12 / 13 / 14/15/16/17/18 |
| 13-ந் தேதி | - கோயம்புத்தூர் | காலை | 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ✆: 0422 : 302211, 302220 |
| 14-ந் தேதி | - மதுரை | காலை | 9 to 11 ஹோட்டல் கிராண்ட் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு, ✆: 0452 : 743941 |
| 14-ந் தேதி | - தஞ்சாவூர் | மாலை | 5 to 6 அசோகா லாட்ஜ், ✆: 04362 : 30021 / 30022 |
| 15-ந் தேதி | - திருச்சி | காலை | 9 to 11 ஹோட்டல் ஆனந்த் (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்), ✆: 0431 : 460545 |
| 15-ந் தேதி | - நாமக்கல் | பிற்பகல் | 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ✆: 04286 / 20433 |
| 22-ந் தேதி | - தர்மபுரி | காலை | 9 to 10 ஸ்ரீ பரமேஸ்வரா லாட்ஜ், ✆: 04342 : 60226 |
| 22-ந் தேதி | - திருப்பூர் | பிற்பகல் | 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ✆: 0421 / 740418 |
| 22-ந் தேதி | - உடுமலைபேட்டை | மாலை | 6 to 7 குறிஞ்சி லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்) ✆: 04252 : 24353 |
| 23-ந் தேதி | - திண்டுக்கல் | காலை | 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, (பஸ் நிலையம் பின்புறம்) ✆: 421056 |
| 23-ந் தேதி | - தூத்துக்குடி | மாலை | 5 to 6 ஹோட்டல் ஆல்வின், தேவர் புரம் ரோடு, ✆: 0461 : 327760 |
| 24-ந் தேதி | - திருநெல்வேலி | காலை | 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தார்த், மதுரை ரோடு, ✆: 0462 : 333312 |
| 24-ந் தேதி | - நாகர்கோவில் | பிற்பகல் | 2 to 3 ஹோட்டல் சரண்யா, மீனாட்சிபுரம், ✆: 04652 : 25669 |
| 25-ந் தேதி | - விருதுநகர் | காலை | 9 to 10 அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு, ✆: 04562 : 45537 |
| 25-ந் தேதி | - கரூர் | பிற்பகல் | 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார், ✆: 63763 |

**Dr.CKM — DIVINE HERBAL CENTRE**

தகவல் : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 25 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட் பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

**7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589**

**18 & 19-ந் தேதி - புது டெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆: 5717126, 5723651**

Registered with the Registrar of Newspaper of India under No. '04157' Registered No. TN / MS (C) M4332 /99' Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS (C) 101 ' Registered as a Newspaper in Srilanka
Supplement to the Kalki issue Dated 1.8.99

# பில்ராத்
## மருத்துவமனை

**முதன்முதலில்**
அதிநவீன லேசர் கருவியுடன்
**லேப்ராஸ்கோப்பி**
**சிகிச்சை**



## வயிறு
சம்பந்தப்பட்ட அனைத்து
நோய்களுக்கும் ஓர் முழுமையான
## தீர்வு

- அல்சர்
- அபண்டிஸைடிஸ்
- குடல் இறக்கம் (Hernia)
- பித்தப்பை கற்கள் (Gall Bladder Stones)
- கர்ப்பப்பை நோய்
- ஓவரியில் கட்டி எடுத்தல் (Ovarian Cyst Removal)
- குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை

சிறப்பு அம்சங்கள்
- ரத்த இழப்பு இல்லை
- தழும்பு ஏற்படாது
- உடனே பழைய நிலைக்குத் திரும்பலாம்

♦♦♦

## அறுவை இல்லா
# மூல வியாதி
## சிகிச்சை

சிறப்பு சிகிச்சை :
- லேசர் சிகிச்சை
- கிரையோ சிகிச்சை
- கதிர் வீச்சு சிகிச்சை



**BILLROTH HOSPITAL**
24 HOURS SERVICE

43, லட்சுமி டாக்கீஸ் சாலை, செனாய் நகர், சென்னை-600030. போன் : 6440020 / 6441777.

